# ஸ்வெட்டர் புதிதா?

## இல்லை — லக்ஸினால் சலவை செய்தது!

குளிர் காலத்துக்கான கம்பளித் துணிகள் — ஸ்வெட்டர்கள், கம்பளிச் சட்டைகள், ஸாக்ஸ், குழந்தைகளுக்கான அரிய ஆடைகள் — எல்லாமே மிக மென்மையானவை, குளிருக்கு அடக்கமானவை. அடிக்கடி அணியப்பட வேண்டியவை. தூய, மென்மையான லக்ஸ் தூள்களால் அவற்றை அடிக்கடி சலவை செய்யுங்கள். கம்பளி ஆடைகளின் வர்ணம், வடிவம், மென்மை யாவும் பாதிக்கப்படாத வண்ணம் எல்லா அழுக்குகளையும் அகற்றுவது லக்ஸ். உங்கள் கம்பளித் துணிகளின் ஆயுளை நீடிக்கச் செய்வதற்கு நீங்கள் அவற்றிற்கு அளிக்க வேண்டிய விசேஷப் பராமரிப்பு — லக்ஸ் பராமரிப்பே.




**அழகான ஆடைகளுக்கு நேடுங்காலம் புதுமைத் தோற்றம் அளித்துக் காப்பது லக்ஸ்**

LX. 140-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு

# கல்கி

## பொருளடக்கம்

டிசம்பர் 13, 1959



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




# விநயம்
# வேகம்
# திறமை









## அதுதான் பர்மா-ஷெல்லாரின் சேவை !

அன்பின் புன்சிரிப்பு...உதவி
புரியும் பாவனை...இவைகளும்
மற்றும் தங்களுக்குத் தேவை
யான குற்றேவல்களுக்கு
அளிக்கப்படும் சிறிய முக்கிய
மான உபசாரங்கள் நீங்கள்
பர்மா-ஷெல் ஸ்டேஷனுக்கு
வரும்போது உங்களை
வரவேற்று முக்கியமான வாடிக்
கைக்காரர்களாகப் பெருமித
மடையச் செய்வதின்
அறிகுறியாகும்.
"ஆயில் பரிசோதனை செய்யப்
படவேண்டுமா ?...பேட்டரி
எங்ஙனம் இருக்கிறது?"
"ரேடியேட்டரில் தண்ணீர்
போதுமான அளவு இருக்கிறது
டயர்களில் காற்று சரிவர
அடைக்கப்பட்டுள்ளது"
எல்லாம் நன்கு கவனிக்கப்பட்
டுள்ளது. உங்கள் காருக்கு
வேண்டிய தேவைகளை
அமைதியுடனும், திறமை
யுடனும், யாதொரு உபத்திர
வங்களுக்கு இடமளிக்காமல்
கச்சிதமாகக் கவனிக்கப்பட்
டுள்ளது.
நீங்கள் எப்பொழுதுமே அவசர
மான அலுவல்களில் ஈடுபட்டி
ருப்பீர்கள் என்பது எங்களுக்கு
நன்கு தெரியும். மோட்டார்
கார் அலுவல்கள் அதிக
முன்னவர்கள். ஆகையால்
தான் எங்கள் ஏஜெண்டுகளின்
பயிற்சியளிக்கப்பட்ட சிப்பந்தி
கள் உங்கள் காருக்கு வேண்டி
யதைப் பழுதின்றி, வேகமாக,
ஒழுங்கான முறையில் செய்து
கொடுக்கின்றனர்.



மலர் 19 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற | விகாரி ௵
இதழ் 20 | தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | கார்த்திகை 27உ

# ஏன் எதிர்க்கிறேன்?

ராஜாஜி

சுதந்திரக் கட்சியின்மீது வசைமாரி பொழிந்து விட்டால் அக்கட்சி எழுப்பியுள்ள சவாலுக்குப் பதில் சொன்னதாக ஆகிவிடாது. காங்கிரஸ் கட்சி உள்ளூழல் மலிந்து உளுத்துப் போய் விட்டதென்பதைக் காங்கிரஸ்காரர்களின் மனச்சாட்சியே சொல்லும். அரசாங்கத்தைப் புல்லுருவி போல் பற்றிக்கொண்டிருக்கிறது. காங்கிரஸ் கட்சியின் ஆடம்பரமும், செல்வாக்கும், சக்தியும் யாவும் அரசாங்கத்தின் அதிகாரத்தையும் செல்வாக்கையும் உறிஞ்சிக்கொண்ட செல்வாக்கும் சக்தியுமே யாகும். காங்கிரஸ் கட்சிக்குள் ஒழுக்கம் குன்றித் தனது ஆத்மிக பலத்தை முழுதும் இழந்து விட்டது.

1937 ஆம் ஆண்டில் மாகாண சுயாட்சி வந்தபோதும், அதற்குப் பின்னால் 1947 ஆம் ஆண்டில் மத்திய அரசாங்கத்தில் சுயாட்சி வந்தபோதும், காங்கிரஸ் தனது பலத்தையும் ஆதரவையும் அரசாங்கத்துக்கு அளித்து வலுவூட்டிற்று. ஆனால் இன்றைய நிலை வேறு. மத்திய அரசாங்கத்திலும், ராஜ்ய அரசாங்கங்களிலும் சர்க்காருடைய அதிகாரத்தைக் காங்கிரஸ் புல்லுருவி உறிஞ்சிப் பிழைத்து வருகிறது. இதுவன்றி, சர்க்காருக்கு அது கொடுப்பது ஒன்று மில்லை. சர்க்காரிடமிருந்து அது எல்லாவற்றையும் வாங்கிக் கொள்ளுகிறது. எல்லா வகையிலும் மக்கள் நலனுக்காகச் சர்க்கார் வேலை செய்ய வேண்டும் என்ற கொள்கையானது காங்கிரஸ் கட்சி சுரண்டிப் பிழைப்பதற்கு ஒரு தங்கச் சுரங்கம்போல் ஆகிவிட்டது.

சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குள்ள அதிகாரத்தை, பொறுப்பை ஏற்காமல் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் செலுத்துகின்றனர். நெருக்கடியான நிலைமை ஏற்பட்டால், உத்தியோகஸ்தர்கள் பொது மக்களின் பழிக்கு ஆளாகி வருகின்றனர். கட்சி அங்கத்தினர்களோ எவ்வித கண்டனத்துக்கும் உட்படாமல் எவ்வித விசாரணைக்கும் அகப்படாமல் பத்திரமாக எட்டி நிற்கின்றனர்.

1920 ஆம் ஆண்டிலும் அதற்குப் பின்னும் சந்தாவும் நிதியும் காங்கிரசுக்காக வசூலித்த தேசத்தொண்டர்கள் பலர் இறந்துவிட்டனர். அவர்கள் இப்போதெல்லாம் காங்கிரசுக்குச் "சுயேச்சை"யாக நிதி அளிக்கப்படும் கோலத்தைப் பார்த்தார்களானால் பிரமித்துப் போவார்கள். அந்தக் காலத்தில் அவர்கள் மேற்கொண்ட முறைகளுக்கும் கையாண்ட வழிகளுக்கும் இப்போது காங்கிரஸ் கட்சி மேற்கொண்டுள்ள முறைகளுக்கும் வழிகளுக்கும் வெகுதூரம். அந்தக் காலத்திய காங்கிரஸ், ஏழை மக்களின் அன்பையும் ஆதரவையும் பூரணமாகப் பெற்றிருந்தது. பணக்காரர்களும், செல்வாக்குள்ளவர்களும் காங்கிரஸிடம் மதிப்பு வைத்திருந்தனர். இப்போது நிலைமை வேறு. காங்கிரஸைக் கண்டால் பயம். அதனிடம் வெறுப்பு. சிறிது சொத்து உள்ள ஒவ்வொருவரும், தான் பிழைக்கத் தொழிலென்று ஒன்று வைத்திருப்பவர் ஒவ்வொருவரும், காங்கிரஸ் இந்தக் கதிக்கு வந்ததே என்று வருந்துகிறார்கள்.

ஆட்சி செலுத்தும் ஒரு அரசியல் கட்சி இம்மாதிரி அழுகிப் போய்விட்டால், அந்த ஆட்சியின் கீழ் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களின் சீலமும் நெறியும் எவ்வளவு காலத்துக்குத்தான் உறுதியாக நிற்க முடியும்? நெறி தவறாமலே அவர்கள் முடிந்த வரையில் நடத்து கொண்டிருந்தனர். ஆனால் திரும்பின திசையெல்லாம் தீமையே

கவ்விக்கொண்டுள்ள சூழ்நிலையில் அதிகாரிகளின் நெஞ்சுறுதிக்கும் ஒரு வரம்பு உண்டல்லவா? அவர்களுடைய உறுதி சீரழிந்து விட்டது. மக்களுக்கு அவர்களிடம் இருந்த மரியாதையும் இப்போது இல்லை.

எந்த சோஷலிஸ முறையைக் கொண்டு மக்களின் நலனையும் மக்களின் முன்னேற்றத்தையும்தோற்றுவிப்பதாகப் பிரதமர்ஜவாஹர்லால் நேரு சொல்லுகிறாரோ அந்த சோஷலிஸமானது மக்கள் சம்பாதிக்கும் செல்வமனைத்தையும் அரசாங்கமே உறிஞ்சி, அதைச் செலவு செய்யும் பொறுப்பைச் சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடம் ஒப்படைப்பதில்தான் போய் முடிகிறது. சர்க்கார் சிப்பந்திகளோ சுயநலமுள்ள காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் கண்காணிப்பிலும், அவர்களுடைய "மேலிடத்து"ச் சலுகைகளுக்கும் உட்பட்டு, தாங்கள் மேற்கொண்டுள்ள பணியை நடத்த வேண்டியிருக்கிறது. ஏற்கெனவே உத்தியோகஸ்தர்களுக்குத் தொழில் உற்பத்தி, விவசாயம், வியாபாரம் இவ்விஷயங்களில் திறமை போதாது. அவற்றில் அவர்களுக்குச் சொந்த அக்கறையும் கிடையாது. தனிப்பட்டவர்கள் சொந்த அக்கறையுடன் முயற்சி செய்து உற்பத்திப் பெருக்குக்கு வகை செய்வதற்குப் பதில் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் செய்யும்வேலைகள், நல்ல முறையில் முயன்றாலும்கூட, திருப்தி தரும் வகைகளில் செவ்வனே நடைபெறுவதில்லை.

தற்போதையக் காங்கிரஸ் கட்சியின் போக்கினால் உண்டான சூழ்நிலையில் அதிகாரிகள் தங்களுடைய காரியங்களை நடத்திக்கொண்டு போகிறார்கள். இதனால் பொது மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரிப் பணம், க்ஷேம நிதிப் பணம் முதலியவை பெரும்பாலும் வீண் விரயமாய்க் கொண்டிருப்பதில் ஆச்சரியமேயில்லை.

இம்மாதிரி மக்கள் பணம் தாறுமாறாக விரயமாவதைத் தடுக்கச் சுதந்திரக் கட்சி முற்பட்டிருக்கிறது. முற்றிலும் தடுக்க முடியாவிட்டாலும் தவறைக் குறைக்கவாவது முயற்சி செய்யும். நாட்டின் பத்திரிகைகள் சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு அளிப்பதைக் கண்டு நமது பிரதமருக்கு ஆத்திரம் வருகிறது. இந்த ஆதரவுக்கு விசித்திரமான வியாக்யானங்கள் செய்கிறார். கட்சியையும் தூற்றிப் பேசுகிறார்.

பிரதமருடைய கொள்கைகளையும் திட்டங்களையும் தாக்குவதன்றி அவரை நான் நேரடியாகவும் தாக்கிப் பேசுவதாக என்மீது குறை கூறுகிறார். அவ்வாறு ஒரு முறையாகிலும் நான் அவரைத்தனிப்பட்டமுறையில் தாக்கிப்பேசியதில்லை. உள்நாட்டு விவகாரங்களில் அவர் அனுஷ்டிக்கும் கொள்கைகளும் நடவடிக்கைகளுமே எனக்குப் பிடிக்காத விஷயங்கள். அவற்றைத்தான் நான் கண்டிக்கிறேன். சீனத் துராக்ரக விஷயத்தில் நாடு முழுதும் அவருக்கு எதிராக நின்ற போதும், அவருடைய அடிப்படைக் கொள்கையை நான் கண்டிக்கவில்லை. சீனா செய்த நம்பிக்கைத் துரோகத்துக்கு நம்முடைய பிரதமரைப் பொறுப்பாளியாக்கக் கூடாது என்று சொல்லி வருகிறேன். சீனத் தலைவர்களுடைய வார்த்தைகளை அவர் நம்பினார்; அவர்களோ நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டனர்; இதைத்தான் நான் வலியுறுத்தியிருக்கிறேன்.

அதிகாரிகளின் மேற்பார்வையிலும் நிர்வாகத்திலும் உற்பத்திப் பெருக்கு அதிகமாக உண்டாகும் என்று பிரதமர் நினைக்கிறார். நமது நாட்டின் நிலைமையை ஆராய்ந்தால் இந்த எண்ணம் தவறானது என்பது என் அபிப்பிராயம். சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பொறுப்பும் அதிகாரமும் பெருகப் பெருக நாடு சோர்வுற்று, மக்களின் ஆத்ம சக்தியும் குன்றிப் போகும் என்று சொல்லுகிறேன். நாட்டுக்கு இன்றியமையாத பயிர்த்தொழில் முதலிய பல்வேறு தொழில்களில் உற்பத்தி குறைந்துபோவதல்லாமல், லஞ்சமும் ஊழலும் அதிகரிக்கும் என்பது என்னுடைய பயம்.

ஏழை மக்களுக்கு இதன் மூலம் நன்மை செய்வதாகப் பிரதமர் எண்ணுகிறார். மூலதனம் உற்பத்தியாகும் ஊற்றுக்களையெல்லாம் வற்றச் செய்து நாட்டில் ஏழைகளுக்கு வேலையில்லாக் கொடுமையை அதிகரிக்கச் செய்யும் என்று நான் நினைக்கிறேன்.

மக்களுக்குத் தேசாபிமானமும் உழைப்பில் ஊக்கமும் ஊட்டி வருவதாக அவர் எண்ணுகிறார். அவர் கடைப்பிடித்து வரும் முறைகளின் பயனாக மக்கள் மேன்மேலும் சோம்பேறிகளாகவும், பணத்தாசை பிடித்தவர்களாகவும், தர்ம உணர்ச்சியும் ஆன்ம பலமும் குன்றியவர்களாகவும் ஆகின்றனர்.

அரசாங்கம் நம்முடையது, நம்மைப் பாதுகாப்பதற்கு ஏற்பட்ட ஒரு ஸ்தாபனம் என்ற உணர்ச்சி மக்களிடையே மறைந்து போய், அரசாங்கத்தையும் அரசாங்க உத்தியோகஸ்தர்களையும் கண்டு சாதாரண மக்கள் பயமும் வெறுப்பும் அடைந்து வருகிறார்கள்.

ஒரு கட்சிக்காரர்களின் சர்வாதிபத்யமும் யதேச்சாதிகாரமும் சாசுவத நிலை அடையாமல், உண்மை ஜனநாயகமும் பிரஜா சுதந்திரமும் இருக்க வேண்டும் என்று விரும்பினோமானால் சுதந்திரக் கட்சியை நன்றாகப் பலப்படுத்தி அமைப்பது அவசியம். பிரதமர் நேரு அவர்கள் இந்தக் கட்சியைப் பற்றி ஏசுவதையும் தாழ்த்திப் பேசுவதையும் பொருட்படுத்த வேண்டியதில்லை.

## நன்றி

சென்ற வாரத்துக் கல்கியில் என்னை அன்புடன் ஆசீர்வதித்த பெரியோர்களுக்கு என்னுடைய வணக்கம் பொருந்திய நன்றி.

என்னுடைய எண்பதாண்டு பூர்த்தியை யொட்டி எழுதி வரும் நண்பர்கள் அனைவருக்கும் மனமார்ந்த வந்தனம்.

சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# இலங்கையில் புதிய சூழ்நிலை

முந்தைய இலங்கைப் பிரதமர் பண்டார நாயகா காலமானதிலிருந்து இலங்கை மந்திரி சபையின் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. எதிர்க்கட்சிகள் யாவும் பார்லிமெண்ட் கலைக்கப்பட வேண்டும் என்றும் மீண்டும் தேர்தல் நடைபெற வேண்டும் என்றும் வற்புறுத்தி வந்தன. இதை யொட்டி, இருமுறை மந்திரி சபைமீது நம்பிக்கை யில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பட்டு, இரண்டுமுறையும் மயிரிழையில் இலங்கை மந்திரிசபை தப்பியிருக்கிறது! அரசாங்கக் கட்சியைச் சேர்ந்தவர்களே, சிலர் எதிர்க் கட்சியோடு சேர்ந்து கொண்டு வோட்டளித் திருந்தார்கள். நியமனப் பிரதிநிதிகள் ஆறு பேரும் கூட்டத்துக்குத் தவறாமல் வந்திருந்து சர்க்கார் சார்பில்வோட்டு அளித்தனர். அதன் விளைவாகச் சர்க்கார் ஒரு வோட்டு மெஜாரிட்டியில் இரண்டாவது முறை காப்பாற்றப் பட்டது.

நியமனப் பிரதிநிதிகள் பலத்தில் காப்பாற்றப்பட்ட அரசாங்கம் உண்மையில் மக்களின் பிரதிநிதித்துவம் பெற்ற அரசாங்கமாகாது என்ற கருத்தில் பிரதமர் தகநாயகா பார்லிமெண்டைக் கலைத்துவிட உத்தரவு பிறப்பிக்குமாறு கவர்னர்ஜெனரலை வேண்டிக் கொண்டது பாராட்டப்பட வேண்டிய விஷயம். திரு தகநாயகா, தமது சக மந்திரிகளையும் கலந்தாலோசியாது துணிகரமாக இதைச் செய்திருப்பது அவரது ஜனநாயகப் பண்பைக் காட்டுகிறது. எதிர்க் கட்சித் தலைவரான திரு என். எம். பெரைராவும் இலங்கைப் பிரதமரின் இந்த நடவடிக்கையை வரவேற்றிருக்கிறார்.

பார்லிமெண்டைக் கலைத்தவுடன் இலங்கை வானொலியில் பேசிய பிரதமர் தகநாயகா சிரிய முறையில் பேசியிருக்கிறார். திரு பண்டார நாயகா காலமானவுடன், அவர் வழக்கைப் பதிவு செய்தல், தூக்குத் தண்டனை மீண்டும் கொண்டு வருதல் ஆகிய பணிகள் செய்ய வேண்டியிருந்ததால் தாம் பதவியிலிருந்ததாக அடக்கமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார். நியாய உணர்ச்சியுள்ள எவரும் திரு தகநாயகாவைப் பாராட்டாமல் இருக்க மாட்டார்கள்!

தேர்தல் மார்ச்சு 19-ம் தேதி நடைபெறவிருக்கிறது. அதுவரையில் இப்பொழுதுள்ள மந்திரி சபையே சர்க்கார் நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்தும்.

இனி தேர்தல்வரை கட்சிப் பிரசாரங்களும், தீவிர உணர்ச்சிகளும் இலங்கையில் பெருக்கெடுக்கும். மந்திரி பதவியிலிருப்பவர்கள், சர்க்கார் செல்வாக்கைத் தங்கள் கட்சி நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது. இப்போது எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கைக்கு அப்போதுதான் பொருள் உண்டு. உண்மை ஜனநாயகம் நிலைநிறுத்தியதாகும்.

## எதிர்பாராத விளைவு!





# என்ன சேதி?



## எழுத்தாளர் மகாநாடு

டிசம்பர் மாதம் பொதுவாகச் சென்னையில் சங்கீத மழை பொழியும். 'சங்கீத சீசன்' என்றே சொல்லுவார்கள். இவ்வருஷம் இலக்கிய மழையும் பொழியப் போகிறது.

சென்னையில் அகில இந்திய எழுத்தாளர் மகாநாடு சிறப்பாக நடத்த ஏற்பாடாகி வருகிறது. இம்மாதம் 16-ம் தேதி தொடங்கி 20-ம் தேதி வரை இந்து நாட்கள் தேனும்பேட்டை எஸ்.ஐ.இ.டி. கல்லூரி மண்டபத்தில் நடைபெற விருக்கிறது. இம்மகா நாட்டில் பாரத நாடெங்கிலுமிருந்து பல்வேறு மொழிகளில் எழுதிப் பெயரும் புகழும் எடுத்த எழுத்தாளர்கள் வந்து கலந்து கொள்கிறார்கள். வெளிநாடுகளிலிருந்தும் புகழ் பெற்ற கவிஞர்கள், சிந்தனையாளர்கள், நாவலாசிரியர்கள், சிறுகதை ஆசிரியர்கள் ஆகியோர் வருகிறார்கள். இலக்கியத் துறையில் பல்வேறு அம்சங்கள் சம்பந்தமாகச் சர்ச்சைகள் நடத்திக் கருத்துப் பரிவர்த்தனை செய்து கொள்ளப் போகிறார்கள். இந்த மகாநாட்டுக்குப் பிரபல வங்க எழுத்தாளரான திரு தாராசங்கர் பானர்ஜி தலைமைவகிக்கிறார்.

## எச். டி. ராஜாவின் மறைவு

சாகசச் செயல்கள் புரிந்த தீரர் என்று பெயரெடுத்த எச். டி. ராஜா இறந்து மறைந்து போன செய்தி கேட்டுத் திடுக்கிடாதவர் கிடையாது. திரு எச். டி. ராஜா அந்த நாட்களில் பாரத நாட்டின் விடுதலைப் போரில் ஈடுபட்டு, எதிர்பாராத முறையில் பிரிட்டிஷ் ஆட்சியைப் பொருட்படுத்தாமல் நடந்து கொண்டு, பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பெருந் தொல்லையாக விளங்கினார்.

ஒரு காங்கிரஸ் மகாநாட்டின்போது காந்திஜிக்குஎதிராகவே ஒருதீர்மானம்கொண்டுவந்து காந்திஜியின் பேரன்புக்குப் பாத்திரமானார். இப்படி என்றும் எதிர் நீச்சல் போடுவதிலேயே தேர்ந்த திரு எச். டி. ராஜா சுதந்திரத்துக்குப் பின்னும் ஆளும் கட்சிக்கு எதிராகவே இருந்து கர்ஜனை புரிந்து வந்தார்.

தொழில்துறையில் இறங்கி 'வான்கார்டு' இன்ஷூரன்ஸ் கம்பெனியைத் துவக்கி, அதை முன்னுக்குக் கொண்டு வந்து பெரும் பணம் ஈட்டினார்.

அவை யெல்லாவற்றையும் விட நண்பர்களுக்கெல்லாம் உற்ற நண்பராய் உபகாரியாய் விளங்கினார். அவரை இழந்தது பொது வாழ்வுக்கு ஒரு நஷ்டந்தான்.

## பிரபல காங்கிரஸ்காரர்கள்

மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ஜபல்பூர் ஜில்லாவில் இரு தீவிர காங்கிரஸ்வாதிகளான திரு பிரிஜ்விலாஸ் சுக்லாவும், ஸ்ரீ ரண்தமண் சிங்கும் காங்கிரஸிலிருந்து விலகி விட்டார்கள் என்ற செய்தி வெளியாகியிருக்கிறது. இவர்கள் விலகுவதற்குக் காரணம் தெரிவித்து எழுதியுள்ள கடிதத்தில், மத்தியப் பிரதேச நிலச் சட்டமும், காங்கிரஸ் கொண்டு வரத் திட்டமிட்டிருக்கும் பலாத்கார கூட்டு விவசாயமும், காங்கிரஸின் தற்கால ஊழல் மலிந்த போக்குமே என்று விளக்கி எழுதியிருக்கிறார்கள்.

இவர்கள் இருவரும் பழங்காலக் காங்கிரஸ்காரர்கள். அவர்கள் ராஜினாமாச் செய்தது, மற்றக் காங்கிரஸ்காரர்களுக்கும் துணிவு அளித்திருக்கிறது. அவர்களையொட்டி ஆயிரக்கணக்கான காங்கிரஸ்காரர்கள் காங்கிரஸை விட்டு வெளியேறக் கூடும் என்று ஜபல்பூர் ஹிந்திப் பத்திரிகை கூறுகிறது. இவர்கள் விரைவில் சுதந்திரக் கட்சியில் சேர்ந்து தீவிரமாக வேலை செய்வார்கள் என்றும் செய்தி வெளியாகியிருக்கிறது.

சுதந்திரக் கட்சி பல்வேறு மாகாணங்களில் வேகமாக வளர்ந்து வருகிறது. உத்தரப் பிரதேசத்தில் தீவிர வேலை நடந்து வருவதாகவும், ஏராளமாக அங்கத்தினர்கள் சேர்ந்து வருவதாகவும் செய்திகள் வருகின்றன.

## புது மேயர்கள்



திரு எம். எஸ். அப்துல்காதர்



திரு என். எஸ். தேவராஜன்

திரு எம். எஸ். அப்துல் காதர் அவர்கள் மேயராகவும் திரு என். எஸ். தேவராஜன் உதவி மேயராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். இவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். இவர்கள் ஒரு கட்சியினரால் தேர்ந்தெடுக்கப்பட்ட போதிலும் நகராட்சி விஷயத்தில் கட்சி அரசியலுக்கு இடமில்லையாதலால், எல்லா வகுப்பினருக்கும் தம்மால் இயன்ற நற்பணிகள் புரிந்து சென்னை மக்களின் பேரன்புக்கு உரியவராவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். திரு அப்துல்காதர் இளைஞரா யிருப்பதாலும் அடக்கத்துடன் பேசிவருவதாலும் நகர மக்கள் அவரிடமிருந்து பதவி வரம்பான ஒரு ஆண்டில் செய்யக் கூடிய நல்லசேவைகளை எதிர்பார்க்க இடமுண்டு.

# போனசு ஆண்டு 1959

## இன்றே ‘இலாபத்துடன்கூடிய’ பாலிசியினைப் பெறுவீர்

### விரைவில் இரண்டாம் மதிப்பீடு

லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷனின் இரண்டாவது மதிப்பீடு 31 டிசம்பர் 1959ல் செய்யப்படும். மதிப்பீட்டு நாளில் உள்ள ‘இலாபத்துடன் கூடிய’ நடைமுறையில் இயங்கும், தகுதியான பாலிசிகள் அனைத்தும், அந்த மதிப்பீட்டின் விளைவாக வெளியாகின்ற இலாபத்தில் பங்குபெற உரிமை உள்ளவை ஆகும்.

31 டிசம்பர் 1957 அன்று வரை செய்யப்பட்ட கார்ப்பொரேஷனின் முதல் மதிப்பீடு காட்டிய மிகுதித்தொகை, கீழ்க்காணும் வீதப்படி கார்ப்பொரேஷன் வழங்கிய ‘இலாபத்துடன் கூடிய’ பாலிசிகளுக்கு போனசாக உதவப் போதுமானதாக இருந்தது.

| | |
|---|---|
| என்டௌமென்ட் காப்புறுதிகள் : (Endowment Assurances) | காப்புத்தொகை (Sum Assured) ஆயிரத்திற்கு ஆண்டுக்கு ரூ. 14 |
| முழு ஆயுள் காப்புறுதிகள் : (Whole Life Assurances) | காப்புத்தொகை ஆயிரத்திற்கு ஆண்டுக்கு ரூ. 17½ |

*முக்கியமானது :* 31 டிசம்பர் 1959 க்குள், குறைந்த தொகைக்குக் ‘கட்டி முடிப்பு’ச் செய்த பாலிசிகள் (Paid-up Policies) அல்லது காலாவதி யான பாலிசிகள் போனசு பெறத்தகுதி உடையனவாகா.

பாலிசியைப் பாதுகாப்பாக வைத்துப் பேணுங்கள். அப்போதைக்கு அப்போது செலுத்தவேண்டிய பிரீமியங்களைத் தப்பாது ஒழுங்காகச் செலுத்துங்கள். இரண்டாவது மதிப்பீட்டின் விளைவாகக் கிடைக்க இருக்கும் போனசுக்கு உங்கள் பாலிசியைத் தகுதியுள்ளதாக்க உறுதிகொண்டு வழிகாணுங்கள்.

*நினைவிலிறுத்துங்கள் 1959 போனசு ஆண்டு*



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**





## கோவையும் ஹோசூரும்

1. மகாநாட்டு மேடையின் தோற்றம்: ராஜாஜி, மகாநாட்டுத் தலைவர் பேராசிரியர் ரத்தினசாமி, வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு கே. சுந்தரம், திரு ஜி. என். ஸாம். 2. திரு கே. சுந்தரம் வரவேற்புரை வழங்குகிறார். 3. ஹோசூர் வர்த்தக சங்கத்தில் சேலம் வர்த்தகப் பிரமுகர் திரு எம். வி. கோபால் செட்டியார் பேசுகிறார். 4. கோவை மகாநாட்டைத் திரு பி. டி. ராஜன் துவக்கி வைத்தார். 5. ஹோசூர் வக்கீல்கள் சங்கக் கூட்டத்தில் திரு பி. சீதாராமய்யா ராஜாஜியை வரவேற்றுப் பேசுகிறார்.





# நிருபர் கூட்டத்தில் 'ஐக்'

காஸா சுப்பா ராவ்

அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவர் இந்தியாவுக்கு விஜயம் செய்கிறார் என்று பத்திரிகைகளில் படித்ததும் என் நினைவு நான்கு ஆண்டுகள் பின்னோக்கிச் சென்றது.

1955-ம் ஆண்டில் நான் அமெரிக்காவில் மூன்று மாத காலம் சுற்றுப்பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். ஒருசமயம் ஜனாதிபதி பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் நானும் பிரசன்னமாயிருந்தேன். தலைநகரில் ஜனாதிபதி இருக்கும்போதெல்லாம் ஒவ்வொரு புதன் கிழமையும் நிருபர்களுக்குப் பேட்டி அளிப்பது வழக்கம். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஜனாதிபதி எவ்வித ஆடம்பரமுமின்றியே ஹாலுக்குள் நுழைவார். அவரை வரவேற்க அங்கே கூடியிருந்த சுமார் 200 நிருபர்களும் மரியாதைக்காக எழுந்து நின்றுவிட்டு உடனே உட்கார்ந்து விட்டனர். ஜனாதிபதி மட்டும் நின்றுகொண்டுதானிருந்தார். பேட்டி முடியும் வரையில் நின்றுகொண்டேதான் பேசினார்.

இம்மாதிரி நிருபர்கள் எழுந்து நின்று மரியாதை செலுத்துவது ஜனாதிபதிக்கு மட்டும்தான். செக்ரடரி டல்லஸ் நடத்திய ஒரு பேட்டியில் எந்த நிருபரும் எழுந்திருக்கவில்லை. அவர் பாட்டுக்கு வந்தார், சொல்ல வேண்டியதைச் சொன்னார். கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொன்னார். சந்தடியின்றிப் போய் விட்டார் அவர்.

ஆனால் ஜனாதிபதி ஐஸன்ஹோவர் அவ்வாறு இல்லை. எதைப்பற்றியோ கவலை கொள்ளுவது போலவோ எதையோ மறைத்துப் பேசுவது போலவோ அவர் தோன்றவே இல்லை. எந்தக் கேள்வி கேட்டாலும் மிக அமைதியாகவே, நிதானத்துடனேயே பதிலளித்தார். சில சமயம் உற்சாகத்துடன் காரசாரமாகப் பதில் அளித்தாலும், தம் நிலை பிறழ்ந்தோ, கோப தாபத்துடனோ பேசியதில்லை. தமக்குத் தெரியாத எதைப் பற்றியாவது கேள்வி கேட்கப் பட்டால், தயங்காமல், "எனக்குத் தெரியவில்லை. விசாரித்து அடுத்த பேட்டியில் பதில் அளிக்கிறேன்" என்று ஒளிவு மறைவின்றிச் சொல்லுவார். புதிய விஷயம் ஏதாவது சொல்லப்பட்டால், அவ்வாறே அதையும் கவனித்து ஆவன செய்கிறேன் என்றும் தாராளமாகச் சொல்லுவார். ஒரு புதிய விஷயத்தைத் தமக்கு எடுத்துச் சொன்னதற்கு நிருபர்களுக்கு நன்றி தெரிவிப்பார்.

அவருடைய பேட்டியைக் கண்ட எனக்கு "இவரிடம் ரகசியம் ஒன்றுமே இல்லை. எதையும் ஒளிவு மறைவின்றிச் சொல்கிறார்" என்ற எண்ணம்தான் உண்டாயிற்று. நட்பும் சகஜபாவமும் நிறைந்து, வெளித் தோற்றத்துக்கும் உள்பாவனைகளுக்கும் வித்தியாசமின்றி, தமது இயற்கை சுபாவத்துடனேயே ஜனாதிபதி அந்தப் பேட்டி நேரம் முழுவதும் நடந்து கொண்டார்.

இதைக் கண்டபின் ஐஸன்ஹோவர் ஒரு உண்மையுள்ள மனிதர் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. அவருடைய செல்வாக்குக்கும் மக்கள் அவரிடம் வைத்துள்ள அபிமானத்துக்கும் அவருடைய நேர்மைகுணம் தான் காரணம். இப்போதுள்ள தலைவர்களில் அமெரிக்க மக்களின் அன்பை அதிகமாகக் கவர்ந்துள்ளவர் ஐஸன்ஹோவர். அவருடைய நாணயத்துக்கும் நேர்மைக்கும் அரசியலில் அவருக்கு எதிராக உள்ளவர்கள் கூடச் சான்று கூறுகின்றனர். அவருக்கு எதிரிகள் இருக்க முடியாது என்றுதான் என் அபிப்பிராயம்.

உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மாது அவரைப் பற்றிக் கூறியது எனக்குக் கவனத்துக்கு வருகிறது. "என்னுடைய கணவர் உயிருடன் இருந்தபோது 'டெமொக்ராட்' கட்சிப் பற்று உள்ளவளாக இருந்தேன். இப்பொழுது ஐஸன்ஹோவருக்காக நான் 'ரிபப்ளிக்' கட்சியில் சேர்ந்து விட்டேன்" என்று அந்த அம்மை சொன்னார். ஒரு நல்ல மனிதருடைய செல்வாக்கு எப்படிமக்களைவசப் படுத்துகிறது என்பதைக் கண்டு வியந்தேன்.

## கல்கி திருச்சி மாவட்டச் சிறுகதைப்போட்டி

ரூ. 200 முதற் பரிசு பெற்ற கதை 20-12-59 கல்கி இதழில் பிரசுரமாகிறது

பரிசு பெற்றவர்: திரு வி. சுவாமிநாதன் (கிரிவாஸன்)

8/199, ஸ்மிருதி, ரோட் நம்பர் 16, சயான் (கிழக்கு) பம்பாய் - 22

ரூ. 100 இரண்டாவது பரிசு பெற்ற கதை 27-12-59 கல்கி இதழில் வெளியாகிறது

பரிசு பெற்றவர்: டி. ராமன் (பிலஹரி)

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கு, வடக்கு பீச் ரோட், சென்னை

அடுத்த மாவட்டப் போட்டி: மதுரை




**அப்பு :** ஒரு அதிசய சமாசாரம், கேளும்! நாடெல்லாம் இப்போ மழையும் வெள்ளமும், அமர்க்களப்படுகிறதல்லவா? ஆனால் ஒரு புயல் அடிக்காமல், ஒரு கருமேகம் சூழாமல், எண்ணி ஒரு சொட்டு மழைத் தூறல் கூடப் போடாமல் வெள்ளம் பெருக்கெடுத்தது நெல்லையிலே.

**கோவிந்தசாமி :** ஒரே ஆச்சரியமா யிருக்கிறதே!

**அப்பு :** ஆம், ராஜாஜி அவர்கள், நெல்லைக்கு விஜயம் செய்தாரல்லவா? அவரது பிரசங்கத்தைக் கேட்க, மாலையில் நடந்த பொதுக் கூட்டத்துக்குத்தான் மக்கள் அப்படி வெள்ளப் பெருக்கெடுத்துக் கூடியிருந்தார்கள். கண்ணுக் கெட்டியவரை அந்தப் பாளையங்கோட்டை மைதானம் ஒரே ஜன சமுத்திரமாகத் தோற்றமளித்தது.

**கோவி :** நேருவைப் பார்க்கக் கூடுமே அந்த மாதிரி கூட்டமா?

**அப்பு :** அட! நீர் ஒண்ணு! நேருவுக்கும் கூடாத கூட்டமய்யா அது! இதற்குக் காரணம் என்ன என்பதை சுதந்திரக் கட்சித் தலைவர் ஸ்ரீ என். ஜி. ரங்கா அவர்கள் வெகு தெளிவாகச் சொல்லிவிட்டார்கள். இவ்வளவு பெரிய அளவில் பொது மக்கள் நேருஜியின் கூட்டத்துக்கு வருவதுதான் எங்கும் வழக்கம். ஆனால் ராஜாஜி பேசும் கூட்டத்துக்கு இவ்வளவு பெரிய அளவில் மக்கள் கூடியிருப்பதன் மர்மம் என்ன? பார்க்கப் போனால், ராஜாஜி எந்தப் பதவியும் வகிக்கவில்லை; தமக்குப் பதவியோ அதிகாரமோ வேண்டாம் என்றும் சொல்கிறார். ராஜாஜி வெகு தூரத்தில் வட இந்தியாவிலிருந்தும் வரவில்லை. அவர் உங்கள் மத்தியில்தான் தமிழ் நாட்டில் இருக்கிறார். அப்படியிருந்தும் இவ்வளவு பெரிய ஜனசமுத்திரம் இங்கு கூடி விட்டதற்கு என்ன காரணம் என்றால் வேறொன்றுமில்லை; காங்கிரஸ் ஆட்சியில் மக்களுக்கு ஏற்பட்டுவிட்ட வெறுப்பை வெளிக் காட்டவே, இந்தச் சுதந்திரக் கட்சிக் கூட்டத்துக்கு இவ்வளவு திரளாகக் கூடியிருக்கிறார்கள் என்று அவர் கூறியதும், நீண்ட கரகோஷத்தின் மூலம் கூடியிருந்த நெல்லை மக்கள் அதை ஆமோதித்தனர்.


திரு ராமசாமிக் கோனார்

**கோவி :** நம்ம சுதந்திரக் கட்சி மாகாண காரியதரிசி திரு எஸ். எஸ். மாரிசாமி, நெல்லை ஜில்லா சுதந்திரக் கட்சித் தலைவர் அட்வொகேட் ஸ்ரீ எஸ். ராமசாமிக் கோனார் அவர்கள் இன்னும் பலரும் பேசினதாகப் பேப்பரிலே பார்த்தேன்.

**அப்பு :** நேரிலேயே போய்ப் பார்த்துவிட்டு வந்த நான் சொல்வது உமக்குப் பெரிதாகத் தோன்றவில்லையோ? பேப்பரிலே பார்த்தேன் என்று கூறுகிறீரே!

**கோவி :** தப்பு, தப்பு!

**அப்பு :** தேசத்திலே சுதந்திரக் கட்சி தோன்றியது முதல் மக்கள் புத்துணர்வு பெற்று விட்டார்கள். இனி தலை நிமிர்ந்து நடப்போம். தேசத்தின் தன்மானத்தைக் காப்போம்.

**கோவி :** ஆனால் உலக நாடுகளில் நம் மானம் போகுது! நாம் கடன் வாங்காத நாடே உலகத்தில் இல்லை!

**அப்பு :** கடன் வாங்குவதே ஒரு கலை! காங்கிரஸ் ஆட்சி, இந்தக் கலையில் நன்றாகத் தேர்ந்து விட்டது.

**கோவி :** கடன், கடன், கடன். அமெரிக்காவிலிருந்து ஜப்பான் வரை எங்கும் கடன். யுத்தத்திலே தோற்று, சகலத்தையும் இழந்து இப்போதுதான் தலை தூக்குகிறது ஜெர்மனியும், ஜப்பானும்! அதனிடத்திலே கூடக் கைமாத்துக் கடன் வாங்கி விட்டது காங்கிரஸ் ஆட்சி!

**அப்பு :** வாங்கின கடனுக்கு வட்டி கொடுக்க இப்போது மறுபடியும் கடன் வாங்கப்போகிறோம்....

**கோவி :** திருப்பித் தர முடியவில்லையென்றால் என்ன செய்வார்கள்?

**அப்பு :** தனி மனிதனாயிருந்தால் வாசலில் வந்து கூச்சல் போட்டு விட்டுப் போய் விடுவான். ஆனால், ஒரு சர்க்கார், வாங்கிய கடனைத் திருப்பித் தராவிட்டால், எத்தனை தலைமுறைகளானாலும் சரி, விட மாட்டார்கள்.

**கோவி :** நாமத்தைச் சாத்திவிட்டுப் போய் விட முடியாது என்கிறீர்கள்!

**அப்பு :** முடியாது. இதைப் பற்றி மறு நாள் ராஜபாளையத்தில் நடந்த ராமநாத

புரம் மாவட்டம் சுதந்திரக் கட்சி மகா நாட்டிலே ராஜாஜி குறிப்பிட்டார். ''அமெரிக்காவினிடமிருந்து ஏராளமாகக் கடன் வாங்கியிருக்கிறோம். இதை எப்படித் திருப்பிக் கொடுப்போம்? ரூபாய் நோட்டுக்களை அச்சடித்துக் கொடுத்தால் அமெரிக்கா வாங்கிக் கொள்ளாது. பண்டங்களாகக் கொடு என்பார்கள். அமெரிக்காவுக்குத் தேவையான பண்டங்களை நாம் உற்பத்தி செய்யவில்லை. அவர்களிடம் இல்லாத பொருள்கள் எவை? ஆகையால் வேறு வழியில்லாமல் தங்கம் முதலிய விலை உயர்ந்த பொருள்களைத்தான் கொடுக்க நேரும். நோட்டு அச்சடிக்கும் வேகத்தில், விலைவாசி உயரும் வேகத்தில் ஏழைகள் தங்களிடமுள்ள திருகாணி போன்ற சிறு நகைகளையும் விற்று வருகிறார்கள். அரசாங்கம் அதிக விலை கொடுத்து மக்களிடமிருந்து தங்கத்தை வாங்கித்தான் கடன் அடைக்க முயலவேண்டியிருக்கும். இதுவும் முடியாதபோது நாட்டில் பெரிய பொருளாதார முறிவு ஏற்படும்'' என்றார்கள்.


திரு சா. கணேசன்

**கோவி:** என்னிடம் ஒரு பொட்டுத் தங்கமும் கிடையாது. மனம் மட்டும்தான் தங்கமாயிருப்பதாக நீர் சொல்லுகிறீர்.

**அப்பு:** இதனால்தான் காங்கிரஸ்காரர்களும் பொது ஜனங்களின் தங்கமான மனத்தையே பறிக்க முயல்கிறார்கள் இந்தக் கடைசி நேரத்திலே...

**கோவி:** அருப்புக்கோட்டையில் அதுவும் முடியாதென்று அவர்கள் அறிந்திருக்க வேண்டும்.

**அப்பு:** ராஜபாளையம் மகாநாட்டிலே திரு சா. கணேசன், திரு டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி, திரு பாலகுருவா ரெட்டியார் இம் மூவரும் காங்கிரஸ் பித்தலாட்டங்களை விளக்கி அற்புதமாகச் சொற்பொழிவாற்றினார்கள். திரு சா. கணேசன் அவர்கள், கம்ப ராமாயணத்திலின்று செய்யுள் ஒன்றை மேற்கோள் காட்டி, 'மறம் மடியும் காலம் வந்துவிட்டது. ஏனெனில் அறம் தோன்றிவிட்டது!' என்று கூறினர். திரு டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி, அரசாங்கம் போட்டுவரும் திட்டங்களின் போக்கை விளக்கி ஒன்றிரண்டு 'சாம்பிள்'களை விவரித்தார். திரு பாலகுருவா ரெட்டியார் அவர்கள் அருப்புக்கோட்டைத் தேர்தலில் காங்கிரஸ் கடைப்பிடித்திருந்த திருகுதாலங்களை விவரமாக எடுத்துக்காட்டி, அதன் அண்டப் புளுகுகளை விளக்க, உதாரணம் ஒன்றும் கூறினர். ஓர் இடத்தில் வாய்க்கால் வெட்டாமலே, அங்கு நீர்ப்பாசனத் திட்டத்தை நிறைவேற்றியிருப்பதாகக் காங்கிரஸ் அரசாங்கம் அறிக்கை விட்டதாம். இது தெரிந்து ஆட்சேபணைகள் செய்தபோது, அச்சுப் பிழையால் அறிக்கையில் தவறு ஏற்பட்டு விட்டது என்று சமாதானம் கூறினராம் சம்பந்தப்பட்ட மந்திரி. இதை அறிவித்துவிட்டு, திரு பாலகுருவா ரெட்டியார் ''கேளுங்கள் ஐயா! அச்சுப்பிழை என்றால், ஒரு எழுத்து இரண்டு எழுத்து பிசகாக இருக்கலாம். ஆனால், ஒரு பக்கம் முழுதும் வெளியான விஷயங்கள் அவ்வளவும் எப்படி அச்சுப் பிழையாகும்?'' என்று கேட்ட போது வந்திருந்த நாலாயிரம் பிரதிநிதிகளும் 'வெட்கம் வெட்கம்' என்று கூறி ஏளனம் புரிந்தனர்.


திரு பி. டி. ராஜன்


திரு மாரிசாமி

**கோவி:** மாலையில் பொதுக் கூட்டமும் நடந்ததாகக் கேள்விப்பட்டேன்.

**அப்பு:** மாலையில் நடந்த பொதுக் கூட்டத்திலே ஓர் அதிசயம் என்னவென்றால், முக்கால்வாசிக் கூட்டம் பெண்கள்தான். என்மதிப்புப்படி இருபதினாயிரம்பேர்கள் கொண்ட கூட்டத்தில், பதினையாயிரம் பேர் பெண்கள் என்று கூறுவேன். கூட்டம் முடிந்து ராஜாஜி முதலியவர்கள் மேடையிலிருந்து இறங்கிச் சென்றபிறகும் ஜனங்கள் கலையாமல் இருந்தது மற்றொரு ஆச்சரியம்.

**கோவி:** எதனால்?

**அப்பு:** கூறுகிறேன் கேளும். கூட்டம் முடிந்ததும் மேடையில் சிதறிக்கிடந்த பூக்களைக் கூட்டத்தினர் எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்ட காட்சி உருக்கமாயிருந்தது.

**கோவி:** சுதந்திரக் கட்சித் தலைவர்கள் மீதுள்ள பக்தி, நம்பிக்கை இதற்கெல்லாம் இது அறிகுறி.

**அப்பு:** ராஜபாளையத்திலிருந்து கிளம்பி மறுநாள் சென்னை வந்து, உடனேயே கோயம்புத்தூருக்குக் கிளம்பினேன்.

**கோவி:** ஏதேது, நீரும் சூறாவளி சுற்றுப் பிரயாணத்திலே இறங்கி விட்டீரோ, திரு காமராஜருக்குப் போட்டியாக?

**அப்பு:** அவரோடு நான் எதற்குப் போட்டி போட வேண்டும்?

**கோவி:** நல்ல மழை பெய்யும் போது சூறாவளிக் காரியத்தில் இறங்குவது சரியல்ல என்று தான் சொல்ல வந்தேன்.

**அப்பு:** கோவைக்கு ரயில் வண்டியில் போகாமல் நண்பர் ஒருவருடைய காரில் ரோடு மார்க்கமாகக் கிளம்பினேன். வழியில் திருக்கோவிலூர் ஆற்றில் வெள்ளம் போகிறது. பக்கத்திலேயே புதிதாகப் பாலம் அமைத்து, பத்து நாட்களாகக் குறுக்கே கழியைக் கட்டி யாரும் போக முடியாமல் தடுத்துவைத்திருக்கிறார்கள்! மந்திரி வந்து திறப்பு விழா செய்யணுமாம். அதற்குள் வண்டிகளைப் பாலத்தில் விடக் கூடாதாம்! இதனால், அன்று பஸ்களிலும் வண்டிகளிலும் வந்தவர்கள் பட்ட பாடு கொஞ்சமல்ல.

மறுபடியும் **ஆச்சரியப்படும்படியான**

ஆரோக்கியத்துடன் இருங்கள்







### வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

ஆரோக்கியத்தை அளிக்கும் சிறந்த டானிக் என்று நிருபணம் செய்யப்பட்டது. அதை ஆரோக்கியத்துடன் இருக்க விரும்புவோர்களும் அவர்களது குழந்தைகளும் உலகமெங்கும் தினசரி உபயோகப்படுத்துகிறார்கள்.

### வாட்டர்பரீஸ் காம்பவுண்டில்

போஷாக்கை ஊட்டும் கலவைகள் இருக்கின்றன. அவைகள், நீங்களும், உங்கள் குடும்பத்தினரும் வீர்யத்துடனும், ஆரோக்கியத்துடனும், சந்தோஷத்துடனும் இருப்பதற்குத் தேவையான அதிகப்படி சக்தியை அளிக்கின்றன.

### வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இடைவிடாதிருந்து வரும் இருமலையும், ஜலதோஷத்தையும், தொண்டைப்புண்ணையும் போக்குகிறது. நோயுற்று குணமடைந்த பின் உடம்பு சீக்கிரமாகத் தேறுவதற்கு டாக்டர்களால் சிபார்சு செய்யப்படுகிறது.



புதிய சிகப்பு லேபிளுடனும் 'பில்பர்-ப்ரூப்' மூடியுடனும் இப்பொழுது விற்கப்படுகிறது

சிகப்பு மேல் உறை தற்பொழுது இல்லை

நீங்களும் ஆரோக்கியத்துடன் இருக்க நாவிற்கினிய

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சாப்பிடுங்கள்

**கோவி:** மந்திரி வந்து பாலத்தைத் திறப்பதற்குள் இந்த மழைக்கு என்ன தைரியம்? அது எதற்காக வரவேண்டும்? மழையும் எதிர்க் கட்சியில் சேர்ந்து விட்டதாக மந்திரிகள் இனி வசை பாடலாம்!

**அப்பு:** எப்படியோ குப்புவும் நானும் கோவை போய்ச் சேர்ந்தோம்.

அண்ணமலை சர்வகலாசாலை முன்னாள் துணை வேந்தர் திரு எம். ரத்தினசாமி அவர்கள் தலைமையில், கோவையிலும், சுதந்திரக் கட்சி மகாநாடு ஒரு பெரிய வைபவமாக நடந்தேறிற்று. கோவையில், பிரபல ஆலை அதிபர்களில் ஒருவரான திரு கே. சுந்தரம் அவர்கள் வரவேற்பின் கீழ், ஸி. எஸ். டபிள்யூ மில் வைபவங்களுக்காகக் கட்டப்பட்டிருக்கும் கல்யாண மண்டபத்தில் மகாநாடு நடந்தேறிற்று.

**கோவி:** கல்யாண மண்டபத்தில் சுபமாகவே ஆரம்பமாயிற்று என்று சொல்லும்.

**அப்பு:** ஆமாம்! சிந்தாமணி பிரதர்ஸாரின் திவ்யமான நாதசுர இசையுடன், ஆரம்பமான மகாநாடு கடைசி வரையில் கல்யாணக் காட்சியாகவே விளங்கியது. மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசிய திரு பி.டி. ராஜன் சுதந்திரக் கட்சி, அதாவது ஆளும் கட்சிக்குச் சரியான எதிர்க் கட்சி ஏன் அவசியம் என்பதை ஆதாரங்களுடன் விவரித்து, அமோகமாக மக்கள் அதை ஆதரிக்கும்படி கேட்டுக் கொண்டார். மேடையில் திரு ஜி. என். லாம், திரு கந்தசாமிக் கவுண்டர் போன்ற பிரமுகர்களும், பிரபல நிலச்சுவான்தார்களும் திரு சுப்ரி போன்ற பழுத்த முன்னாள் காங்கிரஸ் தியாகிகளும் அமர்ந்திருந்தனர்.



திரு கே. சுந்தரம்

**கோவி:** மாலையில் பொதுக் கூட்டம் நடந்ததா?

**அப்பு:** மழை விட்டு விட்டுப் பெய்து கொண்டிருந்ததால், பொதுக் கூட்டம் நடைபெறுதென்று மகாநாட்டிலே அறிவித்தார்கள். இது தெரியாமல் பொதுக்கூட்டம் நடக்கும் இடத்திலே போய் வெகு நேரமாகக் காத்துக்கொண்டிருந்த குப்புவை நான் சென்று அழைத்துக்கொண்டு வந்து விட்டேன்!

# ஆகாச வெடி

"அல்ஜீரியா பற்றி ஐ. நா. அரசியல் கமிட்டியில் ஒரே ஒரு அங்கத்தினர்தான் பேச முன் வந்தார். மற்றவர்கள் யாரும் பேச முன்வரவில்லை."

— செய்தி

"மற்றவர்கள் ஏன் பேசவில்லை?" என்று கேட்பதற்காக அவர் பேச எழுந்தார் போலும்!

★

"சென்னையில் புளிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கும் போது சௌராஷ்டிரத்தில் அது ஏராளமாகத் தேங்கிக் கிடக்கிறது."

— சென்னை மந்திரி ஒருவர்

மந்திரிகள் சுற்றுப் பிரயாணத்தை அங்கே செய்து கொஞ்சம் ஒட்டிக் கொண்டாவது வரலாமே!

"குடுகுடுப்பாண்டிகள் சிலர் திரு காமராஜரைப் பேட்டி கண்டு, தங்கள் குறைகளை வெளியிட்டனர்."

—திருப்பத்தூர் செய்தி

"உங்களுக்கு நல்ல காலம் வரும்!" என்று காமராஜ் கூறியிருக்க வேண்டும்.

★

"அறுபத்திரண்டு வயதுடைய போபால் நவாப் சிறுவுடன் போராடத் தயார் என்று நேருவுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்."

— செய்தி

"கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனால் எங்கள் தாத்தாவும் சண்டை போடுவார்" என்கிறான் ஒரு வாண்டுப் பயல்.

# பல் டாக்டர்கள் 'கோலினஸ்' முறை பற்களின் ஆரோக்கியத் திற்கு உகந்தது எனக் கூறுவார்கள்




இது புதியது! இது சிறந்தது! ஏனெனில், 'கோலினஸ் சூப்பர் ஒயிட்' பற்பசை அளிக்கும் நுரையில் சாதாரணமாகவுள்ள 2 சுத்திகரணிகளுக்குப் பதில் 3 சுத்திகரணிகள் உள்ளன. இந்த அதிகப்படியான சுத்திகரணியுள்ள பற்பசையினுல் பல் துலக்கும் போது பற்களிடையிலிருக்கும் சொத்தைப் பற்கள் ஏற்படுவதற்குக் காரணமான உணவுத் தூள்கள் அகற்றப்படுவதுடன் உங்கள் பற்களை இயற்கையான வெண்மையுடனும் பிரகாசத்துடனும் இருக்கச் செய்கிறது. வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிக திருப்தியை அளிக்கமுடியாது.

## ஏனெனில் புதிய கோலினஸ் சூப்பர் ஒயிட் பற்பசை, பற்களுக்கு மேலான பாதுகாப்பையளிக்கிறது

### இதோ அந்தக் 'கோலினஸ் முறை':

1. ஈரமான டூத் பிரஷின் மீது அரை அங்குல அளவு மட்டும் 'கோலினஸ சூப்பர் ஒயிட்' பற்பசையை உபயோகிக்கவும்.
2. காலையிலும் இரவிலும் இரண்டு நிமிஷங்களுக்கு உங்கள் பற்களின் எல்லா பாகங்களையும் நன்கு கவனித்து துலக்கவும்.
3. இரவில் பல் துலக்குவது மிகவும் அவசியம். ஏனெனில், அது சொத்தைப் பற்களுக்கு முக்கிய காரணமான உணவுத் துணுக்குகள் பற்களிடையில் தங்கவிடாமல் வெளியேற்றுகிறது.
4. உங்கள் பல்டாக்டரிடம் வருஷத்திற்கு இரு முறையாகிலும் சென்று பற்களைப் பரிசோதித்துக்கொள்ளுங்கள்,




...3 சுத்திகரணிகளும் அத்துடன் நுரைவளமும் கொண்டுள்ளது.

Registered User: GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

# படிப்புப் பண்ணை



சமீபத்தில் கேரளத்தில் ஒரு புரட்சி நடந்தது. "அரசாங்கப் பள்ளி ஆனாலும் சரி, தனியாரால் நடத்தப்படும் பள்ளியானாலும் சரி, அதற்கு உபாத்தியாயர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை அரசாங்கத்துக்கே" என்ற கொள்கையை முன்னிட்டு கம்யூனிஸ்ட் மந்திரிகள் ஒரு மசோதாவை நிறைவேற்றி அமுலுக்குக் கொண்டுவர முயன்றார்கள். இதற்கு எதிர்ப்பு நெருப்பெனப் பரவி கம்யூனிஸ்ட் கட்சியே பதவியை இழக்கும்படி ஆயிற்று. ஆனால் காங்கிரஸ் அரசாங்கம் என்ன செய்கிறது? "பள்ளிக்கூடங்களின் பாடப் புஸ்தகங்களை நாங்களே பிரசுரிப்போம், அவைகளைத்தான் உபயோகிக்க வேண்டும்" என்று தீர்மானம் செய்திருக்கிறது. கம்யூனிஸ்ட் தந்திரங்களில் இளம் வயதிலேயே சிறுவரின் புத்தியைத் தம் பக்கம் திருப்புவது என்பது ஒரு அடிப்படையான முறை. ஆகையால் அவர்கள் பெரும்பாலும் இளைஞர்களையே தங்களது கட்சிக்கு அங்கத்தினராக்க விரும்புவார்கள். சிறு வயதில் பதிந்த கொள்கை மாறாது. அப்பொழுதுதான் மனத்தைத் திருப்ப வேண்டும். இந்தக் கொள்கையை இப்போது காங்கிரஸ் கையாண்டு வருகிறது. சின்னஞ்சிறு வயதில் தாம் எந்த உரிமையை இழந்திருக்கிறோம் என்றுகூடத் தெரியாமல் செய்துவிடலாம். பேச்சு உரிமையைச் சிறிதும் குறைக்க வேண்டியதில்லை.

கல்விக்கு விலங்கிடக் கூடாது. நமது நாட்டில் பல மதங்கள் பரவியிருக்கின்றன. சமூகத்தில் பல சமயத்தவர் ஒன்றுகூடி வாழ்ந்து வருகின்றனர். அவரவர்கள் கொள்கைகளுக்குத் தக்கவாறு பள்ளிக்கூடங்களை அமைத்துப் பாடம்சொல்லி வருகின்றனர். சிலஆண்டுகளாக நாம் ஒரு ஜனநாயகமாக மாறி வாழ்ந்து வருகிறோம். ஆங்கிலேயர்களுக்கு அடிமையாக நாம் இருந்தபொழுது அரசாங்கத்துக்கு எதிராக நாம் எண்ணுவதே குற்றமாகக் கருதப்பட்டது. ஆனால் ஜனநாயகத்தில் அநேக கட்சிகளுக்கு இடமும் உரிமையும் உண்டு. பொதுஜனங்களுக்கு 'நாங்கள்தான் பிரதிநிதிகள்' என்று ஒரு கட்சியாரும் கூறமுடியாது. ஒரு கட்சியின் கொள்கையை மட்டும் பிரசுரிக்க உரிமையிருந்தால் போதாது. ஆனால் அதிகாரம் அனுபவிக்கும் கட்சிக்குப் பல வசதிகள் உண்டு. அவைகளை வரம்புமீறி அவர்கள் நடத்தாமல் தடுக்க வேண்டியது பொதுஜனங்களின் கடமை. இல்லாவிட்டால் நாளடைவில் ஒரு கட்சிதான் நிற்கும். பள்ளிக்கூடப் புத்தகங்கள் வழியாகத் தங்கள் கொள்கைகளைச் சிறுவர்கள் மனத்தில் பதிய வைப்பது ஏகாதிபத்தியத்தின் வழி. பல கொள்கைகளையும் பல மதஸ்தர்களின் நம்பிக்கைகளையும் தனிப் பள்ளிகளில் கற்பிப்பது ஜனநாயகத்தின் வழி. அப்பொழுதுதான் மனம் விசாலமாகும். ஒரு கொள்கை சரியா, தவறா என்று கேட்டு ஆராயும் மனப்பான்மை வளரும்.

பள்ளிக்கூட பாடப்புத்தகங்களை அரசாங்கம் தானே வெளியிடக் கூடாது. பல வகைப் பள்ளிகளில் !பலவகைப் புத்தகங்கள் இருக்க வேண்டும். எல்லாக் கொள்கைகளுக்கும் கல்வி முறை இடம் அளிக்க வேண்டும். அப்பொழுதுதான் சுதந்திரமும் பொதுநலமும் செழிக்கும்.

---

### சஷ்டியப்தபூர்த்தி

சென்னை முத்தியாலுப் பேட்டை ஏ. ஆ.. கி. பள்ளிகளின் நிர்வாகியும் காரியதரிசியுமான திருவாளர் கே. இராமைய செட்டியாரின் சஷ்டியப்த பூர்த்தி விழா, நவம்பர் 22ம் தேதியன்று கோகலே மண்டபத்தில், சபாநாயகர் டாக்டர் யூ. கிருஷ்ணாராவ் அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாக நடந்தேறியது. பள்ளி நிர்வாகக் குழுத்தலைவர் உயர்திரு கே. வேங்கடசாமி நாயுடு அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசியதோடு திரு இராமைய செட்டியாரின் ஊக்கத்தையும், தொண்டையும் பாராட்டினார். வாழ்த்துக்கள் பல வாசித் தளிக்கப்பட்டன.



---







## செந்தமிழ் நாட்டில் சுதந்திர எழுச்சி

செந்தமிழ் நாட்டில் ராஜாஜி திருநெல்வேலி, சங்கரன்கோவில், ராஜபாளையம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்த காட்சிகளைக் காணலாம்.

1. திருநெல்வேலியில் எட்டயபுரம் மகாராஜா பங்களாவில் ராஜாஜியும் அன்பர்களும் 2. டாக்டர் சந்தோஷத்துக்குப் பெரிய திருவடி திரு துரைசாமி நாடார் மலர் மாலை அணிவிக்கிறார். 3. நெல்லை சுதந்திரக் கட்சிக் கமிட்டியினர் சிலருடன் ராஜாஜி. 4. நெல்லை நகரசபை ராஜாஜிக்கு வரவேற்பு அளித்தது. 5. திரு சேனியர். 6. தீர்மானங்களைப் பிரேரேபித்த திரு ஹமீத். 7. நெல்லை வக்கீல்கள் சங்கத் தலைவர் சுப்பய்யர் ராஜாஜியை வரவேற்கிறார். 8. மேலப்பாளையம் முஸ்லிம்கள் ராஜாஜிக்கு ஓர் அரிய வரவேற்பு அளித்தனர். 9. பசும்பொன் தேவர் பிறந்த










நாள் விழாவில் தலைவர்கள். 10. ராஜபாளையம் மகாநாட்டில் வாழ்த்துரை வாசித்தளிக்கப்படுகிறது. 11. மகாநாட்டின் ஒரு தோற்றம். 12. திரு கே. எஸ். வெங்கட கிருஷ்ண ரெட்டியாரின் தலைமையுரை 13. திரு பாலகுருவா ரெட்டியார் எம்.எல்.ஏ. வயிறு குலுங்கக் குலுங்கப் பேசிச் சிரிக்க வைத்தார். 14. வரவேற்புரை வாசித்தளிக்கப்படுகிறது. 15. திரு சா. கணேசன் 16. நெல்லை முனிசிபல் அங்கத்தினர்களுடன் ராஜாஜி. 17. ராஜபாளையத்தில் தலைவர்களுக்கு விருந்தோம்பிய திரு பி. டி. குப்பாராஜு அவர்கள் இல்லத்தில் அன்பர்களுடன் ஒருகாட்சி. 18. சங்கரன்கோவிலில் தேவர் ஜயந்திக்குக் கூடி விருந்த மாபெரும் கூட்டம்.















# சோட்டி பஹன்

காந்தன்



தந்தையையும் தாயையும் இழந்த பிறகு அன்புத் தங்கை மீனுவுக்கு ஆதரவாக விளங்கினான் அண்ணன் ராஜேந்திரன். அதுமட்டுமா? அருமைத் தம்பி சேகரையும் அரும் பாடுபட்டுக் கல்லூரிக்கு அனுப்பிப் படிக்க வைத்தான்! தன்னலத்தை அடியோடு மறந்து சகோதரிக்காகவே வாழ்ந்த அவ் வன்பின் சிகரத்துக்கு வாழ்க்கையில் கிடைத்த பரிசு என்ன தெரியுமா? துன்பம், துயரம், தாங்கொணா வேதனை.

விவாகத்துக்குத் தயாராயிருந்த தங்கை விபத்தில் விபரீதமாகக் கண் பார்வையை இழக்கிறாள்! சேகருக்கும் பணக்காரப் பெண் சோபாவுக்கும் காதல் ஏற்பட்டுக் கல்யாணம் நடந்து குருட்டுத் தங்கை மீனுவுக்கு வேதனையாக முடிகிறது. மனைவியின் பேச்சைக் கேட்டு, சேகர் தனிக் குடித்தனம் போகிறான். கதையின் ஜீவன் இங்குதான் ஆரம்பமாகிறது.

பால்ராஜ் ஸஹானி எந்தப் படத்தில் வந்தாலும், கூடவே துயரமும், சிக்கலான பிரச்னைகளும், மௌனமாக விம்மி வெடிக்கும் சந்தர்ப்பங்களும் நிச்சயம் வரும். இந்தப் படத்தில் அவருக்கு ஜூரமே வந்துவிடுகிறது. பால்ராஜ் ஸஹானி கண்ணீரில் நனைந்து நம்மையும் துயரத்தோடு கண்ணீர்விடச் செய்கிறார். நல்ல உருக்கமான நடிப்பு.



தங்கை மீனுவின் பாகம் நடிகை நந்தாவுக்கு நன்கு பொருந்துகிறது. விவாக ஏற்பாட்டுக்கு முன்பிருந்த துடிதுடிப்பின் போதும், பார்வையை இழந்த பாவையாக வந்து பலவிதமாகப் பாடுபட்டபோதும் நந்தா எல்லோரையும் உருக்கி விடுகிறார்.

சேகரும் அவன் மனைவி சோபாவும் திரைக் கதைக்குத் திருப்பங்களைத் தருபவர்கள். ரஹ்மானும், ஷியாமாவும் அந்தப் பாத்திரங்களாகத் தோன்றி நன்றாய் நடிக்கின்றனர்.

இந்தப் படத்தில் வரும் மகேஷும் அவன் காதலி ஷீலாவும் சுவாரஸ்யமான பாத்திரங்கள். மகமூதும், சுபாகோட்டும் அந்தப் பாகங்களை ஏற்று அபாரமாக நடிக்கின்றனர்.

பிரதான கதையைவிட இடையில் வரும் இந்தக் காதலர்கள் கதை மிகவும் ருசிகரமாகப் பின்னப்பட்டிருக்கிறது. அநாதை ஷீலாவை வளர்த்தவர்கள் அவளை ஒருவனுக்கு விற்க முற்படுகின்றனர். இதையறிந்த ஷீலா வீட்டை விட்டு ஆணுடையில் வெளியேறி, கல்லூரி மாணவன் மகேஷின் விடுதியில் தஞ்சம் அடைகிறாள். அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகள் வேடிக்கையாயிருக்கின்றன. ஷீலா (சுபாகோட்) நினைத்த மாத்திரத்தில் முகம் சுளித்து அழ ஆரம்பிப்பது அற்புதமாயிருக்கிறது.

தகப்பனாரின் பணத்தாசை காரணமாக மகேஷ்-ஷீலாவின் காதல் பூர்த்தியாகாமல் போகவே, அவன் வீட்டை விட்டு வெளியேறிப் பிழைப்புக்காக ரிக்ஷா இழுக்கிறான். மகேஷ் ரிக்ஷா இழுக்கும் காட்சி பிரமாதம். தட்டுத்தடுமாறி ரிக்ஷா இழுக்கக் கற்றுக்கொண்டு அவன் குதிரையோடு போட்டி போட்டுக்கொண்டு ஓடும் காட்சி இன்னும் என் மனத்தை விட்டு அகலவில்லை. ரிக்ஷா இழுக்கும்போது பாடும் "மைம் ரிக்ஷா வாலா" என்ற பாட்டும் தமாஷாயிருக்கிறது.

பழக்கமான கதையானாலும் உருக்கமாக இருப்பதனால் "சோட்டி பஹன்" படத்துக்கு எல்லா இடங்களிலும் வரவேற்பு இருக்கும்.

# அபலை அஞ்சுகம்



டி. ஆர். மகாலிங்கம் சமீபத்தில் நடித்த படங்கள் நமக்குத் திருப்தியளிப்பதாயில்லை. ஆனால் இந்தப் படத்தில் ரௌடி சொக்கன் பாகத்தை ஏற்றுப் பொல்லாதவனாக வாழ்ந்து கடைசியில் நல்லவனாக மாறி அபலை அஞ்சுகத்தை அடையும் வரையில் நன்றாக நடித்திருக்கிறார்.

அஞ்சுகம் சௌகார் ஜானகிக்கு மிக மிகப் பொருத்தமான பாத்திரம். அபாண்டமாகப் பழி சுமத்தப்பட்ட அபலையாக வந்து கண்ணீரில் கரைந்து, வேதனையில் வெதும்பி, அன்புக்கு ஏங்கி, ஆதரவுக்காக அலைந்து, கடைசியில் காதலனிடம் சேரும் கட்டம் வரையில் சௌகார் ஜானகியின் நடிப்பில் துளியும் குறைகூற முடியாது.

"அபலை அஞ்சுகம்" காலஞ் சென்ற எழுத்தாளர் கி. ரா. கோபாலன் அவர்களால் "கல்கி"யில் தொடர்ச்சியாக எழுதப்பட்டுப் பலராலும் படித்துப் பாராட்டப்பட்ட நாவல். சாதாரணமாகத் தமிழ் எழுத்தாளர்கள் கதை எதுவும் இது வரையில் வெற்றிகரமாக வெள்ளித் திரைக்கு வந்து எழுத்தாளர்களுக்குப் புகழ் அளித்த இல்லை. அந்த விபத்திலிருந்து "அபலை அஞ்சுகம்" மட்டும் தப்பிவிட முடியுமா? வசனம் எழுதிய ஏ. எல். நாராயணன் அவ்விபத்துக்கு உதவியிருக்கிறார்! திரைக்கதை வசனம்தான் படத்தைப் பாழாக்கிவிட்டது. படம் முழுவதும் அருவருப்பான கொச்சை மொழி வசனமாக இருப்பதால் பலருக்குப் படம் விளங்குவதே சிரமமாயிருக்கிறது. "மதராஸ் தமிழ்" என்று சிலர் அதைச் சொன்னார்கள். ஆனால் இந்தப் படம் வெளியூர்களில் மட்டும் தோல்வியடைந்திருந்தால் அதை ஒப்புக் கொள்ளலாம். "மதராஸ் தமிழ்" மதராஸிலேயே எடுபடவில்லையே! ஏன்? படம் முழுவதும் காலித்தனமாயிருந்தால் படம் பார்க்கும் ரஸிகர்களின் பாராட்டு எப்படிக் கிடைக்கும்?

எம். என். ராஜம் நிர்மலாவாக வந்து வஞ்சனையும் சூழ்ச்சியுமாக வாழ்ந்து அஞ்சுகத்தின் மீது அடாப் பழி சுமத்தி வெளியேற்றுகிறாள். காணாமற்போன ஜமீன்தாரிணியின் மகன் விஜயரங்கனுடைய சாயல் சொக்கனுக்கு இருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு பெரிய கபட நாடகம் போடுகிறாள்.

வில்லியாக நடிப்பதற்கு எம். என். ராஜத்துக்கு நாம் சொல்லியா தெரிய வேண்டும்? தம் பாகத்தை இறுதியில், போலீஸில் சிக்கும் வரையில் மிகவும் நன்றாகச் செய்திருக்கிறார்.

படத்தின் காட்சி ஜோடனைகளும், இயற்கைக் காட்சிகளும் திறமையாகப் படமாக்கப்பட்டிருக்கின்றன. சொக்கன்-விஜயரங்கன் இரண்டு பாத்திரங்களையும் டி. ஆர். மகாலிங்கம் ஏற்றிருக்கிறார். அந்தக் காட்சிகள் நன்கு படமாக்கப்பட்டிருக்கின்றன.

டி. ஆர். ராஜகோபால் எல்லோரையும் சிரிக்க வைக்கிறார். சினிமாப் பாட்டுப் புத்தகங்கள் விற்பவனாக வந்து அவர் காதலிப்பது பிரமாதமாயிருக்கிறது. இந்தப் படத்தில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய நடிகை ஆர். எம். மனோரமா. ராஜகோபாலுக்குத் துணையாக வந்து அந்தப் பெண்மணி சக்கைப்போடு போடுகிறார்.

குப்பம்மாவாக என். எஸ். கே. மதுரம் வந்து பாத்திரத்துக்கு ஏற்ப நடிக்கிறார்.

"வெண்ணிலா குடை பிடிக்க" என்ற உடுமலை நாராயண கவியின் பாடலை டி. ஆர். மகாலிங்கமும், சுசீலாவும் பாடுகிறார்கள். அந்தப் பாட்டு மிகவும் நன்றாயிருக்கிறது.



டி. ஆர். மகாலிங்கம் பாடும் பாடல்கள் ஏனோ காதைத் துளைக்கின்றன. ஒலிப் பதிவாளர் இது விஷயத்தைச் செவிமடுக்க வேண்டும்.

"அபலை அஞ்சுகம்" நல்ல படமாக இருக்கும் என்று மிக ஆவலோடு எதிர்பார்த்தேன்.

நல்ல எழுத்தாளரின் நல்ல கதையைத் திரைக்கதை வசன கர்த்தாவின் திறமை பாழாக்கி விட்டது.

டிசம்பர் 11 முதல்

... சென்னை ...

கெயிட்டி • பிராட்வே • ராக்ஸி

மற்றும் தென்னுடெங்கும்

G.K. புரொடக்ஷன்ஸ்

# சகோதரி

... பெண்ணுக்குப் பெருமை தரும் பொன்னோவியம் ...

| திரைக் கதை, வசனம் : | டைரக்ஷன் : | பாடல்கள் : |
|---|---|---|
| முரசொலி மாறன் M.A. | A. பீம்சிங் | கண்ணதாசன் |



ஸ்டுடியோ : ஏவி எம்



# அமைதியை விரும்பும் ஐஸன்ஹோவர்

எம்.எஸ்.சிவஸ்வாமி

இரண்டாவது உலக யுத்தம் முடிந்து விட்டது. ஜெர்மனி தோல்வி யடைந்து விட்டது. நேச நாடுகளின் சார்பில் ராணுவத் தலைமை தாங்கி வெற்றிவாகை சூடி ஜெயபேரிகையுடன் திரும்பிய அமெரிக்கத் தளபதி ஐஸன்ஹோவருக்கு லண்டன்மா நகரம் கோலாகலமான வரவேற்பு அளித்தது. 1945-ம் ஆண்டு ஜூன் மாதம் 12-ம் தேதியன்று அளித்த வரவேற்புக்குப் பதிலளிக்கையில், "நீங்கள் அளிக்கும் வரவேற்பும், தெரிவித்துக்கொள்ளும் நன்றியும் உண்மையில் ராணுவ உடை அணிந்த ஒவ்வொருவனுக்கும் அளிக்கும் வரவேற்பு. யுத்தத்தை ஜெயித்தது அவர்கள்தான்: நான் அல்ல. நான் ஒரு சின்னம்தான். போரை வெற்றியுடன் முடிக்க இடைவிடாது நெஞ்சில் உறுதியுடனும், தோளில் உரத்துடனும், மனத்தில் நம்பிக்கையுடனும் உழைத்த லட்சக்கணக்கான மக்களுடைய சின்னம்" என்றார் பணிவே உருவாய்த் திகழ்ந்த அந்தத் தளபதி.

ஜனாதிபதி ஐஸன்ஹோவர் வெற்றிக்கு மட்டும் சின்னமல்ல. ராணுவ பலத்துக்கும் ராணுவ தந்திரத்துக்கும் மட்டும் சின்னமல்ல. அமெரிக்க வாழ்க்கை முறையின் ஒரு சின்னம். அமெரிக்க மக்களின் உலக லட்சியங்களுக்கு ஒரு சின்னம். சாதாரண ஒரு அமெரிக்கக் குடும்பத்தின் அமைப்புக்கு ஒரு சின்னம். அமெரிக்கப் பண்புக்கு ஒரு சின்னம். அமெரிக்கக் குடும்பத்தின் தெய்வபக்திக்கு ஒரு சின்னம்.

அவருடைய வாழ்க்கையும், அவருடைய நடவடிக்கைகளும் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளும், வெளியிட்டுள்ள கருத்துக்களும் அவருடைய பண்பையும், லட்சியங்களையும் கொள்கைகளையும் எடுத்துக் காட்டுகின்றன. பெருவாரியான மக்களின் ஆதரவின் பேரில் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, பதவி ஏற்பதற்கு முன் ஒரு சிறிய சம்பவம் நிகழ்ந்தது.



*19 வயதுள்ள மேமி ஜெனீவா டௌட்டிடம் (Mamie Geneva Daud) காதல் கொண்ட அடுத்த நாள் பதினைந்து முறை டெலிபோனில் அவருடன் பேசினாராம்ஐக்!*

அன்று 1953-ம் ஆண்டு ஜனவரி 20ம் தேதி காலை. தேவாலயத்துக்குச் சென்று திரும்பியதும் பதவி யேற்றபின் படிக்க வேண்டிய தமது உரையை ஒரு முறை படித்துப் பார்த்தார். தெய்வத் திருவருளைப் பற்றி அதில் போதியஅளவு வலியுறுத்தவில்லை என்று தோன்றியது. அந்தக் குறையைப் பூர்த்தி செய்ய வேண்டி அவரே சில வாக்கியங்களை அந்தக் கணத்திலேயே புனைந்து சேர்த்துக் கொண்டார். அதை அவர் படித்தபோது லட்சக்கணக்கான மக்கள் கேட்டுப் பூரித்தனர்.

"சர்வ வல்லமையுள்ள ஆண்டவனே! அரசாட்சி நடத்தும் பொறுப்பு ஏற்று நிற்கும் இந்தத் தருணத்தில், நானும் என்னுடன் இணைந்து பணியாற்ற விருக்கும் சகாக்களும் இந்நாட்டு மக்கள் அனைவருக்கும் பூரணமாக எங்களை அர்ப்பணித்துக் கொள்ளுகிறோம். எங்கள் சேவை முழுப்பலன் அளிக்கவும், பூரணத்துவம் பெறவும், ஆண்டவனே, உன்னுடைய அருளை வேண்டுகிறோம். எங்கள் பணியைப் பூர்த்தி செய்வாயாக" என்ற பிரார்த்தனையுடன் தொடங்கியது ஜனாதிபதி ஐஸன்ஹோவரின் அரசாங்கம்.

இந்த வாக்கியங்கள் ஆடம்பரத்துக்காக மட்டும் அமைந்தவையல்ல. உளம் கனிந்து கூறப்பட்டவை. நடைமுறையில் கடைப்பிடித்து ஒழுகுவதற்காக அவர் அமைத்துக் கொண்ட வழி. ஆண்டவனை மனத்திலிருத்தியே ஐஸன்ஹோவர் அரசாங்கம் எல்லா நடவடிக்கைகளையும் கவனிக்கிறது. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் பத்து மணிக்குத் தமது மந்திரி சபைக் கூட்டத்தை அவர் தொடங்கும்போதெல்லாம் ஒரு சிறிய பிரார்த்தனையுடனே ஆரம்பிப்பது ஜனாதிபதி ஐஸன்ஹோவருக்கு வழக்கமாகி விட்டது. "ஒரு நிமிஷம் நாம் எல்லோரும் சிரம் தாழ்த்தி மௌனமாகப் பிரார்த்தனை செய்வோம்" என்று தான் அவர் ஆரம்பிக்கிறார். ஜனாதிபதி காட்டிய வழியை அவருடைய சகாக்களும், அதிகாரிகளும் பின்பற்றி அரசாங்க மாளிகையிலேயே ஒரு புனிதத்தன்மையை உண்டாக்கி விட்டார்களாம். கடவுள் வணக்கத்துடன் எந்தக் காரியத்தையும் ஆரம்பிக்கும் நம் நாட்டுப் பண்புக்கு ஜனாதிபதி ஐஸன்ஹோவரின் பண்பு எவ்வளவு நெருங்கியிருக்கிறது என்பது தமிழ் மக்களுக்கு ஆச்சரியத்தையே உண்டாக்கும்.



ஜனாதிபதியும் அவரது மனைவியும் தங்களது 42-வது ஆண்டு திருமண தினத்தை பொடோமாக் நதியில் படகுப் பிரயாணத்தில் தங்கள் குடும்பத்தினருடன் கழித்தனர்.

ஜனாதிபதியின் கடவுள் நம்பிக்கை அசைக்க முடியாதது. மனிதன் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் கடவுள் பங்குகொண்டு அதைச் சரிவர நிறைவேற்றிவைக்கிறார் என்பது அவருடைய நம்பிக்கை. இந்த அடிப்படையின் பேரில்தான் அவருடைய இதர கொள்கைகள், லட்சியங்கள், ஆர்வங்கள் எல்லாமே எழுப்பப்பட்டிருக்கின்றன. அமெரிக்க நாட்டின் உன்னதமான நிலை, உலகத்தில் அமெரிக்கா வகிக்கும் தலைமை ஸ்தானம், அமெரிக்காவின் செல்வ வளம், வாழ்க்கை முறை, எல்லாம் அமெரிக்க மக்களின் தெய்வபக்தியென்னும் அஸ்திவாரத்தின் மீதுதான் அமைந்திருக்கின்றன என்பது அவர் சித்தாந்தம். அதுதான் உண்மையும் கூட.

இதை அவர் விளக்கிவைக்கும் மாதிரியைப் பாருங்கள். சுதந்திர அரசு என்பது ஆண்டவனால் மனிதனுக்கு அளிக்கப்பட்ட உரிமைகளைப் பாதுகாப்பதற்காகவே ஏற்பட்டது. ஒவ்வொரு பிரஜையும் தன் உள்ளத்தில் உணர்ந்து நினைவுபடுத்திக் கொள்ளும் தெய்வ நம்பிக்கையே சுதந்திர அரசாங்கம் என்று உருக்கொண்டுமிளிர்கிறது. தெய்வ நம்பிக்கையைத் தவிர மற்றெந்த அடிப்படையிலும் சுதந்திர அரசாட்சி என்பதை விவரணம் செய்ய முடியாது. தன்னிலிருந்து வேறுபடுத்த முடியாத உரிமைகளை ஆண்டவன் ஒவ்வொருவனுக்கும் அளித்திருப்பதனாலேயே மனிதன் சுதந்திரமாக வாழ முடிகிறது. இவ்வாறு அவர் யுத்தம் முடிந்த பின் நாடு திரும்பிச் செய்த முதல் பிரசங்கத்தில் ஆணித்தரமாக எடுத்துக் காட்டினார்.

நாடு பிளவுபட்டு, கலவரமும் மனக்கலக்கமும் மிகுதியாக இருந்த காலங்களில் ஜனாதிபதி லிங்கன் கடவுளைத் தியானிப்பது வழக்கமாம். உறுதியான நடவடிக்கை எடுக்க வேண்டிய சமயங்களிலெல்லாம் ஆண்டவனின் அருளையும் துணையையும் மனமுருகி வேண்டுவாராம். அந்த வழியிலேயே, அந்தப் பண்பாட்டிலேயே ஐஸன்ஹோவரும் செயலாற்றுகிறார். லிங்கன் காலத்திலிருந்த சூழ்நிலை இப்போது இல்லை. நாடு பிளவுபட்டிருக்கவில்லை. ஆனால் தற்போதுள்ள பிரச்னை வேறு. உலக சமாதானமே அல்லவா ஜனாதிபதி ஐஸன்ஹோவரின் நடவடிக்கைகளைப் பொறுத்திருக்கிறது. ஆண்டவனின் துணைக்கு என்றுமில்லாத அவசியம் ஏற்பட்டிருக்கிறதல்லவா?

இப்படிப்பட்ட தெய்வ பக்தி ஜனாதிபதிக்குத் திடீரென்று வந்து விடவில்லை. அவருடைய இளமைப் பிராயத்திலிருந்தே அவருடைய குடும்பச் சூழ்நிலையிலிருந்தே சிறுகச் சிறுக வளர்ந்துவந்திருக்கிறது. இவருடைய குடும்பச் சூழ்நிலையில் மட்டும் அல்ல, சாதாரணமாக எல்லா அமெரிக்கக் குடும்பங்களிலுமே இதைக் காணலாம். இதை ஜனாதிபதிஐஸன்ஹோவரே வெகு ரஸமாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

கெட்டிஸ்பர்க் என்ற யுத்த பூமி அமெரிக்கர்களுக்கு ஒரு புனித பூமி. லிங்கன் இந்த இடத்தில் நிகழ்த்திய பத்தே வாக்கியங்கள் கொண்ட இரண்டு நிமிஷப் பிரசங்கம் உலக இலக்கியத்திலேயே பிரசித்தியடைந்திருக்கிறது. ஜனநாயக அரசு என்பதற்கு இலக்கணம் வகுத்துத் தந்தார் லிங்கன் இந்தக் குட்டிப் பிரசங்கத்தில். இந்த இடத்துக்கு அருகில் ஐஸன்ஹோவர் ஒரு மாளிகை எழுப்பி, அதை ஒரு பொருட்காட்சிச் சாலையாக மாற்றியிருக்கிறார். வெளிநாட்டிலிருந்து அமெரிக்காவுக்குச் செல்லும் ஒவ்வொருவரும் தவறாது தரிசித்துச் செல்லும் இடம். இந்த இடத்தைப் பற்றிச் சொல்லும் போது, "என்னுடைய பெற்றோர்களின் ஞாபகம் இந்த இடத்தில் எனக்கு எப்போதும் வருகிறது. அவர்கள் தெய்வ பக்தி நிறைந்தவர்கள். மிதமிஞ்சிய கடவுள் நம்பிக்கை காரணமாக அவர்கள் தங்கள் வாழ்க்கையையும் தங்கள் புதல்வர்களின் வாழ்க்கையையும் பதவி, புகழ், செல்வம், கீர்த்தி முதலியவற்றைக் கொண்டு அளக்காமல், நல்வாழ்வு—தீய வாழ்வு என்ற பாகுபாட்டைக் கொண்டே கணித்தனர். கடவுளிடம் பயம் எப்போது ஏற்படுகிறதோ, அப்போதுதான் விவேகம் ஆரம்பமாகிறது என்று அவர்கள் கற்பித்தனர். சத்தியம், சிக்கனம், சுதந்திரம், உழைப்பு, பொறுப்புணர்ச்சி, சுயேச்சை,

இம்மாதம் புதுதில்லிக்கு விஜயம் செய்யும் ஜனாதிபதி ஐஸன்ஹோவருக்கு நல்வரவு கூறும் வகையில் அவருடைய படம் இவ்வாரக் கல்கி இதழின் மேலட்டையை அலங்கரிக்கிறது.

# டி.எஸ்.ஆர் & கோ

கும்பகோணம்











ஊட்டமும்
ஊக்கமும்
ஒருங்கே பெற

**ராகோடைன்**

புத்துணர்ச்சி
அளிக்கும்
சிறந்த பானம்






பைன் கெமிகல் ஒர்க்ஸ், மைசூர்

FC-540

---

GHV-3



# விமலாவில்

## தயாரான தின்பண்டங்களை எல்லோரும் விரும்பிச் சாப்பிடுகிறார்கள்

வாடிக்கைக்காரர்களுக்குத் திருப்தி தந்து அவர்களை மீண்டும் வரச் செய்வது, நல்ல உணவு. சிறந்த ஓட்டல் முதலாளிகளுக்கு இது நன்கு தெரியும்! ஆகவே அவர்கள் எப்பொழுதும் சுத்திகரிக்கப்பட்ட விமலா தாவர எண்ணெயையே உபயோகிக்கின்றனர்.

இதனால் அவர்களுக்குப் பணம் மிச்சம்... ஏன்? சுத்திகரிக்கப்பட்ட விமலா தாவர எண்ணெய் தேங்காய் எண்ணெயை விட கால் பங்கு மலிவு. கைபடாமல் சிறந்த சுகாதார முறைப்படி தயாராகும் விமலா சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணெய், தூய்மை, தரத்திற்கு இணையற்றது.

**VIMALA**
REFINED
VEGETABLE OIL




இது ஒரு கேரள சர்க்கார் தயாரிப்பு.
உங்கள் பணத்திற்கு முழுமதிப்புத் தருவது

கவர்ன்மென்ட்
ஹைட்ரோஜனேஷன் பாக்டரி
கள்ளிக்கோட்டை — கேரளா

(பொதுத்தொகுதியில் வனஸ்பதி தயாரிக்கும் தொழில் ஸ்தாபனம் இது ஒன்றே)

தெய்வ பக்தி — இந்தச் சாதாரணப் பாடங்களை எங்களுக்கு அவர்கள் கற்பித்தனர். இவைதானே சுதந்திர அமெரிக்காவின் வாழ்க்கை முறைக்கும் அதன் முன்னேற்றத்துக்கும் அடிப்படையாக அமைந்திருப்பவை. இவைதானே அமெரிக்கா உலகினுக்குக் கற்பிக்கும் சாமான்யப் பாடங்கள்'' என்றார் ஐஸன்ஹோவர். தாம் சாதாரண அமெரிக்கக் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று தம்மைப் பற்றி அடக்கமாகக் கூறிக்கொண்டு அமெரிக்கத் தேசத்தின் விசேஷ அம்சங்களையும் வெகு அழகாக எடுத்துச் சொன்னார்.



தமது கெட்டிஸ்பர்க் பண்ணையில் ஜனாதிபதி ஐஸன்ஹோவர் பொழுதுபோக்குக்காக ஓவியங்கள் வரைவதில் ஈடுபட்டிருக்கிறார்.

''உன்னால் கூடுமானவற்றை முழுமனத்துடன் செய்துவிட்டு மற்றதைக் கடவுளுக்கு விட்டு விடு; அவர் கவனித்துக்கொள்ளுவார்'' என்று அவருடைய தாயார் அவரது இளம் பிராயத்திலிருந்தே போதனை செய்திருந்தாராம். பகவத்கீதையின் தத்துவம் நடைமுறைக்கு எவ்வளவு அற்புதமான உபதேசம் என்பதை ஒவ்வொரு அமெரிக்கக் குடும்பமும் அறியாமல் அறிந்து கொண்டிருக்கிறது போலும்.

ஐஸன்ஹோவருடையகுடும்பம் செல்வத்தில் செழித்த குடும்பம் அல்ல. ஏழு புதல்வர்கள் உள்ள குடும்பத்தில் அதிக செல்வமிருந்தாலும் தெரியாது. மூன்றாவதாகப் பிறந்தவர் தான் ட்வைட் (Dwight). ஒருவர் சட்டத்தொழில் புரிகிறார். ஒருவர் பாங்கி முதலாளி. ஒருவர் என்ஜினீர். ஒருவர் ஜான் ஹாப்கின்ஸ் சர்வகலாசாலையின் தலைவர். ட்வைட் தான் ஜனாதிபதி. குடும்பப் பண்ணையில் எல்லோரும் வேலை செய்து பழக்கப்பட்டவர்கள். உழைப்பால் உயர்ந்தவர்கள் அமெரிக்காவில் அதிகம். ஐஸன்ஹோவர் சகோதரர்கள் இதற்கு ஒரு சிறந்த உதாரணம்.

இப்போதும் 496 ஏக்கர் பரப்புள்ள தமது கெட்டிஸ்பர்க் பண்ணையில் ஜனாதிபதி பண்ணை வேலைகளில் மிக உற்சாகமாக ஈடுபடுவதுண்டு. ஆட்சிபீடமாகிய வெள்ளை மாளிகையிலிருந்து 80 மைல் தூரத்திலுள்ள இந்தப் பண்ணையில்தான் ஜனாதிபதிக்கு அரசாங்கத் தொல்லைகளிலிருந்து அமைதி கிடைக்கிறது. கால்நடை வளர்த்தல், மண் வளப் பாதுகாப்பு, மீன் பிடித்தல், ஓவியம் வரைதல் முதலியவை ஜனாதிபதிக்கு அமைதியளிக்கும் ஓய்வு நேர அலுவல்கள். மீன் பிடிப்பதில் அவருக்கு வெகு உற்சாகம். மீன் பிடிப்பதிலுள்ள ஆர்வத்தைப் போலவே, அதைப் பக்குவப்படுத்திச் சமையல் செய்வதிலும் அவர் கைதேர்ந்தவர். திறந்த வெளியில் மரத்தடியிலேயே அடுப்பு மூட்டி மீன் பக்குவம் செய்ய ஆரம்பித்து விடுவாராம்!

பாரதம் சுதந்திரம் அடைந்ததற்குப் பின் விஜயம் செய்துள்ள அயல்நாட்டுப் பிரமுகர்கள் அநேகர். எல்லா நாடுகளிலிருந்தும் தலைவர்கள் வந்துள்ளார்கள். அமெரிக்க ஜனாதிபதி இந்நாட்டுக்கு விஜயம் செய்வது இது தான் முதல் தடவை. ரூஸ்வெல்ட் யுத்த நெருக்கடி காரணமாகத் தமது காலத்தில் 15 நாடுகளுக்குப் பயணம் செய்திருக்கிறார். பார்க்கப்போனால் மூன்று ஜனாதிபதிகள்தான் தாங்கள் பதவி வகிக்கையில் அமெரிக்காவை விட்டு வெளியே சென்றிருக்கின்றனர். இப்போது உலகச் சூழ்நிலை வேகமாக மாறியுள்ளதல்லவா? பிரச்னைகளும் சிக்கல் மிகுந்துவிட்டன. ராஜதந்திர முறைகளால் தீர்வுகாண முடியாத பல விஷயங்கள் நேரடியாகப் பேசினாலாவது தீர்வு காண முடியுமா என்று தேசத் தலைவர்கள் எண்ணுகின்றனர். ஜனாதிபதி ஐஸன்ஹோவரின் இந்த விஜயம் இதனால் முக்கியத்துவம் அடைந்திருக்கிறது. ''உலக சமாதானத்தை முன்னிட்டு உலகத்தில் எந்த இடத்துக்கு வேண்டுமானாலும்போவேன்'' என்று சொன்னவர் அதைச் செயலிலும் நடத்திக் காட்டிக் கொண்டிருக்கிறார். மனிதப் பண்பும், தெய்வ நம்பிக்கையும், அதிகாரச் செல்வாக்குடன் இணைந்து கலந்து, சமாதானத்தையும் பரஸ்பர நல்லுறவையும் நிலைநிறுத்தப் போதிய சாமர்த்தியமும் உள்ள ஜனாதிபதி ஐஸன்ஹோவரின் நல்லுறவு விஜயம் உலக க்ஷேமத்துக்கு வழி வகுப்பதாக ஆகட்டும்.

டிசம்பர் 14-ந் தேதி திங்கள்கிழமையிலிருந்து மார்கழி மாதம் முழுதும் மயிலாப்பூர் நான்கு மாடவீதிகளிலும் வழக்கம் போல் அதிகாலையில் பாபநாசம் சிவன் கோஷ்டியினர் பஜனை நடத்தவிருக்கிறார்கள் இவ்வைபவத்தில் ஆஸ்திக மக்கள் அனைவரும் கலந்து கொள்ளக் கோருகிறோம்.



# உயிரில் ஒன்றிய திருப்தி

ஜ. சாமிநாதன்

அவள் என்னை நோக்கினாள்.

ஆபீசுக்கு அவசரம் அவசரமாகப்புறப்பட்டுக் கையில் அம்மா கட்டிக் கொடுத்த தோசையுடன் மற்றொரு கையில் ஒரு இலக்கியப் பத்திரிகையுடன் மயிலாப்பூர் பஸ் நிலையத்தில் நின்றிருந்த 'க்யூ'வில் நூற்று மூன்றாவது நபராக நின்று கொண்டேன். மாசம் ஓடாக உழைத்து, நூற்று இருபது ரூபாய் சம்பாதிக்கும் இந்த வெற்றுக் கட்டை நின்றால் என்ன? ஓடினால் என்ன? எவன் கவனிக்கிறான்?

ஆனால்—

அவள் என்னை நோக்கினாள்.

நோக்கினாளா? அவள் விழிகள் என்னுடன் பேசின. பஸ் ஸ்டாண்டும் நானும், இந்த நாட்டில் வறுமையும் இருக்கும் வரையில் அவளைத் தினமும் பஸ் ஸ்டாண்டில் பார்க்கலாம்.

இப்போதாவது புரிந்து கொண்டீர்களா? நான் தினமும் பஸ் ஸ்டாண்டில் பார்ப்பவள் கையிலே 'வானிடி பாக்'கைச் சுழற்றிக் கொண்டு உதட்டிலே விலை உயர்ந்த சாயத்தைப் பூசிக் கொண்டு 'கூலிங் கிளாஸு'ம் கண்ணுமாக நிற்கும் (கதைகளில் வருகிற) நவநாகரிக நங்கை அல்ல. அவள் லட்சணம்—எண்ணெய் காணாத தலை, சூட்டையும் குளிர்ச்சியையும் சமமாய்ப் பாவிக்கும் உடல், உள்ளடைந்து போன கன்னங்கள், நல்ல பக்தன் கடவுளைக் காணத் தவிப்பது போலக் காலணாக் காசைக் காணத் தவிக்கும் கண்கள்-இவைதான் அவள்.

அவள் கையிலே சிறு குழந்தை ஒன்றும் இருக்கும். அதன் வாடிய வயிற்றையும், சில மனிதர்களிடம் இன்னமும் ஒட்டிக் கொண்டிருக்கும் இரக்கத்தையும் மூலதனமாய் வைத்து அவள் மூச்சு விட்டுக் கொண்டாள்.

ஆனால் இன்று அவளிடம் ஏதோ மாற்றம் இருப்பது போல் எனக்குத் தோன்றியது. நளினம் என்று சொல்ல முடியாது. காதல் கதைகளில்வரும் நளினம் காசுக்குக் கைநீட்டும் பிச்சைக்காரியிடம் வருமா? அவள் விழிகளில் இன்று சிறிது மகிழ்ச்சி தெரிந்தது. எப்போதும் சிணுங்கிய முகமும், சோர்ந்த வயிறுமாக இருக்கும் அந்தக் குழந்தை கூடப் புனர்ஜன்மம் எடுத்தது போல் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தது. அதன் தலையில் கூடச் சிறிது எண்ணெய் பளபளத்துக் கொண்டிருந்தது.

எனக்கு ஒரே ஆச்சரியம்.

அவள் எல்லோரையும் கேட்டுக் கொண்டே வந்தாள். "இவள் கெட்ட கேட்டுக்குக் குழந்தை வேறு கேடா?" என்று ஒருவர் சிரித்துக் கொண்டே அடுத்தவரிடம் சொன்னார். பிச்சைக்காரிக்கும், காரைத் தவிர கீழே காலை எடுத்து வைக்காத பெரிய இடத்தார்களுக்கும் மனிதனின் உணர்ச்சிகளும், உறவுகளும் பொது என்பதை உணராமல்...ஆனால் மேல்த்தட்டில் இருப்பவர்கள் தான் குழந்தையை மடிமீது வைத்துப் பாடுபட்டு வளர்த்து ஆளாக்குகிறார்கள். என்ன செய்வது? அவர்கள் தாதிகளுக்கு எங்கே போவார்கள்? ஆனால் பேதமில்லாத குழந்தைக்கு அங்கேதானே தாய்மையை முழுமையாக அனுபவிக்க முடிகிறது! கார் உலகவாசிகளின் குழந்தைக்குப் பிஸ்கோத்தும், பாலும், காரும், தாதியும் கிடைத்தாலும் தாய்மை கிடைப்பதில்லையே!

"அந்த வகையில் இந்தப் பிச்சைக்காரியும் குழந்தையும் பாக்கியசாலிகள்!" என்று எனக்குள் கூறிக் கொண்டேன்.

என்னிடம் அவள் வந்து கைநீட்டிய போது டிக்கெட் வாங்கி மீதியிருந்த மூன்று நயா பைசாவை எடுத்து அவள் வைத்திருந்த அமுதசுரபியில் போட்டேன்.

என்னவோ வாய் குறுகுறுத்தது.

"இன்றைக்கு என்ன விசேஷம்?" என்று சட்டென்று கேட்டு விட்டேன்.

"குழந்தைக்கு இன்னையோட ஒரு வருஷம் ஆவப் போவுதுங்க" என்று கூறினாள் அவள் மிகுந்த மலர்ச்சியுடன்.

அவள் மகிழ்ச்சியைக் காணக் காண எனக்குத் திருப்தி அதிகமாகியது. பக்கத்திலிருந்த சிலர்கூட என் கேள்வியையும் திருப்தியையும் கண்டு முகத்தைச் சிணுக்கினர். மனிதனின் உணர்ச்சியையும், உயிரில் தோன்றும் ஆனந்தத்தையும் அனுபவிக்கத் தெரியாதவர்கள்.

உடனேதான் எனக்கு ஞாபகம் வந்தது. அம்மா காலையில் சொன்னாள். அவளுக்கு ஒன்றுவிட்ட தம்பியாம். பாங்குப் புஸ்தகம் நிறையப் பணமும், மனம் நிறையக் கர்வமும் உடையவனும். அவன் பிள்ளைக்கு ஆண்டு நிறைவென்றும் அதற்கு நான் போக வேண்டுமென்றும், போகும்போது நல்ல விலை உயர்ந்த துணியாய்க் கொடுப்பதற்காக ஒன்றை நான் வாங்கிக் கொண்டு போக வேண்டும் என்றும் சொல்லியிருந்தாள்.

* * *

ஒரு மணி நேரம் முன்னதாகவே காரியாலயத்தை விட்டுப் போக வேண்டும் என்று 'பர்மிஷன்' கேட்டு வாங்கி வருவதற்குள் கண்ணீர் வந்து விட்டது. அம்மா சொல்லி

யிருக்கிறுள். கட்டாயம் 'டாணெ'ன்று ஐந்து மணிக்கு மாமா வீட்டுக்குப் போய்விட வேண்டுமென்று.

நான் டவுனில் இருந்த கடை ஒன்றில் நுழைந்து பச்சை ஸாடினில் ஒரு சின்னக் கவுனை வாங்கிக் கொண்டு பத்தாம் நம்பர் பஸ்ஸில் ஏறினேன்.

அது பெரிய பங்களா தான்; அம்மா சொன்னது போல் வாசலில் இரண்டு கூர்க்காக்கள். தெரு முழுதும் அவர்கள் வீட்டுக்கு வந்திருந்த கார்கள் அடைத்துக் கொண்டிருந்தன. வாசல் காவலாளிகூட நான் உள்ளே நுழைவதை ஒரு மாதிரியாகப் பார்த்தான். ஆனல் என் கையிலிருந்த 'துணிப் பாக்கெட்'டைப் பார்த்துச் சும்மா இருந்து விட்டான். ஹாலில் அவர் எல்லோரையும் வரவேற்றுக் கொண்டிருந்தார். என்னைக் கண்டு ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

ஒரு வேளை அடையாளம் தெரியவில்லையோ என்று அவரைப் பார்த்து வலுவாக வரவழைத்துக் கொண்டு சிரித்தேன்.

"என்னைத் தெரிகிறதா? உங்கள் மருமான் சுந்தரேசன்..."

"ஓஹோ...ருக்மிணி பையனு?" என்று அசுவாரஸ்யமான குரலில் அவர் சொன்னதும் எனக்கு முகம் சிறுத்து விட்டது.

"சரி, சரி! வழியில் நிற்காதே. அப்படி உட்கார்" என்று வேறு அலட்சியமாய்ச்

சொன்னார். வேதனையுடன் உள்ளே சென்று உட்கார்ந்து கொண்டேன். அங்கே வந்திருந்தவர்கள் எல்லோருமே பெரிய மனிதர்கள்தான். ஹால் நிறைய வண்ண விளக்குகள் ஒளி வீசின. புதுப் புடவையும் அலங்காரமுமாய் உலவும் யுவதிகள்.....பணத்தை உடலில் மெழுகி யிருந்தார்கள்.

அப்போது அங்கே வந்தாள் நடுத்தர வயதுள்ள ஒருத்தி...இவள்தான் என் மாமியாக இருக்க வேண்டும். அவள் பின்னுலே வெள்ளைப் புடவை கட்டிக் கொண்டு வந்தவள் தாதியாக இருக்க வேண்டும். அவள் கையில் தான் உடல் முழுதும் பொன்னுக வீற்றிருந்தது ஒரு குழந்தை. இந்தக் குழந்தைக்குத் தான் ஆண்டு நிறைவு போலிருக்கிறது.

அதைக் கவனித்தேன்.

திக்கென்றது.

உடல் முழுவதும் பொன்னும் மின்னி என்ன? கண்களில் ஏக்கம் தேங்கியிருந்தது. உடல் முழுதும் பணம் இழைந்தும் அது ஏன் மகிழ்ச்சியுடன் இல்லை? தாலாட்டிச் சீராட்டி வளர்க்கத் தாதி இருந்தும் கண்களில் சோர்வும், சோகமும் படர்ந்திருப்பது ஏன்? தாய்மையை அது காணுததாலா?

எனக்கு உடனே காலையில் பிச்சைக்காரியின் இடுப்பில் பெருமையுடன் உட்கார்ந்திருந்த குழந்தையின் முகம் தோன்றியது. 'தாய்மையில் குளித்து வளர்ந்த அந்தக் குழந்தைதான் பாக்கியசாலி' என்று என்னுடைய வாய் கூறிக் கொண்டது.



வருவோருக்குக் காப்பி கொடுப்பதும் பலகாரம் கொடுப்பதுமாக ராஜோபசாரம் நடந்து கொண்டிருந்தது. என்னை ஏனென்று கேட்பார் இல்லை. மாமி ஒரு முறை என்னைப் பார்த்துவிட்டுப் புருவத்தை நெளித்து விட்டுப் போனது வேறு வேதனை செய்தது. வண்ண விளக்குகளும், பெரிய மனிதர்களும், ஆடம்பரப் பொருள்களும் அந்தப் பெரிய வீட்டில் இருந்தும்கூடச் சோகம் நிறைந்த இரு விழிகளைக் கண்ட பிறகு அந்த வீடே உயிரற்ற ஜடமாக, உணர்ச்சியற்ற யந்திரங்கள் நடமாடும் கூடமாகக் கண்ணுக்குத் தோன்றியது.

மெல்ல எழுந்து வாசற்புறம் வந்தேன். விடுவிடென்று பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தேன். இன்னமும் இருட்டவில்லை.

* * *

"மாமா வீட்டுக்குப் போய்விட்டுத்தானே வருகிறாய்?" என்று கேட்டாள் அம்மா வந்ததும் வராததுமாக.

"ஆமாம்..." என்று சலிப்புடன் சொல்லிவிட்டு, "ஸாடினில் சட்டை வாங்கியதுதான் மிச்சம். ஆனால் நான் அங்கு அதைக் கொடுக்கவில்லை. ஒருவரும் என்னை மதிக்கக் கூட இல்லை" என்றேன்.

உடனே கையிலிருந்த பையைப் பார்த்தேன். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. வெறும் காகிதப் பைதான் கையிலே இருந்ததே தவிர அதனுள் அந்த சாடின் சட்டையைக் காணவில்லை.

"என்ன விழிக்கிறாய்?" என்றாள் அம்மா.

"வழுவழுப்பான சட்டையல்லவா? வழியில் பையிலிருந்து நழுவி விழுந்து விட்டது போலிருக்கிறது. பஸ்ஸிலிருந்து இறங்கும் போதுகூட இருந்தது நன்ருக ஞாபகமிருக்கிறது. இங்கேதான் வழியில் எங்கேயாவது விழுந்திருக்கும். பார்த்துவிட்டு வருகிறேன்" என்று அவசரம் அவசரமாகக் கிளம்பிக் குளக்கரை பஸ் ஸ்டாண்டு மட்டும் சென்று பார்த்தேன். காணவில்லை. கால்கள் சோர்ந்து போய் விட்டன.

அப்போது—

பிச்சைக்காரி அங்கே ஒரு கடையின் முன் குழந்தையுடன் நின்று கொண்டிருந்தாள். குழந்தை போட்டிருந்த கவுன்...சந்தேகமேயில்லை, நான் வாங்கியதுதான். வழியில் கண்டெடுத்துக் குழந்தைக்குப் போட்டிருக்க வேண்டும். நான் அவசரம் அவசரமாய் அவள் நின்றிருந்த இடத்துக்குப் போனேன். அவள் ஆனந்தத்துடன் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டிருந்தாள். அவளையும் குழந்தையையும் சுற்றிக் கிழவிகளும், கண் இல்லாத பிச்சைக்காரர்களும் மகிழ்ச்சியுடன் குழந்தையின் கன்னங்களில் முத்தமிட்டு, கிள்ளி, அதன் தலையில் பூ வைத்து, அதனுடன் சிரித்து... ஆஹா....

சேர வேண்டிய இடத்தில் தானுகச் சேர்ந்து விட்ட பரிசுப் பொருளையும், அதை ரசித்துக் கொண்டிருந்த மகிழ்ச்சிக் கும்பலையும் கண்டு கண்ணீர் ததும்ப உயிரில் ஒன்றிய திருப்தியுடன் வீடு திரும்பினேன்.

# உச்ச நிலைக்கு விருத்தியடைந்துள்ள

# உன்னத

# விற்பனை.

லோமா உங்கள் கேசத்தை கருமை
யுடன் விளங்கச் செய்வதுடன் அதை
எழிலுடன் பிரகாசிக்கவும் செய்கின்றது.
அதனால்தான் பெரியோரும்,
சிறியோரும், ஆடவரும், பெண்டினரும்,
எல்லோரும் ஒருமுகமாக, இந்தியாவிலும்,
மற்றும் வெளிநாடுகளிலும்
லோமாவையே விரும்பி வாங்குகிறார்கள்.




கேசத்தைக் கருமையாக்குவதில்
பாரினில் புகழ்பெற்றது.




பூரண ஏஜெண்டுகள் :
எம். எம். கம்பாத்வாலா அஹமதாபாத்—1
ஏஜெண்டுகள் :
வி. நரோத்தம் அண்டு கோ. பம்பாய்—2

TAM.

சென்னை ஏஜண்டுகள் ஜே. பாலபாய் & கம்பெனி, 260. எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள் சிக்குல் கதீர் & கோ., 41 & 43. இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# புடவையோ

"முடியாது, முடியவே முடியாது" என்று நெற்றுத் தெறித்தாற்போல் பேசினாள் வஞ்சுளா.

"என் கண்ணே, வஞ்சுளா! உன்னை இந்தப் பஞ்சு கெஞ்சுகிறேன். வஞ்சித்து விடாதே. மஞ்சள் மோகினி!..."

"இதோ பாருங்கள்! உங்கள் நாடக வசனத்தையெல்லாம் மேடையில் வைத்துக் கொள்ளுங்கள்! என்னிடம் பலிக்காது!"

"நீ சொல்லி நான் எதைச் செய்யவில்லை? மணியைப் பார், வஞ்சு! இன்னும் நாலே மணி நேரம்தான் இருக்கிறது. கொஞ்சம் கருணை காட்டு! இந்த ஏழையின் வேண்டுகோள் உன் செவிகளில் ஒன்றும் விழவில்லையே! என் அன்பே! ஆருயிரே!"

"மீண்டும் ஆரம்பித்து விட்டீர்களா? இதோ பாருங்கள்! உங்கள் நாடகத்தில் நீங்கள் கட்டிக்கொள்ள என் பட்டுப் புடவைகளைக் கண்டிப்பாகக் கொடுக்க முடியாது!"

"வஞ்சு! தயவுசெய்து இந்த ஒரு முறை மட்டும்...பிறகு உன்னை நான் கேட்கவே மாட்டேன்!"

"முதலில் நீங்கள் நாடகத்தில் நடிப்பதே எனக்கு விருப்பமில்லை!"

"இரண்டாவது..."

"நீங்கள் பெண் வேடத்தில் நடிப்பது இம்மியும் பிடிக்கவில்லை."

"அப்புறம்?"

"கண்ட தடியன்கள் உங்கள் மேல் கையை வைத்து, 'கண்ணே, முத்தே, கற்கண்டே!' என்று கொஞ்சும்போது எனக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வருகிறது."

"ஏன், உன்னிடம் நான் அப்படியெல்லாம் பேசுவது இல்லை என்றா?"

"போதுமே உங்கள் சமர்த்து! நீங்கள் சாதாரணமாகப் பேசுவதே எனக்குச் சகிக்கவில்லையே...!"

"உன் பீரோ சாவியை என் கையில் கொடுத்து விடு! பிறகு பேசுகிறேனா என்று நீயே பார்!"

"உங்கள் தொந்தரவு சகிக்க முடியாமல் தான் இப்பொழுது கொடுக்கிறேன். இப்படிப் பல்லை இளித்துக் கொண்டு கெஞ்சினால் எனக்குப் பொல்லாத கோபம் வரும்!"

வஞ்சு வீசியெறிந்த சாவியைத் தேர்ந்த கிரிக்கட் ஆட்டக்காரன் பிடிப்பது போலப் பிடித்தான் பஞ்சு. பீரோவைத் திறந்து அதில் உள்ள புடவைகளையெல்லாம் எடுத்துத் தன் பெட்டியில் திணித்துக்கொண்டான்.

"இவ்வளவு புடவைகள் எதற்கு?" என்று கேட்டாள் வஞ்சு!

"என்ன இப்படிக் கேட்டு விட்டாய்? நான் பதினெட்டு வயது வாலிபக் குமரியாக இருக்கும் சமயம் ஆரம்பிக்கும் நாடகக் கதை எனக்குக் கொள்ளுப் பேரன் பிறக்கும் வரை போகிறது. ஐம்பது வருஷங்களுக்கு ஒரு பெண் ஒரே புடவையையா உடுத்திக் கொண்டிருப்பாள்? அதுவும் பார், இப்போதெல்லாம் எவ்வளவுக்கெவ்வளவு புடவை மாற்றுகிறேமோ, அவ்வளவுக்கவ்வளவு மதிப்பு அதிகம்."

"எனக்கு இந்தக் கதையெல்லாம் வேண்டாம்! ஞாபகமாகக் கொண்டு போய் ஜாக்கிரதையாகத் திருப்பிக் கொண்டு வாருங்கள். முன்பு ஒரு தரம் என் கல்யாணப் புடவையை எடுத்துக் கொண்டு போய் ஒரு முழம் கிழித்துக் கொண்டு வந்தீர்கள்!"

"அது என்மேல் தவறா? கதாநாயகி உட்காருவதற்கென்று போட்ட நாற்காலியில் ஆணி நீட்டிக் கொண்டிருந்ததைக் கவனிக்காத அந்த மடையன் 'ஸ்டேஜ் டைரக்டர்...'"

"யார்மேல் குற்றம் இருந்தால் என்ன? கடைசியில் என் புடவைதானே கிழிந்தது?"

"நாற்காலியை முதலில் சரிபார்த்து விட்டுப் பிறகு உட்காருகிறேன், போதுமா?"

"அரிதாரத்தைக் கையில் தடவிக் கொள்கிறேன் என்று என் ஆரஞ்சுப் புடவையைச் சிவப்பாக ஆக்கிக் கொண்டு வந்தீர்களே, அதுபோல் மறுபடியும் செய்து விடாதீர்கள்!"

"அது மாதிரியெல்லாம் இனிமேல் நடக்காது, நீ கவலைப்படாதே!"

"அவன் கேட்டான், இவன் கேட்டான், அப்படி இப்படி என்று வேறு எவருக்கும் கட்டிக் கொள்ளக் கொடுக்கக் கூடாது!"

"எனக்குத் தெரியாதா? என் அருமை வஞ்சுவின் உடலைச் சுற்றிப் படர்ந்த கொடி வேறு எங்கேயும் படர அனுமதிப்பேனா?"

"ஐயோ, ஐயோ! நீங்கள் சாதாரணமாகப் பேசவே மாட்டீர்களா?"

"வஞ்சு, நேரம் ஆகிவிட்டது! நான் வரட்டுமா? இப்போது போனால்தான் 'மேக்கப்' செய்து கொள்ளச் சரியாக இருக்கும்! ஆமாம், நீ நாடகத்துக்கு வருகிறாய், இல்லையா?"

"நான் எதற்கு? உங்கள் நாடகத்தை வீட்டில் கேட்டுப் பார்த்து ரசித்து அவஸ்தைப்பட்ட என்னைக் கொஞ்ச நேரமாவது நிம்மதியாக இருக்க விடுங்கள்!"

"சரி! உன் இஷ்டம்!"

"புடவைகளை எண்ணிக் கொண்டீர்களா?"

"அப்பப்பா! இதோ பார் ஸ்கை ப்ளு, ரோஸ், சாக்லெட், கத்திரிப்பூ நாலு புடவைகள்தான்!"

"ஜாக்கிரதையாகப் போய் வாருங்கள்!"

பஞ்சு வீட்டு வாசலுக்கு வரவும் ஒரு டாக்ஸி அதைக் கடக்கவும் சரியாக இருந்தது. அதைக் கைதட்டி நிறுத்திப் பின்னால் ஏறி அமர்ந்து கொண்டு நிருத்த கான நிரந்தர சபாவுக்கு வண்டியை விட உத்தரவிட்டான்.

டாக்ஸி சபாவை நோக்கி வேகமாகப் பறந்துகொண்டிருந்தது.

பஞ்சு ஆசனத்தில் சாய்ந்தபடி ஆழ்ந்த யோசனையில் இருந்தான். 'எட்டாவது ஸீனி'ல் 'ஸ்பாட்' கொடுக்கச் சொல்ல வேண்டும்! வழக்கமாகப் பதினைந்தாவது 'ஸீனி'ல்தான் அவனுக்கு வசனங்கள் மறந்து போகின்றன. அந்த வசன கர்த்தா ஒரு விசித்திரப் பிறவி. அவன் எழுதியதில் கால் மாத்திரை குறைத்தால் துர்வாசனாகிவிடுவான்.'

டாக்ஸி சபா வாயிலில் நின்றது. யந்திரம் போல் பஞ்சு இறங்கினான். டிரைவர் சொன்ன பணத்தைக் கொடுத்து விட்டு ஒப்பனை செய்து கொள்ளும் அறையை நோக்கி விரைந்தான். ஒப்பனை செய்யும் ஏகாம்பரம் இவனுக்காகவே காத்துக் கொண்டிருந்ததால் நேரடியாக மேக்கப்பில் ஈடுபட்டுவிட்டான்.

மணி ஐந்தரை ஆகிவிட்டது. சபை அரங்கில் ஜனத்திரள்கூட ஆரம்பித்தது. 'ஸ்டேஜ் டைரக்டர்' தம் ஊதுகுழலை ஊதி நடிகர்களைத் தயாராக இருக்கும்படி உத்தரவிட்டு விட்டார். பஞ்சு அவசரம் அவசரமாகப் புடவை உடுத்திக் கொள்ளப் பெட்டியைத் தேடினான். அது எங்கே? எங்கே? எங்கே?

பஞ்சு தன் தலையில் ஓங்கி அறைந்து கொண்டான். அந்த அறையின் வேகத்தில் டோப்பா கூடச் சற்று அசைந்து கொடுத்தது. டாக்ஸியின் பின் சீட்டில் வைத்த அந்தப் பெட்டியை ஞாபகமறதியால் கொண்டு வராமல் விட்டுவிட்ட தன் புத்தியை நொந்து கொண்டான்.

கலவரம் மறுகணம் அச்சமாக மாறியது. இரவு வஞ்சுளாவுக்கு என்ன பதில் சொல்வது? புடவை கசங்கியதற்கே கண்ணைக் கசக்கும் அவள், காணமல் போய் விட்டது என்று தெரிந்தால் என்ன செய்வாள்? நினைக்க முடியாத பயங்கரம்!

"அற்புதமான முக பாவம்! பிரமாதம்!!" என்று பாராட்டியபடி வந்தான் 'வில்லன்' சந்துரு.

பஞ்சு தன் கதையைச் சொல்லி அழுதான்.

"அட, பைத்தியக்காரா! போலீஸைப் போனில் கூப்பிட்டு விஷயத்தைச் சொல்லு! இன்னும் இரண்டு மணி நேரத்துக்குள் உன் பெட்டி உன்னைத் தேடி வந்து விடும்!"

பஞ்சு டெலிபோனுக்கு விரைந்து நடந்ததையெல்லாம் விளக்கினான்.

"ஏன், ஸார்! டாக்ஸி நம்பர் தெரியுமா?" என்றது அதிகாரக் குரல்.

"பார்க்கவில்லையே, ஸார்!"



"டிரைவரை அடையாளம் கண்டுபிடிக்க முடியுமா?"

"முகத்தை நான் சரியாகப் பார்க்க வில்லையே, ஸார்! தொப்பி போட்டு மறைத்துக் கொண்டிருந்தானே?"

"இப்படிச் சொன்னால் எப்படி ஸார்? எங்களால் முடிந்ததைச் செய்கிறோம்!"

"எப்பொழுது ஸார் புடவை கிடைக்கும்?"

"திட்டமாகச் சொல்ல முடியாது! ஒரு வாரம் பத்து நாட்கள் ஆகலாம்!"

பத்து நாட்களா என்று மயங்கி விழப்போன பஞ்சுவைத் தாங்கிப் பிடித்த சந்துரு அவனை மேடைக்கு அழைத்து வரவும், நாடகத்தின் முதல் மணி ஒலிக்கவும் சரியாக இருந்தது. அன்றைய நாடகத்தின் கதாநாயகி காட்சி ஜோடனைக்காகக் கொண்டு வந்திருந்த துணியைப் புடவையாகச் சுற்றிக் கொண்டு நாடகத்தை ஒப்பேற்றி விட்டாள்!

நாடகம் முடிந்தவுடன் பஞ்சுவின் நடிப்பைச் சிலாகித்துப் பலர் கைகுலுக்கினார்கள். குறிப்பாக, சோகக் கட்டங்களில் அவனுடைய நடிப்பின் திறன் தெரிந்தது என்று கூறினார்கள். சோகமாக நடிக்க வேண்டியபோது அவன் நாடகத்தில் நினைவுள்ளவனாகவா இருந்தான்? காணமல் போன புடவைகளை எண்ணியவுடன் துக்கம் வெள்ளமாக ஓடி வந்து அலை அலையாக அல்லவா அவன் முகத்தில் பிரதிபலித்தது?

பஞ்சு வீடு திரும்பும்போது மணி பதினொன்று. வஞ்சுளா அவனுக்காகக் காத்திருந்தாள். அவள் கேட்ட முதல் கேள்வி, "புடவைப் பெட்டி எங்கே?" என்பதுதான்.

"பெட்டி.....பெட்டி..." என்று குழறினான் பஞ்சு.

"என்ன உளறுகிறீர்கள்? உடம்பு சரியாக இல்லையா? பெட்டி எங்கே? புடவை எங்கே?"

யோசித்து நம்பும்படி புளுகப் பஞ்சுவுக்குச் சற்று அவகாசம் தேவைப்பட்டது.

"புடவைகள் எவ்வளவு அழுக்காக இருந்தன, தெரியுமா? அவைகளையெல்லாம் லாண்டிரியில் போட்டிருக்கிறேன். நாலு நாட்களில் அவை கிடைத்து விடும்!"

"உம்! நானும் எவ்வளவு நாட்களாகச் சொல்லி வருகிறேன்? இப்பொழுதாவது செய்தீர்களே, சந்தோஷம்! ஆமாம், 'சூட்கேஸை'யும் வெளுக்கப் போட்டிருக்கிறீர்களோ?"

"உன் வேடிக்கை எனக்கு இப்போது ரசிக்கவில்லை. பெட்டி சரியாக

இல்லை. 'ரிப்பேருக்குக் கொடுத்திருக்கிறேன்!''

''ஆமாம், நாடகம் எப்பொழுது முடிந்தது?''

''பத்து மணிக்கு. ஏன்?''

''இல்லை. ஞாயிற்றுக்கிழமையும் அதுவுமாக இரவு பத்து மணிக்கு மேல் எந்த லாண்டிரியையும் 'ஷ்மார்ட்'டையும் திறந்து வைத்துக் கொண்டிருந்தார்களாம்?''

''வெளுக்கப் போட்டிருக்கிறேன் என்றால் லாண்டிரியில் கொண்டு கொடுத்தேன் என்று அர்த்தமா? சபா வேலைக்காரனிடம் கொடுத்திருக்கிறேன். நாளைக் காலையில் அவன் போட்டு விடுவான்.''

நான்கு நாட்கள் நாலு விநாடியாக மறைந்தன. அதற்குள் போலீஸ் ஸ்டேஷனை நூறு தடவையாவது பஞ்சு முற்றுகையிட்டிருப்பான். அவன் தலையைக் கண்டவுடன் அதிகாரிகள் கையை விரிக்கும் அளவுக்குப் பரிச்சயமாகி விட்டான்.

பஞ்சு ஒரு திடமான முடிவுடன் எழுந்தான். தன் பாங்குக் கணக்கிலிருந்து அறுநூறு ரூபாய்ப் பணத்தைப் பெற்றுக்கொண்டு புடவைக் கடைக்கு விரைந்தான். அவன் மூளையைக் குடைந்து வஞ்சுளாவின் புடவைகளின் கலர், பார்டர் ஆகியவற்றை மனத்தில் எண்ணிப் பார்த்து நான்கு புடவைகளைப் பொறுக்கி எடுத்தான். கையிலிருந்த பணம் புடவைக் கடைக்கு மாறிய பிறகு, ஞாபகமாகப் புடவையிலிருந்த விலாசச் சீட்டுகளைக் கத்திரித்து எறிந்தான்.

பக்கத்திலுள்ள ஒரு கடையில் சென்று பழைய பெட்டி அளவுக்கு ஒன்று வாங்கி, அதனுள் வைத்து வீடு போய்ச் சேர்ந்தான்.

புடவைகளைப் பார்த்த வஞ்சுளா, ''மிகவும் நன்றாகச் சலவை செய்திருக்கிறார்கள்! புதிதுபோலவே இருக்கிறதே!'' என்று வியந்து போனாள்.

நீலப் புடவையைக் கையில் எடுத்தவளின் முகத்தில் ஓர் ஆச்சரியக் குறி தோன்றியது.

''என்னா, இதைப் பாருங்கள்! என் புடவையில் அன்னப்பட்சி அல்லவா பார்டர்! இதில் கிளி போட்டிருக்கிறதே!'' என்றாள்.

''வஞ்சு, நீ புடவைகளைக் கட்டிக் கொள்ள ஆசைப்படுகிறாயே தவிர, அதைச் சரியாகப் பார்ப்பதுகூடக் கிடையாது. எனக்கு உள்ள ஞாபகம் கூட உனக்கு இல்லை!''

வஞ்சுளா புடவைகளைப் பீரோவில் வைத்தபிறகு பஞ்சு ஒரு நீண்ட பெருமூச்சை இழுத்துவிட்டு மன நிம்மதியுடன் இருந்தான்.



ஒரு வாரம் சென்றிருக்கும். அன்று பஞ்சு ஆபீஸிலிருந்து வந்தவுடன் வஞ்சுளா அவனைப் புன்னகையுடன் வரவேற்றாள்.

''என்ன! நீங்கள் மறுபடியும் எப்போது நாடகம் நடிக்கப் போகிறீர்கள்?'' என்றாள்.

''ஏன்! நான்தான் நடிப்பதையே விட்டுவிட்டேனே!''

''புடவை கிடைக்காததால் நடிப்பதை நிறுத்தவேண்டாம்! வேண்டியபுடவை தருகிறேன்.''

அவன் கையைப் பிடித்து இழுத்தபடி உள்ளே சென்றாள் அவள்! மேஜையின் மேல் அவனுடைய பழைய தோல்பெட்டியும் புதிய தோல் பெட்டியும் அருகருகில் இருக்க அவைகளுக்குள்ளே பட்டுப் புடவைகள் தகதக வென்று மின்னிக் கொண்டிருந்தன.

''இது என்ன?...'' என்று தடுமாறிய பஞ்சுவின் கையில் வஞ்சுளா ஒரு கடிதத்தைத் திணித்தாள். நடுங்கும் கைகளுடன் கடிதத்தைப் பிரித்தான் நடிகன் பஞ்சு!

''சௌ. வஞ்சுளாவுக்கு,

ஆசீர்வாதம். சென்ற பதினைந்தாம் நாள் நானும் அண்ணாவும் ஊருக்குப் புறப்பட்டு வந்தோமல்லவா? எங்கள் சாமான்களுடன் டாக்ஸியிலிருந்த ஒரு 'சூட்கேஸை'யும் தவறி எடுத்துக் கொண்டு வந்துவிட்டோம். பெட்டியைப் பார்த்தபோது எங்கேயோ பரிச்சயமானது போல் தெரியவே திறந்து பார்த்தேன். அதில் உன் புடவைகள் நான்கும், பெட்டியின் அடியில் உன்னுடைய கணவரின் புகைப்படமும் இருந்தன. 'உன் கணவர் இதை டாக்ஸியில் விட்டு மறந்திருக்க வேண்டும்' என்று உன் அண்ணா சொல்லி, 'நல்லவேளையாக நம் கையில் கிடைத்ததே' என்று சந்தோஷப்பட்டார்.

உன் கணவர் சில நாட்கள் தவிக்கட்டும் என்றும், அவர் ஞாபக மறதிக்கு அதுதான் தண்டனை என்றும் உன் அண்ணா அபிப்பிராயப்பட்டதால் இது வரை எழுதவில்லை.

பெட்டியைச் சென்னைவரும் அடுத்த வீட்டு மாமியிடம் கொடுத்தனுப்பியிருக்கிறேன். வந்து சேர்ந்த விவரம் தெரிவிக்கவும். கமலம்.''

கடிதத்தைப் படித்து முடித்த பஞ்சுவின் முகத்தில் அசடு வழிந்தது. நொடிப் பொழுதில் முக பாவம் மாற்றுவதில் வல்ல நடிகன் பஞ்சு, விளக்கெண்ணெய்சாப்பிட்ட குழந்தை போலத் திருதிருவென்று விழித்தான்!

# பிரியமுள்ள உன் !



ஸாத்தே சாக்லேட்கள்




ஸாத்தே பிஸ்கட் அண்டு சாக்லேட் கம். லிட்., பூனா-2

Heros' 109 TAM

# வேங்கையின் மைந்தன்

பத்தாம் அத்தியாயம்

## விடி வெள்ளி விழா

**சோ**ழ சாம்ராஜ்யத்தின் ஒன்பது மண்டலங்களிலும் வெற்றி விழாவுக்கான முன்னேற்பாடுகள் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. கிராமங்கள், கூற்றங்கள், நாடுகள், வள நாடுகள் இப்படித் தன்னகத்தே பல சிறிய பெரிய எல்லைகளை வகுத்துக் கொண்டிருந்த ஒவ்வொரு மண்டலமும் விழாவில் முதன்மை பெறுவதற்காக முயன்று கொண்டிருந்தது. தென்பாண்டி மண்டலத்தில் மட்டும் ஒரு பக்கம் உற்சாகமும் மறுபக்கம் புகைச்சலும் காணப்பட்டன.

தஞ்சை அரண்மனை ஆலோசனை மண்டபத்தில் மாமன்னர் பெரியதோர் ஆசனத்தில் சாய்ந்தவாறு





வீற்றிருந்தார். அவர் அருகில் கொடும்பாளூர்ப் பெரிய வேளார் பணிவோடு அமர்ந்து விழாச் செய்திகளை விவரிக்கத் தொடங்கினார். சாம்ராஜ்யம் முழுதும் கோலாகலமாக வெற்றி விழாவைக் கொண்டாடுவதற்கான திட்டங்கள் உருப்பெற்றிருந்தன.

"ஆமாம்! ஒரு நாள் கூத்தாக இது போய்விடக் கூடாது; ஒவ்வொருவரின் வாழ்விலும் மறக்க முடியாத எண்ணங்களை நாம் அந்த ஒரு நாளில் ஊன்றிவிட வேண்டும்" என்றார் மாமன்னர்.

"சக்கரவர்த்திகள் அளித்துள்ள செய்தியை ஒவ்வொரு கிராமத் தலைவருக்கும் அனுப்பச் செய்திருக்கிறேன். விழாவுக்கான திட்டங்களும் அவர்களை எட்டியிருக்கின்றன" என்றார் பெரிய வேளார்.

"இந்த விழா நம்முடைய மக்களின் தன்னம்பிக்கை விழாவாக இருக்க வேண்டும். நாம் எடுத்த காரியம் எதி

அகிலன்

லும் வெற்றி பெற்றுத் திருவோம் என்ற துணிவு அவர்களுக்கு இதனால் ஏற்பட வேண்டும். சோர்வும், சோம்பலும், கோழைத்தனமும் இனி அணுவளவும் இந்தத் தமிழ் மண்ணில் ஒட்டிக்கொண்டிருக்கக் கூடாது. இது மக்களின் சக்தியை மக்களுக்கு உணர்த்தும் விழா-தெரிந்ததா பெரியவேளார் அவர்களே?''

''பாண்டியர்கள் இப்போதே பதறத் தொடங்கி விட்டார்கள்'' என்றார் பெரிய வேளார்.

''பாண்டியர்கள் கிடக்கட்டும். வடக்கு எல்லையின் நிலைமை என்ன? நான் ஈழத்துக்குச் சென்றிருந்த போது வடக்கு எல்லையில் பகைவர்கள் ஏதேதோ சிறிய தொல்லைகள் கொடுக்க முற்பட்டதாகக் கூறினீர்களே!''

''பயங்காட்டி விளையாடுகிறார்கள்'' என்று அலட்சியமாகச் சிரித்தார் பெரிய வேளார். ''மாதண்ட நாயகர் அரையன் ராஜராஜனுக்கு அவர்களின் துரோக விளையாட்டுக்களை முளையிலேயே கிள்ளி எறிந்து விட வேண்டுமென்ற துடிப்பு. நான்தான் இப்போதைக்கு அமைதியாக இருக்கும்படி செய்தி விடுத்தேன். பாவம்! இதுவரையில் கால் வயிற்றுக் கஞ்சிகூடக் கிடைக்காமல் திண்டாடியவர்களுக்கு இப்போதுதான் அரை வயிறு நிரம்பத் தொடங்கியிருக்கிறது. அதற்குள் அவர்களுக்குத் தினவு தாங்கவில்லை. செருக்கு மிகுதியால் தங்களைத் தாங்களே அழித்துக்கொள்ளப் பார்க்கிறார்கள்.''

''என்றாலும் நாம் கவனமாக இருக்க வேண்டியதுதான்'' என்றார் சக்கரவர்த்தி. ''பகை சூழ்ந்த உலகில்தான் நாம் வாழ்கிறோம். சாவுக்கு அஞ்சுகிறவர்களுக்கு இங்கு வாழ்வில்லை. இதை நம்மவர்கள் மறந்துவிடவே கூடாது. நமது எதிர்காலப் புது மலர்ச்சிக்கு நாட்டு மக்களின் மனத் திண்மையும் உழைப்புமே மூலாதாரங்கள்.''

''தாங்கள் ஈழத்திலிருந்து கொண்டு வந்துள்ள மணி முடி நமது பொற்காலத்தின் விடி வெள்ளி. இந்த ஒளி காட்டும் நம்பிக்கை வழியில் கட்டாயம் நம்மவர்கள் தலை நிமிர்ந்து நடப்பார்கள்'' என்று பெருமையோடு கூறினார் பெரிய வேளார்.

''ஆமாம், காஞ்சியிலிருந்து ராஜாதிராஜன் எப்போது இங்கு திரும்புகிறான்? வந்தவுடன் அவனைப் பார்த்துவிட்டு நான் பழையாறைக்குப் புறப்பட வேண்டும்'' என்று கூறினார் சக்கரவர்த்தி.

''இரண்டு மூன்று தினங்களில் வந்து சேரக் கூடுமென்று செய்தி வந்திருக்கிறது. முன்பே காஞ்சிமாநகரை விட்டுக் கிளம்பி விட்டாராம். வெற்றி விழாவின்போது தாங்களும் இளவரசரோடு தலைநகரில் இருந்தால்...'' என்று, பணிவோடு தஞ்சைமா நகரில் அவரைத்



தங்கும்படி வேண்டுகோள் விடுத்தார் மதுராந்தக வேளார்.

"விழாவின் போது நான் இருக்க வேண்டிய இடம் பழையாறைதான்" என்றார் மாமன்னர். "பழையாறையைச் சுற்றியுள்ள கிராமங்களிலிருந்து ஐம்பதினாயிரம் போர்வீரர்களுக்கு மேல் ஈழத்துக்கு வந்திருந்தார்கள். ஈழப் பெரும் படையின் பிறப்பிடமே பழையாறை. அதற்கு வடக்கே இரண்டு மூன்று காதம் வரையிலு மிருந்து நாம் வீரர்களைப் பொறுக்கி எடுத்துச் சென்றிருக்கிறோம். பத்தாயிரம் வீரர்களுக்கு மேல் ஈழ நாட்டில் உயிர் இழந்திருக்கிறார்கள். மேலும் பத்துப் பன்னிரண்டாயிரம் பேர்வரை படுகாயமுற்றுத் திரும்பி யிருக்கிறார்கள். வெற்றிக்கு மூல காரணமான வீரர்களின் குடியிருப்புக்கு நான் செல்வதுதானே முறை?"

"சித்தம், சக்கரவர்த்திகளே!" என்றார் பெரிய வேளார்.

"ராஜாதிராஜன் தஞ்சையில் இருக்கட்டும். நீங்கள் கொடும்பாளூருக்குச் சென்று வாருங்கள். காஞ்சியை மாதண்ட நாயகர் அரையன் ராஜராஜன் கவனித்துக் கொள்வார். மதுரைக்கு...மதுரைக்கு..." என்று பேச்சை முடிக்காமல் தயங்கினார் இராஜேந்திரர்.

சிறு பொழுது அப்படியே யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

பணியாள் ஓடிவந்து வல்லவரையரும் ஈராயிரம் பல்லவரையரும் சக்கரவர்த்தியைக் காண வந்து கொண்டிருப்பதாகத் தெரிவித்தான். அவனிடம் அவர்களை அழைத்து வரச் சொல்லி விட்டு, ஆசனத்தில் நிமிர்ந்து உட்கார்ந்தார் மாமன்னர். அவர்கள் வந்தவுடன் ஈராயிரம் பல்லவரையரை உற்றுப் பார்த்தார்.

"பல்லவரையர் அவர்களே! பாண்டியர்கள் மூவரும் என்ன மறுமொழி கூறியிருக்கிறார்கள்?"

"விழாவில் பங்குகொள்வதற்கு அவர்களுக்கு விருப்ப மில்லை. அதை வெளிப்படையாகக் கூறிவிட்டார்கள். மக்களது உற்சாகத்தைக் குலைப்பதற்கு மறைமுகமான முயற்சிகள் நடை பெற்று வருகின்றன. பாண்டியர்களுக்கு உரிய முடியை நாம் கவர்ந்து கொண்டு வந்து விட்டோமாம். சோழர்களுடைய வெற்றி விழாவில் பாண்டிய நாட்டு மக்கள் கலந்து கொள்வது தவறாகுமாம்."

"போகட்டும்! வேறு ஏதேனும் முக்கியமான செய்திகள்?"

"வெற்றி விழாவன்று சிறிய இளவரசர் சுந்தரசோழருக்கு மதுரையில் நாம் இளவரசுப் பட்டம் கட்டக் கூடும் என்று பாண்டியர்கள் எதிர்பார்க்கிறார்கள். ஈழத்திலிருந்து கொண்டு வந்த முடியே இளவரசின் முடியாகப் போகிறதாம். மதுரைப் புது மாளிகையில் இந்த முடிசூட்டு விழா நடக்குமானால், அந்த மாளிகையைத் தகர்த்து விட வேண்டு மென்பது அவர்கள் திட்டம். விழாவன்று ஏதேனும் இப்படி நிகழக் கூடுமென்று தெரிந்து, எச்சரிக்கையோடு படைகளையெல்லாம் இரட்டி வைத்திருக்கிறேன்."

"அவர்கள் ஓரளவு நம்மைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்; ஆனால் சரியாய்ப் புரிந்து கொள்ள வில்லை" என்றார் சக்கரவர்த்தி. "இப்போது மதுரையில் இருக்கும் சுந்தர சோழனை விழாவன்று **சுந்தர சோழ பாண்டியன்** என்ற முறையில் பாண்டிய நாட்டு மக்களுக்கு அறிமுகம் செய்து வையுங்கள். சோழ, சேர, பாண்டியர்கள் அனைவருமே தமிழர்கள் என்பதை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். நம்முடைய பழைய வரலாற்றில், வடக்கே அசோகரது சாம்ராஜ்யம் பரவி வந்த காலத்தில் மூவேந்தர்களும் ஒரு வேந்தரின் கீழ் ஒன்றி யிருந்து, தங்கள் ஒற்றுமையை அவருக்கு வலியுறுத்தி யிருக்கிறார்கள். அசோகரது ஆட்சி இங்கு எட்டாமல், அவர் நம்முடன் நட்புறவு பூண்டதற்குக் காரணம் அந்த ஒற்றுமைதான். வடக்கு வாயிலில் நம்மை அழிக்கக் காத்து நிற்கும் மேலைச் சளுக்கப் பகைவரைப் பற்றிப் பாண்டி நாட்டு மக்களிடம் கூறுங்கள். பகைவர்களோடு உறவாடித் தமிழ் இனத்துக்கு இழுக்குத் தேடுபவர்கள் தங்களைப் பாண்டியர்கள் என்று கூறிக்கொள்வதை விட, சுந்தர சோழனுக்கு அந்தப் பெயர் மிகவும் பொருந்தும் என்பதை அவர்களுக்கு விளக்கிச் சொல்லுங்கள்."

இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, "அன்று ஏதேனும் தகாத செயல்கள் நடந்தால்...?" என்று கேட்டார் ஈராயிரம் பல்லவரையர்.

"நடக்காது; நடக்கவும் விடக் கூடாது!" என்றார் மாமன்னர் கடுமையான குரலில்.

அது வரையில் அமைதியோடிருந்த வல்லவரையர் ஈராயிரம் பல்லவரையரை நோக்கிக் கூறலானார்:

"நமது கைக்கோளப் படை வீரர்களில் பாதிப் பகுதியினரை அன்று பொதுமக்களின் உடையில் மற்றவர்களுடன் கலந்து கொள்ளச் செய்யுங்கள். தெருவுக்குத் தெரு, மூலைக்குமூலை களியாட்டங்களும் கூத்துக்களும் நடத்துவோம். பாண்டிய மன்னர்கள் மேலைச் சளுக்கர்களோடும், ஈழத்து அமைச்சரோடும் சேர்ந்துகொண்டு புரியும் சதிச்

# பழமைக் கொள்கைகள் மேலான வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கின்றனவா?



இக்காலத்து மனிதர்கள் என்று தற்பெருமை பேசும் பற்பலர் உண்மையில் பழமைக் கொள்கைகளையும் தப்பெண்ணங்களையும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வாழ்க்கையை மேம்படுத்த நமக்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களை வெறுத்துக்கொள்கிறார்கள்.

சமையல் கொழுப்பு விஷயத்தையே உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்களேன். எவ்வளவோ பேர்கள் சொல்லுகிறார்கள்: "வனஸ்பதியால் சமைத்த சாப்பாட்டை நான் தொடுவதே கிடையாது. செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட கொழுப்பல்லவா அது! இயற்கையான கொழுப்புக்கு ஈடாகுமா?". ஆனால் உண்மையென்னவென்றால் வனஸ்பதியைப் பொறுத்த வரையில் இயற்கைக்கு மாறாக எதுவுமே கிடையாது. உற்பத்தி செய்கையில் மேற்கொள்ளும் கண்டிப்பான கட்டுப்பாட்டை வேண்டுமானால் குறையாகச் சொல்லலாம்!

## உற்பத்தியின்போது கண்டிப்பான கட்டுப்பாடு

வனஸ்பதி தூய்மையான தாவரக் கொழுப்பு. அது வேர்க்கடலை எண்ணெய் மற்றும் நல்லெண்ணெயை சுத்தப்படுத்தி தயாரிக்கப்படுகிறது. மிகுந்த கண்காணிப்பின் கீழ் கடுமையான நிபந்தனைகளுக்குட்பட்டு சுகாதார சுத்தமான நவீன தொழிற்சாலைகளிலே அது தயாரிக்கப்படுகிறது. வனஸ்பதி மிகவும் சுத்தமானது மட்டுமல்லாமல் எளிதில் ஜீரணிக்கக்கூடியதாயிருக்கிறது. அது சகல சமையலுக்கும் சாலச் சிறந்தது. ஏனெனில் அது உணவுப்பொருள்களின் சுவையை பரிமளிக்கச் செய்கிறது. மேலும், வனஸ்பதியின் ஒவ்வொரு அவுன்ஸும் பூர்ண போஷாக்கு வாய்ந்ததாயிருப்பதால் அதை வாங்குவதிலும் உபயோகிப்பதிலும் சிக்கனமேற்படுகிறது.

## ஆரோக்கியமான வாழ்வுக்கு அவசியமானது

திடகாத்திரமாகவும் ஆரோக்கியத்துடனும் இருக்க ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு குறைந்தது இரண்டு அவுன்ஸாவது கொழுப்புச் சத்து தேவைப்படுகிறது என்பது விஞ்ஞானிகள் நிரூபித்துள்ள உண்மை. இந்த அளவு கொழுப்புச் சத்தை தூய்மையாகவும், சிக்கனமாகவும், சுவைக்கினியதாகவும் வனஸ்பதி அளிக்கிறது. ஆரோக்கியம் தழைத்து, வாழ்வு வளம்பெற நீங்களும் இன்றுமுதல் வனஸ்பதியை உபயோகிக்கத் தொடங்கலாமே!

**வனஸ்பதி — இல்லாளுக்கு வரப்பிரசாதம்**

தி வனஸ்பதி மான்யுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா ஸ்தாபனத்தினால் வெளியிடப்பட்டது

செயல்கள் அன்று அம்பலமாக்கப்பட வேண்டும். இனி சிறிய இளவரசர் சுந்தர சோழரே மக்களின் எதிர்காலப் பாண்டியர் என்பதை நாம் சூசகமாக அறிவித்து விடுவோம்.''

''ஓராண்டு காலமாக அவர்கள் நமக்கு எதிராகப் பொய்க் கூற்றைப் பரப்பி வருகிறார்கள். அதை ஒரே நாளில் மாற்ற முடியுமா?'' என்றார் பெரிய வேளார்.

''ஓராண்டுப் பொய்யை ஒருநாள் உண்மை கூறி வெல்வதென்றால் கடினந்தான். ஆனால் உண்மைக்கு வலிமை அதிகம். நாளடைவில் அது தானாகக் கிளைத்துத் தழைத்து நாட்டுப்புறங்கள் தோறும் பரவிவிடும்'' என்று கூறினார் சக்கரவர்த்தி.

பின்னர், எதிர்பாராத தாக்குதல் நிகழ்ந்தால் எப்படி நடந்து கொள்வதென்பதைக் கூறி விட்டு, ''ஆத்திரம் மூட்டக்கூடிய சிறு நிகழ்ச்சிகள் நடந்தால் பொறுமை இழக்க வேண்டாம். ஆனால் அவற்றுக்குப் பின்னால் அபாயம் இருந்தால் கவனிக்கத் தவறவும் வேண்டாம்'' என்றார்.

சிறிய இளவரசன் சுந்தரசோழனும் சேனாபதி கிருஷ்ணன்ராமனும் அப்போது மதுரையில் இருந்தார்கள். அவர்களோடு ஈராயிரம் பல்லவரையரும் தமது படை வீரர்களுடன் சேர்ந்து கொள்வதென்று ஏற்பாடாயிற்று.

ஆலோசனை முடிந்த பின்பு அனைவரும் எழுந்து மண்டபத்துக்கு வெளியே நடந்தார்கள். தூரத்தில் ஒரு தூணின் ஓரமாக இளங்கோவும் அரண்மனை வைத்தியரும் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. பெரியவர்களைக் கண்டவுடன் மெதுவாக அந்த இடத்திலிருந்து நழுவப் பார்த்தான் இளங்கோ.

அவனுடைய தோள் பட்டையைக் கூர்ந்து நோக்கிய வல்லவரையர், ''இளங்கோ! என்ன இது? திரும்பவும் ஏன் கட்டுப்போட்டிருக்கிறாய்?'' என்றார்.

அதற்குள் பெரியவர்கள் அனைவரும் அவனுக்கு அருகில் வந்து விட்டார்கள். எல்லோருடைய கண்களும் அவன் மீது நிலைத்திருந்தன.

''ஒன்றுமில்லை, தாத்தா!'' என்றான் இளங்கோ.

''ஒன்றுமில்லையாவது! இவருக்கு வைத்தியம் செய்ததை விடச் சும்மா இருந்திருக்கலாம்'' என்று கடிந்து கொண்டார் வைத்தியர். ''முக்கால் பகுதிக்கு மேல் ஆறிப் போய்த் தழும்பாகி விட்ட காயத்தை இவராகத் திருப்பிக் கொண்டிருக்கிறார். எவ்வளவோ சொல்லி வைத்திருந்தேன். கேட்கவில்லை. திரும்பவும் வாட்பயிற்சி செய்தாரோ, வேலெடுத்து வீசினாரோ, வில் வளைத்தாரோ தெரியாது. தழும்பெல்லாம் ரத்தம் கசிந்து வீங்கிக் கொண்டு விட்டது.''

''நீ என்ன சின்னக் குழந்தையா, இளங்கோ?'' என்று செல்லமாய்க் கடிந்து கொண்டார் சக்கரவர்த்தி.

''பாண்டி நாட்டுப் போர்க்களம் நினைவுக்கு வந்திருக்கும்; ஒரு கை போனாலும் பாதகமில்லை என்று நினைத்து விட்டான் போலிருக்கிறது'' என்றார் பெரிய வேளார்.

''வைத்தியர் சொல்கிறபடி நடந்து வா; பேசாமல் என்னோடு பழையாறைக்கு வந்து ஓய்வெடுத்துக் கொள்'' என்று சொல்லி விட்டு நடந்தார் இராஜேந்திரர்.

பெரியவர்கள் சென்றவுடன் தனக்குள் மெல்ல நகைத்துக் கொண்டான் இளங்கோ. அடுத்தாற்போல் அவனுக்கே வருத்தமாகவும் இருந்தது. வீரமல்லனை அறைந்த அதிர்ச்சியால் தனக்கே இவ்வளவு வலியும் வேதனையும் ஏற்பட்டிருக்குமானால் பாவம், வீரமல்லனின் கதி என்ன ஆகியிருக்கும்?

## பதினோராம் அத்தியாயம்

# பழையாறை பயணம்

காலை இளம் வெய்யிலில் சோழநாட்டு நெடுஞ்சாலையில் புரவிகள் பூட்டிய ரதங்கள் சில பழையாறையை நோக்கிப் பறந்து கொண்டிருந்தன.

ரதங்களுக்கு முன்னும் பின்னும் குதிரை வீரர்கள் பலர் வேல் முனைகள் பளபளக்க விரைந்தேகிச் சென்றனர்.

ரதங்களின் சக்கரங்கள் இன்னிசை பாடக் குதிரைகளின் குளம்பொலி அதற்குத் தாளமாக அமைந்தது.

இடையில் சென்ற ரதமொன்றில் சோம்பலுடன் இளங்கோ சாய்ந்திருந்தான். அரண்மனை வைத்தியர் அவனுக்கு எதிரில் அமர்ந்து ஏட்டுச் சுவடிகளைப் புரட்டிக் கொண்டிருந்தார். தன்னைக் கட்டாயமாகச் சிறைப்படுத்தி மாமன்னர் பழையாறைக்கு அழைத்துச் செல்வது போல் தோன்றியது. வைத்தியர்தான் அவனுக்குச் சிறைக் காவலர்.

சிறிது நேரம் சித்த வைத்தியத்தின் அருமை பெருமைகளை அவனிடம் விளக்

கிக்கொண்டு வந்தார் அரண்மனை மருத்துவர். அவனுடைய சித்தம் சித்த வைத்தியத்தில் லயிக்கவில்லை என்பதைக் கண்ட பிறகு, அவன் போக்கில் அவனை விட்டுவிட்டுத் தமது சித்தத்தை ஏட்டுச் சுவடிகளுக்குக் கொண்டு வந்தார்.

இளங்கோவின் சித்தம் சிட்டுக் குருவியாக மாறிச் சிறகடித்துப் பறந்துசென்று கொண்டிருந்தது. ரதத்துக்கு இரு புறங்களிலும் தெரிந்த இயற்கைக் காட்சிகள் அவனைக் கிறங்க வைத்தன. இரண்டு கண்கள் இருந்தாலும், ஒரே சமயத்தில் இரண்டு பக்கங்களிலும் பார்த்து மகிழ முடிய வில்லையே!

கொடும்பாளூரின் கொடிய வெய்யில் அவனுக்குப் பழக்கமான ஒன்று. பசுமையை அங்கே காண முடியுமென்றாலும் இது போன்ற குளிர்ந்த மரகதப் பசுமைக்கும் அந்த நகருக்கும் வெகு தூரம். நெற்கழனிகளும், வாழைத் தோட்டங்களும், மஞ்சட் கொல்லைகளும், தென்னந் தோப்புகளும், மூங்கிற் புதர்களும் மாறி மாறி வந்துகொண்டே யிருந்தன. தண்ணீர், தண்ணீர், தண்ணீர், பார்க்குமிடமெல்லாம் நீக்கமற நிறைந்த தண்ணீர்!

தாமரைத் தடாகங்களும், அல்லிக் குளங்களும், செங்கழுநீர் ஓடைகளும் வழி நெடுகிலும் கண்களுக்கு விருந்தளித்தன. கூட்டம் கூட்டமாகத் திரிந்த ஆநிரைகளையும், குதித்துக் கும்மாளம் போட்டு அந்தப் பொன் விளையும் பூமியைத் தங்களது கொம்புகளால் குத்திக் கிளறி விளையாடிய காளைகளையும் பார்த்தபோது அவனால் ரதத்துக்குள் உட்கார்ந்திருக்கவே முடியவில்லை.

எவ்வளவு செருக்கு அந்தக் கட்டிளங் காளைகளுக்கு! சோழ நாட்டில் பிறந்து சோறு படைக்கும் பணிக்காக உழைக்கிறோம் என்ற கர்வமா? அல்லது இராஜராஜப் பெரிய உடையார் தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டியபோது, தங்கள் குலத்துக்கு மங்காத பெரும் புகழ் கொடுத்துவிட்டுப் போய்விட்டார் என்ற ஆனந்தமா?

தஞ்சைப் பெரிய கோயில் நந்தியை நினைத்துக் கொண்டான் இளங்கோ. வலிவு, வனப்பு, மிடுக்கு, கம்பீரம், ஆண்மை இவற்றின் அழியாத நினைவுச் சின்னமல்லவா அது? 'தமிழ் நாட்டின் ஆண் மகன் ஒவ்வொருவனும் இப்படி இருக்க வேண்டும்; ஆனால் அதே சமயம் ஆணவச் செருக்கால் நாட்டை அழித்து விடாதிருப்பதற்காக, இறை நினைவை மறவாது தோளில் சுமக்க வேண்டும்' என்று கூறாமல் கூறுகிறதா?

காட்சி மாறியது. செங்கால் நாரைகள் வானத்தில் கூட்டம் கூட்டமாகப் பறந்தன. குருவிகளும், கொக்குகளும், மீன் கொத்திகளும் குறுக்கும் நெடுக்கும் சிறகடித்துச் சென்றன. வானத்தில் பசும் பந்தர் வேய்ந்தாற்போன்று மரக் கிளைகள் பின்னிப் பிணைந்து சாலையில் நிழல் கவிழ்த்தன.

ரோகிணியை நினைத்துக் கொண்டான் இளங்கோ. 'இந்த வேளையில் இந்த ரதத்தில் அவள் என்னருகே அமர்ந்து வந்தாளானால் என்ன இன்பகரமாக இருக்கும்? மாறும் காட்சிகள் ஒவ்வொன்றையும் அவளுக்குச் சுட்டிக் காட்டி அவள் கண்களில் ஒளி விடும் வியப்பைக் கண்டு ஆனந்தமுறலாமே! அவளுடைய நாட்டிலும் இயற்கை அழகுக்குப் பஞ்சமில்லைதான். ஆனால் அது பயங்கரமான அழகு; மலைகளும் காடுகளும் விலங்குகளும் நிறைந்த குரூரமான அழகு. எளிமையும் இனிமையும் தண்மையும் நிறைந்த இந்தக் காட்சிகளுக்கு அவை ஈடாகுமா என்ன!'

சின்னஞ்சிறு கிராமங்கள் குறுக்கிட்டபோது மக்கள் கூட்டம் வாழ்த்தொலிகளை எழுப்பியது. வயல் வரப்புக்களில் வேலைசெய்து கொண்டிருந்த ஆண்களும் பெண்களும் ஓடோடியும் வந்து அஞ்சலி செலுத்தினார்கள். இராஜேந்திர உடை

யாரின் தரிசனம் அவர்களுக்குக் கடவுளின் தரிசனத்துக்கு ஒப்பானது. பெற வொண்ணாத பாக்கியம் பெற்றவர்களைப் போன்று அவர்கள் முகமலர்ச்சியுற் றார்கள். அகமலர்ச்சியால் ஆனந்த ஆரவாரம் செய்தார்கள்.

வழியில் ஓடையில் நீர் அருந்துவதற்காக ரதத்தைச் சற்று நிறுத்திவிட்டுக் கீழே இறங்கிச் சென்றான் இளங்கோவின் ரத சாரதி. பின்னால் வந்து கொண்டிருந்த ரதமும் நின்றது; அதை ஓட்டி வந்தவனும் முன்னவனைப் பின்பற்றி ஓடைக்குச் சென்றான்.

"இளவரசே!"

திரும்பிப் பார்த்தான் இளங்கோ. பின்புறத்து ரதத்திலிருந்து அம்மங்கை தேவியும் அருள்மொழியும் அவனை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இளங்கோ திரும்பியதைக் கண்டவுடன் தன் தலையை உட்புறம் இழுத்துக்கொண்டாள் அருள்மொழி.

"இங்கே சற்று வந்துவிட்டுச் செல்கிறீர்களா, இளவரசே?" என்று அவனைத் தங்கள் ரதத்துக்கு அழைத்தாள் அம்மங்கை. அருள்மொழி தன் தங்கையின் தோளைப்பற்றி இழுத்ததிலிருந்து அவள் அதை விரும்பவில்லை என்று தெரிந்தது.

"ஒரு முக்கியமான செய்தி; உடனே திரும்பி விடலாம், வாருங்கள்!" என்று மீண்டும் கூவினாள் அம்மங்கை. அவளுடைய கண்களின் குறும்புத்தனத்தை இளங்கோ கவனிக்கவில்லை.

காயம் கட்டப் பெற்ற கரத்துடன் மெதுவாக இறங்கி அவர்களிடம் சென்றான். "என்ன செய்தி, மங்கையாரே?"

"சித்த வைத்தியர் பத்திரமாக இருக்கிறாரல்லவா?"

"எதற்குக் கேட்கிறீர்கள்?"

" ஒன்றுமில்லை. தமக்கையாருக்குத் தஞ்சையிலிருந்து புறப்பட்டதிலிருந்து சித்தம் சரியாயில்லை. நான் பேசிக் கொண்டே வருகிறேன். அவர்கள் 'உம்' மென்றுகூடக் கேட்காமல் ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடக்கிறார்கள். வற்புறுத்தி நான் ஏதாவது வம்புக்கு இழுத்தால், அவர்கள் வேறு ஏதாவது மறு மொழி சொல்கிறார்கள்."

"அடி, அம்மங்கை! சும்மா இரேன்!" என்று அவளைப்பற்றி இழுத்தாள் அருள்மொழி. அவளது செந்தாமரை முகம் அப்போது நாணத்தால் குவிந்திருந்தது.

அம்மங்கை நிறுத்தாமல் தொடர்ந்து பேசினாள் :

"தமக்கையார் இங்கே இருந்தால் இவர்களுடைய சித்தப்பிரமை எனக்கும் வந்து விடும்போலிருக்கிறது. இவர்களைச் சற்று உங்கள் ரதத்துக்கு அழைத்துக் கொண்டுபோய், நமமுடைய சித்தவைத்தியரிடம் காண்பிக்கிறீர்களா? நான் விளையாட்டுக்குச் சொல்லவில்லை; தமக்கையாரின் முகத்தைப் பாருங்கள்."

சிரிப்பை அடக்கிக்கொண்டு அவள் பேசியதால், அருள்மொழியை ஏறிட்டுப் பார்த்தான் இளங்கோ. முகம் என்னவோ போல்தான் இருந்தது. ஆனால் அவள் அவனைப் பார்க்கவில்லை.

குனிந்த தலை நிமிராமல், "பெரியவர்கள் அருகில் இல்லை என்பதால் இவள் வாய்த்துடுக்காகப் பேசுகிறாள்; இவளை மன்னித்துக் கொள்ளுங்கள்" என்றாள் அருள்மொழி. "வைத்தியர் உடன் இருக்கும்போதே உங்களுடைய கைக்கட்டை மறந்து விடாதீர்கள்" என்றும் கூறினாள்.

கலகலவென்று நகைத்தாள் அம்மங்கைதேவி.

சின்னஞ்சிறு ஏமாற்ற உணர்ச்சியால் எழுந்த சிறு கோபத்துடன் இளங்கோ ரதத்தில் வந்து அமர்ந்தான். 'இப்போது மங்கையாருக்கு மருந்து கொடுக்கச் சொல்லி அவள் வாய்த்துடுக்கை அகற்றினால் நன்றாக இருக்கும்' என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவளது விளையாட்டுப் பேச்சிலும் உண்மையில்லாமல் இல்லை. ஏன் நங்கையார் ஒரு விதமாகச் சோர்ந்து காணப்படுகிறார்? எதனால் வந்த சோர்வு இது?

மருத்துவரின் சித்த வைத்திய விளக்கத்தை அவன் கேளாமல் அசட்டை செய்ததுபோலவே, அவளும் தன் தங்கையோடு கலகலப்பாகப் பேசாமல் வந்திருக்கிறாள் என்று தெரிந்தவுடன், அவளும் தன் மனத்தை வேறு எங்கேயாவது பறி கொடுத்திருப்பாளோ என்று நினைத்தான் இளங்கோ.

அருள்மொழியைப் போன்ற ஒரு சர்வ வல்லமை பெற்ற பெண், யாரையும் மனத்தால் நினைக்கக் கூடுமென்றே அவனுக்குப் படவில்லை. ஆனால், பாட்டியார் பெரிய குந்தவையாரும் அப்போர்ப் பட்டவர்தாம். அவரும் வல்லவரையரும் ஒன்றாக இப்போது கடைசி ரதத்தில் வந்து கொண்டிருந்தார்கள்!

முதல் ரதத்தில் மாமன்னரும் மகாராணி வீரமாதேவியாரும் ஒன்றாய்ச் சென்றார்கள்.

எல்லோருமே இப்படி மாறுவது இயற்கைதான் போலும்! ஒரு வேளை, நங்கையாரின் மனம் வேங்கி இளவரசன் நரேந்திரனின் மீது நாட்டம் கொண்டிருக்கிறதோ?

குதிரைகள் விரைந்துசெல்லவே, இளங்கோவின் நாட்டம் இந்தச் சமயம் ரோகிணியின் பக்கம் திரும்பியது. (தொடரும்)

# எச்சரிக்கை!



## இன்றைய ஜலதோஷம் நாளை ப்ளூ, பிராங்கைடிஸ் அல்லது நிமோனியாவாக மாறலாம்!

கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உடனடியாக உங்கள் ஜலதோஷ அவஸ்தைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஜலதோஷங்களுக்கென்றே விசேஷமாக தயாரிக்கப்பட்ட இந்த சக்தி வாய்ந்த மருந்தை தடவிக்கொள்ளுங்கள்.

உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை விஷப்பரீட்சை செய்யாதீர்கள். ஜலதோஷத்தின் முதல் அறிகுறிகள் — தும்மல், ஒழுகும் மூக்கு அல்லது தொண்டை உபாதை—தோன்றின உடனே, படுக்குமுன் விக்ஸ் வேபோரப்பை மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உடனேயே மூக்கு, தொண்டை, மார்பு இவைகளில் ஆஸ்வாஸம் அடைவதை உணர்வீர்கள், மேலும் நீங்கள் நிம்மதியாக இரவு முழுவதும் தூங்கும் பொழுதே, இந்த நிருபணமான மருந்து சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட் காலையில் உங்கள் ஜலதோஷம் நீங்கி சுகம் பெறுவீர்கள்.

### விக்ஸ் வேப்போரப் ஜலதோஷத்தை சீக்கிரம் போக்குகிறது . . . 2 விதங்களில்

**1** மூக்கின் வழியே வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப்வெளியிடும் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகள். நீங்கள் சுவாசிக்கும்போது உள்ளே போய் மூக்கிலும் தொண்டையிலுமுள்ள சளியையும் வலியையும் நீக்குகிறது.

**2** சருமத்தின் மூலமாக வேலை செய்கிறது.



விக்ஸ் வேப்போரப்பின் நிம்மதி தரும் உஷ்ணம் மார்பு கத்தில் அடைப்பை உடைத்தெறிகிறது. நீங்கள் துரிதமாக குணமடைகிறீர்கள்.




# விக்ஸ் வேப்போரப்

மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். எல்லோருக்கும் நல்லது.

VR-6

# படித்துப் பாருங்கள்



## உளநூலும் கல்வியும்

உளவியல் பற்றிய நூல்கள் தமிழில் அதிகம் வெளியாகியிருப்பதாகத் தெரியவில்லை. உளநூல் வல்லோர் என்று சொல்லக் கூடியவர்கள் தமிழில் எழுதத் திறமை வாய்ந்தவர்கள் இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு சிலர் இருக்கலாம். இவர்கள் இவ் விஷயங்களைத் தமிழில் எழுதத் துணியவில்லை. அதன் அவசியத்தையும் உணரவில்லை.

நம் நாட்டில் இவ்வகை விஞ்ஞான விஷயங்கள் முன்னேற வேண்டுமானால் பிரதேச மொழியிலேயே விஞ்ஞான நூல்கள் பிரபலமாக வேண்டும். இதற்கு விஞ்ஞானப் பயிற்சி தேசிய மொழியிலேயே நடைபெற வேண்டும். விஞ்ஞான விஷயங்களுக்குத் தமிழ்ச் சொற்கள் இல்லையென்று சொல்வது நமது அறியாமையின் குறியே யாகும். ஆங்கிலத்தின் மயக்கத்திலிருந்து நமது தலைவர்களில் பலர் தெளிவு பெறவில்லை. இதனாலேயே தமிழில் விஞ்ஞான விஷயங்களை யெல்லாம் விளக்கச் சொற்கள் இல்லை யென்றும் சொல்லுகின்றனர்.

திரு ராமநாதம் பிள்ளை யவர்களின் நூல் இந்தச் சந்தேகத்தை நீக்கி விடுகிறது. உயர்தர யாழ்ப்பாண இலக்கியத் தமிழில் உளநூல் விஷயங்களை ஆசிரியர் சொல்லியிருக்கிறார். ஆங்கிலச் சொற்களை உபயோகிக்காமலே தமிழிலுள்ள சொற்களைக் கொண்டே நூலை இயற்றியிருக்கிறார். கல்லூரி மாணவர்களுக்குத் தக்கபடி விஷயக் குறிப்புகளைச் சொல்லியிருக்கிறார்.

உபாத்தியாயர் பயிற்சிக்கு வரும் மாணவர்கள் இந்த நூலில் சொல்லியிருக்கும் உளவியல் விஷயங்களை நன்கு அறிந்துகொள்ள வேண்டியதாகும்.

பல உளவியல் நிபுணர்களுடைய அபிப்பிராயங்களை நல்ல முறையிலே சொல்லி விளக்கியிருக்கிறார்.

இந்த நூல் சாதாரண மக்களுக்கு விளக்கமாக இல்லையே என்று சொல்லக் கூடும். அது சாதாரண மக்களுக்கென்ற நோக்கத்துடன் எழுதி யிருப்பதாகத் தெரியவில்லை. இப்படிச் சாதாரண மக்களுக்கு விளங்க வேண்டுமானால் இந்த நூலின் பக்கங்களை இரட்டிக்க வேண்டும். உதாரணங்களும் அடிப்படை உளவியல் விஷயங்களும் எளிதான நடையில் சொல்லியாக வேண்டும்.

இவ்வளவு நன்றாக இயற்றியிருக்கும் நூலில் சில குறைகள் இருப்பதையும் சொல்ல வேண்டியிருக்கிறது. புதிய சொற்களை நுழைத்திருப்பதால் இந்தச் சொற்களுக்குத் தனி அகராதி கடைசியில் சேர்த்திருந்தால் நலமாகும்.

அனேகம் பேராசிரியர்களுடைய நூல்களை ஆசிரியர் படித்து விஷயக் குறிப்புக்களை எடுத்து எழுதி யிருக்கிறார். அவர்களுடைய பெயர்களைக் குறிக்கும்போது சில இடங்களில் 'அவன்' என்றும் சில இடங்களில் 'அவர்' என்றும் குறித்திருக்கிறார் ஆசிரியர். இதற்கு ஆசிரியரைக் குற்றஞ் சொல்லிப் பயனில்லை. உயர்தரத் தமிழில் 'ஆண்டவன்' என்றுதானே சொல்லுகிறோம்:

இந்த நூலை இயற்றியதில் ஆசிரியர் பல ஆங்கில நூல்களிலிருந்து விஷயக் குறிப்புக்களை எடுத்திருக்கிறார். இந்த நூல்களையும் குறித்திருந்தால் வாசகர்களுக்கு உபயோகமாயிருப்பதோடு இந்நூல்களுடைய உதவியைப் பெற்றதற்கு நன்றியறிவித்தும் இருக்கலாம்.

— கேப்டன் சேஷாத்திரிநாதன்

ஆசிரியர் : த. இராமநாத பிள்ளை, பி. ஏ. பிரசுரம்: ஸ்ரீ லங்கை அச்சகம், யாழ்ப்பாணம், இலங்கை. விலை ரூபாய் 3-50.

## ஏட்டில் எழுதாக் கவிதைகள்

"சொல்லு மழலையிலே, துன்பங்கள் தீர்த்திடுவாய்" என்றார் பாரதியார். சமூகத்தில் நாட்டுப் பாடல்கள் மழலைக் கவிகளாக விளங்குகின்றன. குழந்தையின் மழலைச் சொல் தாயின் துன்பத்தைத் தீர்ப்பதுபோல, மழலைக் கவிகள் உழைப்போரின் சோர்வை யகற்றி உற்சாகத்தை அளிக்கின்றன. சென்னைமா நகரில் பார வண்டி இழுக்கும் ஏழைத் தொழிலாளி முக்கிக் கொண்டும், முனகிக் கொண்டும் வண்டி இழுக்கும் கண்ணராவி, பார்ப்போரின் நெஞ்சத்தைப் பாகாக உருக்கி விடுகிறது. ஆனால் கிராமங்களிலோ, கீழே சேற்றில் நின்று கொண்டு கொடிய வெய்யிலில் நாள் முழுதும் உழைக்கும் பெண்கள் மழலைக் கவிகளில் தங்கள் துன்பத்தை மறந்து இன்பம் காண்கிறார்கள். "சம்பா விதை போட்டு, சரியான நாத்து விட்டு" என்பாள் ஒருத்தி. "பம்பாயி சிலைக்காரி பக்குவமா நட்டு வாடி." என்று முடிப்பாள் மற்றொருத்தி. "மண் வெட்டி தோளிலிட்டு மடை திறக்கப் போறவரே, மடையைத் திறந்துவிடு மங்கையர்கள் நாத்து நட!" இவ்வாறாகப் பாட்டு போய்க் கொண்டே யிருக்கும்! வியர்வை கொட்ட நாள் முழுதும் உழைக்கும் அந்தப் பெண்களிடையே முக்கல், முனகல் எதுவும் கேட்காது; கிண்டல் பேச்சும் சிரிப்பொலியும்தான் அடிக்கடி கேட்கும். "இன்பக் கதைகளெல்லாம்— உன்னைப் போல் ஏடுகள் சொல்வதுண்டோ?" என்றார் அல்லவா பாரதியார்? கிராம மக்களின் இன்பக் கதைகளை நாட்டுப் பாடல்களைப் போல் ஏடுகள் சொல்வதில்லை. பிறப்பிலிருந்து இறப்பு வரையில் கிராம மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் நாட்டுப் பாடல்களை, தேடித் தேடி எடுத்துத் திரட்டித் தந்திருக்கிறார் ஆசிரியர் ஸ்ரீ அன்னகாமு. ஆசிரியரின் ஆராய்ச்சி உரைகளும் விளக்கக் குறிப்புகளும் பாடல்களின் இனிமையை எவரும் சுவைத்து அனுபவிப்பதற்கு உதவியாக இருக்கின்றன. . — ஜெயமணி

கிடைக்குமிடம் : செ. அன்னகாமு, காந்திகிராமம், மதுரை மாவட்டம். விலை : ரூ. 2.

## அத்தியாயம் 2

# சுடர்ப் பொறி!

வெள்ளையன் தோட்டமே புது மலர்ச்சி கொண்டு விளங்கியது. இளைஞர் சங்கம் ஏற்றி வைத்த ஒளி அங்கிருந்த குடிசைப் பகுதிகளிலெல்லாம் புகுந்து இருளை அகற்றிக்கொண்டிருந்தது. குடும்பங்களிலெல்லாம் ஒரு விழிப்பு ஏற்பட்டிருப்பதாகத் தோன்றியது. குப்பை மேடுகளையும் சாக்கடைக் குழிகளையும் கண்ணிலேயே காணவில்லை. காய்ந்து கிடந்த பயிர்களுக்குத் தண்ணீர் பாய்ச்சியது போல் அனைவருடைய முகத்திலும் ஒரு தளதளப்பு காணப்பட்டது.



கூழானாலும் அதைக் குளித்துக் குடிக்கும் பழக்கமும் ஒழுக்கமும் உண்டாகியிருந்தன.

எல்லாரும் மாறித்தான் போயிருந்தார்கள். இருந்தாலும் பாபுவிடம் ஏற்பட்டிருந்த மாறுதல் பெரிய புரட்சியாகவே தோன்றியது.

உஷாவுக்குத்தான் அதில் பெரிய மகிழ்ச்சி. அந்த மாறுதலைக் கண்டு அவளுடைய உள்ளம் பூரித்தது. அவன் முகத்தில் அசாதாரணமான தெளிவும் படித்த களையும் சட்டென்று வந்துவிட்டதை எண்ணி அவளுக்குப் பெருமையாகக்கூட இருந்தது. பனிப்படலம் விலகி, நிலமும் பசுமையும் பளிச்சென்று தெரிவதுபோல் அவன் கண்களில் ஒளி வீசிக் கொண்டிருந்தது.

அவள் பெரும்பாலும் மாலை வேளைகளில்தான் தோட்டத்துப் பக்கம் வந்து கொண்டிருந்தாள். அவள் வருவதற்குள் பாபு எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு கொட்டகையில் வந்து காத்திருப்பான். இப்பொழுதெல்லாம் நேரம் போவதே தெரியாமல்தான் போய்க்கொண்டிருந்தது. எத்தனை வேலைகளைச் செய்து முடித்தாலும் நேரம் இருந்துகொண்டிருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. ஆறு வருஷத்துப் படிப்பை ஆறு மாதத்தில் படித்துத் தீர்த்தது ஒரு பெரிய சாதனையாகவே அவர்களுக்குப் படவில்லை. போகப் போக

தேன்

அவனுக்குச் சொல்லிக் கொடுப்பதற்கான திறமை தன்னிடம் குறைந்து கொண்டு வருவதை உணர்ந்தாள் உஷா. அவனுடைய அறிவுக்கு எட்டாத ஐயங்களெல்லாம் அவனுக்குத் தோன்றிக்கொண்டிருந்தன. அப்போதெல்லாம் உஷாவின் முகத்தைப் பார்க்க வேண்டுமே! 'செவ செவ' என்று அது சிவந்து போயிற்று. சில சந்தேகங்கள் என்றுமே தீர்வதில்லை; சிலவற்றைத் தீர்க்க முடிவதில்லை.

எப்படியோ பாபுவின் முன்னேற்றம் வேகமாக இருந்தது; வியப்புக்குரியதாக இருந்தது. அவளையும் மிஞ்சுவதாக இருந்தது. பற்பல விஷயங்களைப் பற்றிப் பல மணி நேரம் விவாதித்தார்கள்.

"இது என்ன படிப்பா, பேச்சா?" என்று சண்முகத்திடம் தனியாகப் போய்க் கேட்டான் தேவானை.

"சரி! உன் வேலையைப் பாத்துக்கிட்டுப் போ!" என்று மிகுந்த கோபத்தோடு விரட்டினான் அவன்.

"பின்னே உங்கிட்டே யாரு வந்து பேசிக்கிட்டு நிக்கப் போறாங்க?" என்று

முகத்தை இடித்துக் கொண்டு போனாள் தேவானை.

சண்முகம் பொறுமையோடு தான் எல்லா விஷயங்களையும் கவனித்துக் கொண்டு வந்தான். பாபுவும் உஷாவும் அளவளாவிப் பேசுவதும் பழகுவதும் அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்பது தேவானைக்கும் தெரியும். அவளும் அவனுக்கு உதவியாகவே அவர்களைக் கவனித்து வந்தாள்.

இருவரும் எப்படிப் பழகுகிறார்கள் என்று தெரிந்து கொள்வதில் எல்லாருக்கும் திடீரென்று அக்கறை பிறந்திருப்பதாகத் தோன்றியது. சண்முகத்தையும் தேவானையையும் போலவே பொன்னியும் குப்பனும் இவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளப் பல்விதங்களிலும் முயன்றனர். பாரிஸ்டரும் சொர்ணம்பாளும் பிறர் அறியாமல் தன்னையும் தன்னுடைய நடவடிக்கைகளையும் கவனித்து வருகிறார்கள் என்பது உஷாவுக்குத் தெரியும். ஆனால் அவள் அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

# கூடு

ஆர்வி



அவளுக்கு இதையெல்லாம் பார்க்கும் போது சிரிப்புத்தான் வந்தது. 'இவர்களுடைய உண்மையான கவலைதான் என்ன? எதற்காக இவர்கள் இவ்வளவு தூரம் கவலைப்படுகிறார்கள்! இவர்களுக்குப் பிடிக்காதது என்ன நடந்து விடும்? பொறுப்பு உணர்ச்சி தெரியக் கூடிய வயது ஆகவில்லையா எனக்கு? ஏன் இப்

படிப் பயப்படுகிறார்கள்?' என்று தனக் குள்ளாகவே கேட்டுக்கொண்டாள்.

உஷாவுக்கு இவர்கள் கவனித்து வருவது மட்டும்தான் தெரிந்திருந்தது. ஆனால் பாபுவுக்கோ இன்னும் இரண்டு பேர்கள் இதில் மிகவும் அக்கறை காட்டு வதும் தெரிந்திருந்தது. நிழலைப்போலத் தூரத்திலிருந்தும் பின்தொடர்ந்து அவர்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள முயன்று வந்தார்கள். தெரிந் தும் தெரியாமலும் கண்டதையும் கேட்ட தையும் இணைத்துப் பிணைத்து ஏதோ ஒரு முடிவுக்கு வருபவர்களைப் போலத் தோன்றினார்கள்.

பாபு இவர்களைக் கண்டுதான் அஞ்சி னான். பாஞ்சாலியும் பக்கிரியும் உண்மை யைப் புரிந்துகொள்ளக் கூடியவர்கள் அல்ல. எதுவும் அவர்களுடைய கண் களுக்கு விபரீதமாகத்தான் தோன்றும். உண்மையைத் திரித்துக் கூறவும் அவர்கள் தயங்கக் கூடியவர்கள் அல்ல. வெள்ளையன் தோட்டத்தில் எத்தனை ஏற்பட்டிருந்தாலும் அது அவர்களுடைய குடிசைப் பக்கமாகத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை என்பது யாருக்குத்தான் தெரியாது? சாக்கடையும் குப்பை மேடும் அவர்களுடைய குடிசைக்கு இன்னமும் அரண் செய்துகொண்டுதான் இருந்தன. அடுத்த வீட்டுச் செல்லாயி அதைத் தாண்டிக்கொண்டுதான் தினமும் அவ ளிடம் வந்து யோசனை கேட்டுப் போய்க் கொண்டிருந்தாள்; கொடுக்கல் வாங்கல் போக்குவரத்து யாவும் நடந்துகொண் டிருந்தன. சண்முகத்துக்குத் தெரியாமல் அவர்கள் இரண்டொரு தடவை தேவா னையைச் சினிமாக் காட்சிக்கு அழைத்துச் சென்றிருக்கிறார்கள்.

தேவானை மிகவும் கெட்டிக்காரிதான். எதைச் சொல்லலாம், எதைச் சொல்லக் கூடாது என்பதெல்லாம் தெரிந்தவள் தான்! ஆனால் என்ன இருந்தாலும் அநுபவமில்லாத அறியாப் பெண் ணாயிற்றே!

பாபு அவளை எச்சரித்து வைத் திருந்தான்.

"எனக்குத் தெரியாதா, அண்ணே! என்னமோ ஒரு கடுதாசி எழுதிக் கொடுக் கச் சொன்னாங்க....இல்லாட்டி நான் ஏன் அங்கே போறேன்?" என்றாள் தேவானை அழாக்குறையாக.

'யாருக்குக் கடிதம்?' என்று பாபு கேட் கத்தான் எண்ணினான். ஆனால் அப்படி அறிந்துகொள்ள முயல்வது முறையல்ல என்று அவன் பேசாதிருந்து விட்டான்.

"பெண்கள் மூன்றாவது ஆட்டம் பார்க்கப் போகலாமா? அதுவும் நீ போனது சண்முகத்துக்குத் தெரிந்தால் என்ன நடக்கும், தெரியுமா?" என்று கேட்டான் பாபு.

தேவானைக்கு அதைக் கேட்கும்போதே உடல் நடுங்கியது. அதற்குமேல் அவளை நடுங்க வைக்க அவனும் விரும்பவில்லை. தேவானையின் கண்களில் நீர் மல்கி நின்றது. அந்தக் கண் வழி செல்லும் இதயத்துள்ளே எத்தனை ஏக்கம் தேங்கி நின்றது என்பது பாபுவுக்குத் தெரிந்து தான் இருந்தது. ஆனால் சண்முகம் மனம் கசிந்தால்தானே? கல்யாணம் ஆகாமல் வயது வந்த பெண் இன் னொருவர் வீட்டில் இப்படி எத்தனை நாட்களுக்கு இருக்க முடியும்? தனியாகச் சந்திக்க நேர்ந்தால் கூடச் சண்முகம் அவ ளிடம் சகஜமாகப் பேச முன் வருவ தில்லை. அண்ணிக்குக் காதில் விழுகிற மாதிரி, விழத் தகுந்த விஷயங்களை மட்டுமேதான் பேசுவான். தேவானை யின் ஏக்கமெல்லாம் அண்ணிக்குத் தெரி யாதா, என்ன?

"ஏ மக்கு! தம்பி வர சமயம் பாத்து, தட்டிக்குப் பின்னாலே போய் ஒளிஞ்சிக் கிறியே—இப்படி இருந்தால் எவன்தான் உன்னைத் துணிஞ்சு கட்டிக்கிறேன்னு சொல்வான்? அது வந்தா சிரிச்ச முகத் தோடே சட்டுனு தட்டை எடுத்துப் போட்டு, சோத்தை எடுத்து வைப்பியா, புத்தி கெட்டுப் போயி எம் பின்னாலே வந்த நிப்பியா? போடி, தெகிரியமா! எடுத்து முழுங்கியா புடுவாங்க உன்னை! இப்பிடிப் பயந்தவங்கள்ளாம் அப்பறம் எப்பிடி எப்பிடியோ ஆயிட்டாங்க!" என்று தேவானையைத் தூண்டிப் பார்த்தாள்.

அன்றைக்கு மறுநாளே சண்முகம் வீட்டுக்குள் வந்து நுழைந்தபோது தேவானைதான் தட்டை எடுத்துவைத்து, தடுக்கையும் எடுத்துப் போட்டாள்.

"ஆமாம், அண்ணி எங்கே?" என்று கேட்டான் சண்முகம்.

"வந்து சோறு எடுத்துப் போடச் சொல்லிட்டு, 'இதோ வாரேன்'னுட்டு எங்கேயோ போனாங்க!" என்று கூறினாள் தேவானை.

"சரி, அது வரட்டும். நானும் இதோ வாரேன்!" என்று சொல்லி விட்டு, சண்முகம் சங்கத்துப் பக்கம் போய் விட்டான்.

தேவானைக்கு ரோசத்தினாலும் கோபத் தினாலும் அழுகைதான் முட்டிக்கொண்டு வந்தது. அண்ணி வந்து பார்த்தபோது அவள் விக்கி விசித்துக்கொண்டு நின்றாள்.

"போடி போடி, துப்புக் கெட்டவளே- வந்த தம்பியைப் பசியோடே விட்டுப் புட்டியே!" என்றாள் அண்ணி. அந்தக்

குற்றச்சாட்டைத் தேவானையினுல் பொறுக்கவே முடியவில்லை.

"அவதான் தடுக்கை எடுத்துப் போட்டு, தட்டை எடுத்து வைச்சாளாமே - எல்லாத்துக்கும் அண்ணி வந்து நிக்கணும்னு முடியுமா? அப்பிடி எத்தினி நாளைக்கு நானும் கூடவே வந்து நிக்கிறதாம்! தெரியாமெத்தானே கேக்கறேன்!" என்று கடச் கடக் கேட்டான் அண்ணி சண்முகத்திடம்.

தேவானைக்கு இந்தப் பேச்சு மகிழ்ச்சியைத் தந்தது. அவள் அவனைக் கடைக் கண்ணுல் பார்த்தவாறு கம்பத்தைப் பிடித்துக்கொண்டு நின்றுள்.

"அவ சோறு எடுத்து வைக்கிறது கூடாதுன்னு, சோறு ஆக்கி வைக்கிறது மட்டும் தேவலாமோ?" என்று கேட்டாள் அண்ணி மறுபடியும்.

சண்முகம் வாயைத் திறக்கவில்லை.

"பதில் வருதா பாரேன், வாயிலேயிருந்து! அத்தனை அழுத்தம்!" என்று தனக்குள்ளாகவே அவனைக் கடிந்து கொண்டாள் தேவானை.

சண்முகம் ஏன் இப்படி நடந்துகொண்டான் என்பது அவனுடைய அண்ணிக்கும் தேவானைக்கும் புரியத்தான் இல்லை; ஓரளவு அவர்களுக்கு அது புதிராகக் கூட இருந்தது. ஆனுல் பாபுவுக்கு இதன் காரணம் தெரியும்.

"அண்ணி இல்லாத வேளை பார்த்து நான் சாப்பிடப் போவதும் சரியில்லை. அவள் எடுத்துப் போட வருவதும் தப்பு. சொன்னுல் அவர்களுக்கு இது எங்கே புரியப் போகிறது? இன்னெருவன் இதைப் பற்றிப் பேச இடம் கொடுத்து விடலாமா? எல்லாம் வேண்டும் என்று நடப்பதாகத்தான் மற்றவர்களுக்குப் படும். கல்யாணம் என்று முடிந்து விட்டால் சரி. அப்படி ஆகாதவரையில் அவளுக்கு நான் அந்நியன்தானே?" என்றுதான் பாபுவிடம் அந்தச் சம்பவத்தைப் பற்றிக் கூறினுன் சண்முகம்.

பாபு கூட உஷாவின் விஷயத்தில் இப்படித்தான் நடந்துகொள்ளவேண்டும் என்று அவன் சொல்லாமல் சொல்வது போலிருந்தது அப்போது. ஆனுல் பாபு அதைப் புரிந்து கொள்ளாதவன்போல் இருந்து விட்டான். உஷாவோடு அவன் பழகுவதில் தவறு எதுவும் இல்லாமல் இருக்கலாம். ஆனுல் மற்றவர்கள் இதைப் பற்றிப் பேசுகிற அளவுக்கு அவர்கள் பழகலாமா? சண்முகம் மறைமுகமாக அதைச் சுட்டிக் காட்டுவதாகவே பாபுவுக்குப் பட்டது. அவனும் சண்முகத்தைப் போல் கண்டிப்பாக நடந்து கொள்ளத்தான் விரும்பினுன். ஆனுல் உஷாவும் தேவானையும் ஒன்ருகி விடுவார்களா? உஷாவிடம் இதைப்பற்றி வெளிப்படையாகப் பேச முடியுமா? அப்படிச் சொல்லும் அவசியம்தான் என்ன வந்துவிட்டது?

உஷா எத்தனையோ எதிர்ப்புக்களிடையே இந்தத் தோட்டத்துக்கு வந்து கொண்டிருந்தாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆனுல் அப்படி வர வேண்டாம் என்று சொல்கிற துணிவு அவனுக்கு இல்லை; யாருக்குமே இல்லை. தன்னை முன்னிட்டு உஷா தன் நல்ல பெயரைக் கெடுத்துக் கொண்டு வருவாளோ என்பதை எண்ணிப் பார்க்கும் போதே அவனுக்குத் தலையைச் சுற்றியது.

அவள் எவ்வளவு உயர்ந்தவள்! எத்தனை சிறந்தவள்!

பாபு இத்தகைய சிந்தனையில் ஆழ்ந்திருந்தபோது வாசலில் ஸ்கூட்டர் சத்தம் கேட்டது. இரண்டு மூன்று நாட்களாகவே சரியாக உஷா வரும் சமயத்துக்குச் சேகர் இங்கே வந்துகொண்டிருந்தான். இன்று எப்படியாவது நாசுக்காகப் பேசி அவன் வருவதைத் தடுத்துவிட வேண்டும் என்று எண்ணினுன் பாபு.

"சில்க் புடவை கட்டிக் கொண்டு சேரிக்குத் தொண்டு செய்யக் கிளம்புவது பாஷனுகப் போய்விட்டதுடா! வேறு ஒன்றுமில்லை. அதிலும் பாரிஸ்டர் வீட்டுப் பாவை இங்கே வருகிறுளே, அதற்குக் காரணம் எனக்குத் தெரியும். அப்பாவையும் அம்மாவையும் மீறிக் கொண்டு இங்கே வந்து அவள் செய்கிற தொண்டு என்னடாப்பா, கொஞ்சம் சொல்லேன், கேட்கலாம்!" என்றுன் அவன்.

பாபுவுக்குக் கூட இதைக் கேட்டதும் கோபம்தான் வந்தது. ஆனுல் அதை அடக்கிக் கொண்டு, "உங்களுக்கும் இதற்கும் வெகு தூரம். உங்களுக்கு இதையெல்லாம் சொன்னுல் புரியாது!" என்றுசொல்லிவிட்டுஅவன் 'விர்'ரென்று போய் விட்டான்.

இன்று மீண்டும் அவன் எதற்காக வந்திருக்கிறுன்? பாபு வெளியில் வந்து சாலையைப் பார்த்தான்! இன்று சேகர் மட்டும் வரவில்லை; பின்னுல் கறுப்புக் கண்ணுடி அணிந்த மங்கை ஒருத்தியும் வந்திருந்தாள்.

"பாபு! உங்கள் பாடசாலைக்கு இன்னெரு ஆசிரியை தேவையானுல் சொல்லு! கையோடு அழைத்து வந்திருக்கிறேன்!" என்றுன் சேகர்.

பாபுவுக்கு எரிச்சலாக வந்தது. ஆனுல் அவனை என்ன சொல்வதென்றே அவனுக்குப் புரியவில்லை. சேகர் வெறும் முரடனுக இருக்கலாம்; ஆனுல் அவன் செய்திருக்கும் உதவிகளை யெல்லாம் எப்படி மறக்கமுடியும்?

"டேய்! இவளும் உஷாவின் காலேஜில் உஷாவின் வகுப்பில் தானடா படிக்



# முற்றிலும் புதியதொரு அறிவு உலகம்....

ஒரு நல்ல புத்தகம், படிப்பவரை முற்றிலும் புதியதொரு அறிவு உலகத்திற்கு அழைத்துச் செல்லும். சிந்தனைசக்தியில் எக்காலத்திலும் தீரராக விளங்கியவர்கள் புத்தக ரூபமாக நமக்கு வழங்கியுள்ள அழகான, அற்புதமான அறிவுக் களஞ்சியங்கள். இன்றே ஒரு நல்ல புத்தகம் படித்து, வாழ்வில் சிறப்பும் நிறைவும் பெறுக!

# இப்புது முறையில் படியுங்கள் — சிறந்தவற்றை வாசியுங்கள்

இந்நாட்டு இலக்கியங்களையும் அகில உலகப் புத்தகங்களையும் உங்கள் சொந்த மொழியிலேயே வாசிக்க ஒரு வாய்ப்பு. விலைகளும் உங்கள் சக்திக்கு உட்பட்டவைகளே. தென்மொழிகள் புக் டிரஸ்ட் முதன் முறையாக உங்களுக்கு உலகிற் சிறந்த புத்தகங்களைத் தமிழில், பாமரரும் புரிந்து மகிழத்தக்க எளிய நடையில் உயர்தரமாக அச்சிட்டு மலிவு விலைகளில் வழங்குகின்றனர்.

# சமீபத்தில் வெளியான இப்புத்தகங்களை வாசித்தீர்களா?



















அறிவுக் களஞ்சியத்தின்  அடையாளச் சின்னம்

# தென்மொழிகள் புக் டிரஸ்ட்,

**3, வீட்கிராப்ட் ரோட், நுங்கம்பாக்கம், சென்னை–31**

எமது எதிர்கால வெளியீடுகளின் விவரங்களை உடனுக்குடன் அறிய விரும்புவோர் இந்தக் கூப்பனைப் பூர்த்திசெய்து அனுப்புக. எமது நிரந்தரப் பட்டியலில் உங்கள் பெயரைப் பதிவு செய்துகொள்வோம். இதனால் உங்களுக்கு எவ்விதப் பொறுப்பும் ஏற்படாது.

**இப்பொழுதே அனுப்புங்கள்**

தயவுசெய்து உங்கள் புத்தகங்களின் பட்டியலை இலவசமாக எனக்கு அனுப்புங்கள். எதிர்கால வெளியீடுகளைப் பற்றியும் அவ்வப்பொழுது அறிவிக்கவும். இதனால் எனக்கு எவ்விதப் பொறுப்பும் ஏற்படாது.

பெயர்..............................

விலாசம்..............................

..............................

அல்லது தென் மொழிகள் புக் டிரஸ்ட், மார்க்கெட்டிங் இலாகா விலாசத்துக்கு நேராக எழுதி வரவழைத்துக் கொள்ளுங்கள்.

இருள்! இன்னும் இரண்டே மாதங்கள் தான் படிப்பு! உஷாவைப் போல், ஏன், அவளைவிடக் கூட இவளுக்கு எல்லாம் சொல்லிக்கொடுக்கத் தெரியும்! வேண்டு மானால் சொல்லு!'' என்று சொல்லி விட்டுச் சிரித்தான் சேகர்.

இந்தப் பரிகாசப் பேச்சைச் சகித்துக் கொண்டு பாபு அந்தப் பெண்ணைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டான். ஆனால் அவளோ அவனைக் கவனிக்காதது போல் இருந்து விட்டாள். பாபு இரண் டாவது முறையாக வணங்கியபோது அவள் ஒலியாகத் தலையை அசைத்து அதை ஏற்றுக் கொண்டாள்.

"உஷா இன்னும் வரவில்லையா?''

"இல்லை.''

"வந்தால் ஆம்பலழகி வந்திருந்தாள் என்று சொல்லுடா, பாபு!'' என்று கூறி ஸ்கூட்டரில் ஏறி உட்கார்ந்து கொண்டான் சேகர்.

"நோ, நோ! வேண்டாம், வேண் டாம். நான் இங்கெல்லாம் வந்தது உஷாவுக்குப் பிடிக்காது. அதனால் பிளீஸ், சொல்ல வேண்டாம்!'' என்று கேட்டுக் கொண்டாள் ஆம்பலழகி.

"நீ வேண்டாம் என்றால் அவன் சொல்லாமல் இருந்து விடுவானா? எப்படியும் அவன் சொல்லத்தான் போகிறான்! ஏண்டா பாபு அப்படித் தானே?'' என்றான் சேகர் சிரித்தபடியே.

போகிற சமயத்தில் வம்பு ஏன் என்று ஒன்றும் கூறாமல் நின்றான் பாபு. இதைப் பற்றி உஷாவிடம் சொல்வதா, வேண் டாமா என்று அவனால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

உஷா அன்று ஒப்பற்ற எழிலுடன் விளங்கினாள். ஒவ்வோர் அசைவிலும் பேச்சிலும் அசாதாரணமான கவர்ச்சி மிளிர்ந்தது. பாபுவுக்கு வேறு எதிலும் கவனம் செல்லவில்லை. சற்றைக்கொரு தடவை அவளையே பார்த்துக் கொண் டிருந்தான். தோட்டத்துப் பிள்ளைகள் சிலர் அவளைச் சூழ்ந்துகொண்டு சிரித்துக் குதித்துக் கொண்டிருந்தார்கள். உஷா வந்துவிட்டால் அவர்களுக்கு ஒரே உற் சாகம்தான். அவள் ஒரு நாளாவது வெறுங்கையோடு சங்கத்துக்கு வந்த தில்லை. நாலு பிஸ்கோத்துக்களாவது இருக்கும். இது வழக்கமாகிவிட்டது.

பாபு உள்ளத்தில் வேதனையோடு அந்த ஏந்தெழில் பாவையின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். உஷா வுக்கு அவன் போக்குச் சிறிது விசித்திர மாகவே பட்டது.

"என்ன இன்றைக்கு! உன்னைப் போலவே உற்சாகமின்றி இருக்கிறது இந்த இடம்!'' என்றாள் உஷா வெளியில் வந்ததும். சாலை விளக்குகள் அன்று எரியவில்லை. சங்கத்தின் வாசற்புறம் இருள் அடர்ந்து கிடந்தது.

"உஷா!'' என்று கை நீட்டினான் பாபு.

அவளும் கையை நீட்டிக் கொண்டிருந் தாளா என்ன? ஏன் இப்படி இருவ ருடைய கைவிரல்களும் நடுங்குகின்றன?

பாபுவுக்கு அதற்கு மேல் பேசவே தோன்றவில்லை. முரடனும் மூர்க்கனு மான சேகரைப் பற்றி இந்தப் புனித மான வேளையில் பேசப் பிடிக்கவில்லை.

தூய உள்ளமும் தூய அன்பும் கொண்ட உஷாவின் காதுபட ஆம்ப லழகியைப் பற்றிப் பேச அவன் சிறிதும் விரும்பவில்லை.

"உஷா!'' என்றான் அவன் மீண்டும். அவன் உதடுகள் நடுங்கின; குரலும் நடுங்கியது.

"ம்ம்...'' என்றாள் உஷா. அவளுடைய கைகள் நடுங்கின; உள்ளமும் நடுங்கியது.

ஒரு கண நேரந்தான்! அந்த ஒரு கணத்தில் வானமும் வையமும் வேற்று மையின்றிக் கலந்து சுழல்வது போல் இரு வருக்குமே தோன்றியது. பளிச்சென்று ஓர் ஒளிச் சுடர் மேல் வானிலிருந்து கீழ் வானில் பாய்ந்து மறைந்தது.

"சரி! நான் வருகிறேன்!'' என்று உஷா தெளிவு பெற்று முன்னால் நடந்தாள்.

பாபு நின்றுகொண்டே யிருந்தான்!

## அத்தியாயம் 22

# அதிர்ச்சி

மூத்தையாவுக்குத் திடீரென்று என்ன நேர்ந்தது என்றே ஒருவருக்கும் புரியவில்லை. முருகேசன் ஒருவனைத் தவிர வேறு யாரும் அவரைப் பார்க்கவே அனு மதிக்கப்படவில்லை. சாந்தமும் தெளிவும் கொண்ட அவருடைய முகம் ஒளியிழந்து காணப்பட்டது. பிரமை பிடித்தவர் போல் அவர் தோன்றினார்.

பல மாதகாலமாகவே படுத்த படுக்கை யாகிவிட்ட சபாபதியை மூன்று நாட் களுக்கு முன்புதான் அவர் பார்த்துவிட்டு வந்தார். அந்தக் கிழவன் மரணப் படுக் கையில் இருப்பதாகத் தெரிந்ததுமே, அவர் மனம் அதிர்ச்சியுற்றது.

"முருகு—அப்புறம் கேட்கவே மறந்து போனேன். சபாபதியைப் போய்ப்

பார்த்துவிட்டு வா!'' என்று தம்முடைய காரியதரிசியான முருகேசனை அனுப்பி வைத்தார் அவர்.

''இந்தப் பாவியைப் பார்த்துவிட்டு வரும்படி எசமான் சொன்னுங்களா? எங்க எசமான் சொன்னுங்களா?'' என்று மெய் நடுங்க, வாய் குழறக் கேட்டு, கண்ணீர் பெருக்கினுர் சபாபதி.

முருகேசனுக்குப் பரிதாபமாகத்தான் இருந்தது. இனி, சபாபதியா பிள்ளையின் காலமெல்லாம் நாள் கணக்கிலேதான் என்று அவன் கையோடு அழைத்துச் சென்றிருந்த டாக்டர் கூறியபோது அவனுக்கு மிகுந்த வருத்தமே உண்டாகியது.

''தம்பி! ஒரே ஒரு குறை! ஒரே ஒரு குறை இந்தக் கிழவன் நெஞ்சிலே! இத்துடன் செத்தால் என் நெஞ்சு வேகாது. ஒரு முறை எசமான் முகத்தைச் சாவதற்கு முன் நான் பார்க்க முடியுமா?'' என்று அந்தக் கிழவன் கேட்டது அவன் நெஞ்சை நெகிழச் செய்துவிட்டது.

முத்தையா மறு நாள் அவனைப் பார்த்துவிட்டு வருவதென்று முடிவு செய்துவிட்டார் ''காலையில் எட்டு ஒன்பதுக்கெல்லாம் போய்விட்டு வந்துவிடலாம்!'' என்று கூறி முருகேசனை அனுப்பி விட்டார்.

ஆனுல் அன்று இரவுக்கு மேல் அவன் பிழைத்திருப்பது அரிது என்று கூறினுன் அந்தச் சினுக்காரன். அவன் கண்கள் கலங்கியிருப்பதைக் கண்ட முத்தையா கடிகாரத்தைப் பார்த்தார். அப்பொழுது மணி ஒன்பது!

''பிள்ளைக்கு எசமான் நினைப்புத்தான்! எசமான், எசமான்னு வாய் உளறுது. அதான் வேகமாக ஓடியாந்தேன்!'' என்ருன் அந்த டிரைவர்.

முத்தையாவுக்கு அதற்கு மேல் மனம் பொறுக்கவில்லை. ''சரி; வண்டியை எடு!' என்று புறப்பட்டு விட்டார்.

அந்தச் சினுக்காரனைத் தவிர அவர் போனது, வந்தது வேறு யாருக்கும் தெரியாது. சபாபதியா பிள்ளையிடம் அவர் என்ன பேசிக்கொண்டிருந்தாரோ, என்ன நடந்ததோ அது அவனுக்கும் தெரியாது. எசமானை அழைத்து வரும்போதே அவனைப் பார்த்து, ''நீ வெளியில் இரு!'' என்பது போல் சபாபதியா பிள்ளை விரலால் சைகை செய்துவிட்டார். அந்த அளவுக்கு அவருக்குப் பிரச்னை இருந்ததாகத் தோன்றியது.

முத்தையா நடக்க மாட்டாமல் தள்ளாடியவாறு வெளியில் வந்ததைக் கண்ட சினுக்காரன் பயந்து போய்விட்டான். மெதுவாக அவரைத் தாங்கியவாறு வண்டிக்கு அழைத்துச் சென்ருன். அதேபோல் அவரை அவருடைய அறைக்கும் கொண்டு வந்து சேர்த்தான். அதற்குப் பிறகு அவர் வாயைத் திறந்து யாரிடமும் பேசவில்லை.

மறு நாள் காலையில் முருகேசன் வந்து பார்த்தபோது அவர் கட்டிலில் உட்கார்ந்து சுவரில் மாட்டியிருந்த புகைப் படங்களையே பார்த்துக் கொண்டிருந்தார். முருகேசனைத் திரும்பிப் பார்த்த கண்களில் ஒளியைக் காணவில்லை.

''சபாபதியா பிள்ளை பின்னிரவில் காலமாகி விட்டார்!'' என்ருன் முருகேசன்.

அவர் மௌனமாக அதைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவரிடமிருந்து ஏதாவது உத்தரவு பிறக்கும் என்று கால் மணி நேரமாகக் காத்திருந்தான் முருகேசன். அவர் வாயைத் திறக்கவில்லை.

''எல்லா ஏற்பாடுகளையும் கவனிக்க வேண்டியது தானே?''

அவர் அதற்கு மட்டும் தலையை அசைத்தார். கண்களிலிருந்து கரகர வென்று மாலையாக நீர் வடிவது தெரிந்தது. எல்லாவற்றுக்கும் தலையசைத்தான். சபாபதியாப் பிள்ளையின் அந்திமக் கிரியைகள் ஒரு குறைவுமின்றி நடந்தேறி முடிந்தன. தேன் கூட்டுச் சிப்பந்திகள் அனைவருமே வந்திருந்து அதனை நடத்தித் தந்தார்கள்.

ஆனுல் முத்தையாவைப் பற்றித்தான் எல்லோருமே பேசிக் கொண்டார்கள். சிறு வயது முதலே தம்மிடம் உழைத்து வந்த பிள்ளையின் மரணம் அவருக்குப் பெரிய அதிர்ச்சியைத் தந்து விட்டதாக எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

''டாக்டரை அழைக்கட்டுமா? சின்ன எஜமானுக்குத் தந்தி கொடுக்கட்டுமா?'' என்ருன் முருகு. வேண்டாம் என்று தலையை அசைத்து விட்டார் அவர். இன்னும் யார் யாரெல்லாமோ அவரைப் பார்க்க எண்ணி வந்தார்கள். அவர் ஒரேயடியாகத் தலையை அசைத்து விட்டார். மூன்று நாட்களுக்கு மேல் ஆகி விட்டன. அவருடைய நிலையில் ஒருவித முன்னேற்றத்தையும் காண வில்லை.

முருகேசன் தவியாய்த் தவித்தான். அவருடைய உத்தரவுக்கு முரணுகக் கண்ணபிரானுக்கு இதைத் தெரியப் படுத்துவதா, தெரியப் படுத்தாமல் இருப்பதா? இரண்டில் எதைச் செய்தாலும் தவருகி விடும் என்று தோன்றியது. கண்ணபிரான் இரண்டு மாத காலமாக மலாயாவின் வடக்குப் பகுதியிலுள்ள ராஜ்யம் ஒன்றில் தங்கியிருந்தான். அவனுக்கு இதைத் தெரிவிக்காமல் போனுல் பெரிய விபரீதமாகி விடாதா?

முருகேசன் உள்ளே சென்று மெள்ள எட்டிப் பார்த்தான். முத்தையா விமானப் பிரயாணத்துக்கான பையில் உடைகளை எடுத்து வைத்துக் கொண்டிருந்தார்.

(தொடரும்)



# பிஞ்சு உள்ளத்திலே



சரவன்

அந்தச் சிறுவன் தன் சேமிப்புத் தொகையை எண்ணிப் பார்த்தான். மொத்தம் பதினெட்டுக்காசுகள் இருந்தன. எல்லாம் இரண்டு நயா பைசாக்களும் ஒரு நயா பைசாக்களுமாக இருந்தன.

துள்ளிக் குதித்தான். ஆனந்தக் கண்ணீர் வடித்தான். அவனுடைய விருப்பம் நிறைவேற இனி யாதொரு தடையும் இருக்கப் போவதில்லை.

சில்லறைகளை எடுத்துக் கொண்டு ஓடினான் எதிர் வீட்டிலுள்ள சந்திரசேகரனிடம். "மாமா! மாமா!" என்று குதூகலத்துடன் குரல் கொடுத்துக் கொண்டே அவருடைய அறைக்குள் வேகமாக நுழைந்தான்.

அப்போது அவர் வியாபார விஷயமான கணக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்னடா துரைசாமி! என்ன விஷயம்?" என்றார் தம் பார்வையைக் கணக்குப் புஸ்தகத்திலிருந்து சற்று உயர்த்தி.

"மாமா! இந்தாருங்கள்" என்று கூறி அவர் முன்பு தன் கையிலிருந்த சேமிப்புத் தொகையைக் கொட்டினான்.

"என்னடா இது?" வியப்புடன் அவனை நோக்கினார் சந்திரசேகரன்.

"மாமா! கிணறு வெட்டப் பணம். நாளைக்கே வெட்ட ஆரம்பிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்," என்று கூறி அவரை ஆவலுடன் உற்று நோக்கினான் சிறுவன்.

சந்திரசேகரன் வாய்விட்டுப் பலமாகச் சிரித்தார்.

"என்ன மாமா, சிரிக்கிறீர்கள்?"

சிரிப்பை அடக்கிக் கொண்டார் அவர். "ஒன்றுமில்லையடா! உன் புத்திசாலித்தனத்தை எண்ணினேன். சிரிப்பு வந்தது!" என்று மழுப்பினார் அவர்.

"மாமா! நான் புத்திசாலியா? இல்லவே இல்லை. சுத்த அசடு. மாமா! புத்திசாலியாக இருந்தால் இந்தப் பணத்தை என் அம்மா செத்துப் போனபின் சேமித்திருப்பேனா? அவள் உயிருடன் இருக்கும்போதே சேர்த்து, ஊர்க்கோடியில் உள்ள பிள்ளையார் கோயிலுக்குப் பக்கத்தில் கிணறு வெட்ட ஆரம்பித்திருக்க மாட்டேனா?" சிறுவன் கண்களிலிருந்து நீர் 'குபுகுபு'வென்று புறப்பட்டுத் தரையில் விழுந்து சிதறியது.

சந்திரசேகரன் இதைக் கண்டு கலங்கினார். சிறுவனைச் சமாதானம் செய்து, "துரை! அழாதே. நாளைக்கே உன் பணத்தைக் கொண்டு கிணறு வேலையை ஆரம்பித்து விடுகிறேன்" என்றார்.

"மாமா! இன்னும் சரியாக ஒரு வாரத்துக்குள் கிணறு பூர்த்தியாக வேண்டும். கோடிவீட்டுக் காமாட்சிப்பாட்டி, இந்தத் தள்ளாத வயதில் இரண்டு மைல்கள் நடந்து போய்த் தண்ணீர் கொண்டு வருவதைப் பார்க்க எனக்கு அழுகையாய் வருகிறது" என்றான் சிறுவன் துரை.

"ஆகட்டும். நீ போய் வா" என்று அவனை அனுப்பினார் சந்திரசேகரன்.

துரைக்குப் பத்து வயதுதான் ஆகிறது. அவனுடைய விதவைத் தாயார் சில தினங்களுக்கு முன்புதான் மாண்டு போனாள். தான் எப்பாடு பட்டாயினும் மகனை நன்றாய்ப்

படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வர வேண்டும் என்று ஆசைப்பட்டாள். ஆனால் விதி சதி செய்துவிட்டது. இரண்டே நாள் காய்ச்சல் அவள் உயிரைச் சூறையாடியது.

தினமும் காலையில் எழுந்ததும், அவள்தான் ஒரு குடத்தை எடுத்துக் கொண்டு, ஊருக்கு அப்பால் இரண்டு மைல் தொலைவிலுள்ள குளத்துக்குச் செல்வாள், குடிநீர் கொண்டு வர. அவளுடன் துரையும் செல்வான் ஒரு சிறு செம்புடன். வயல் வரப்பிலே நடந்து முள்ளும் கல்லும் பாதங்களைப் பதம் பார்க்க அவர்கள் பட்ட சிரமம்!

''அம்மா! ஏன் இவ்வளவு தூரம் நடக்க வேண்டும்?'' என்றான் துரை ஒரு நாள்.

''ஊருக்குப் பக்கத்தில் ஒரு கிணறு இருந்தால் இந்தத் தொல்லையே இல்லை. எந்த மகானுபாவன் அந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளப் போகிறாரோ! ஊரிலே பணம் படைத்தவர்களுக்குப் பஞ்சம் இல்லை. ஆனால் நல்ல மனம் படைத்தவர்களைத் தானே காணோம்?''

சிறுவனுக்கு அம்மா சொன்னது ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் ஒன்றுமட்டும் விளங்கியது; ஊருக்குப் பக்கத்தில் ஒரு கிணறு இருந்தால் தாம் தண்ணீருக்காக இத்தனை தூரம் கஷ்டப்பட்டு நடக்கத் தேவையில்லை என்பதுதான்.

அன்று துரையின் தாயார் தண்ணீர் சுமந்து வருகையிலே வழியில் காலில் முள் தைத்துத் தடுமாறிக் குடத்துடன் கீழே விழுந்துவிட்டாள். 'ஓ'வென்று அலறினான் துரை.

அதே காரணமாகப் படுத்த அவனுடைய தாயார் ஜுரம் கண்டு, இரண்டே நாட்களில் நெடும் பயணம் எய்தினாள்.

அம்மாதான் போய்விட்டாள். அவன் மாதிரி துன்பம் இனி யாரும் அந்த ஊரில் அனுபவிக்கக் கூடாது என்று அவன் பிஞ்சு மனத்தில் உதித்தது எண்ணம்.

எதிர்வீட்டுச் சந்திரசேகரர் அவனிடம் சற்றுப் பிரியமும் அனுதாபமும் காட்டினார். திக்கற்ற அவனுக்குத் தம் வீட்டில் ஒரு வேளைச் சோறு போட்டார். அவருக்குக் குழந்தைகள் இல்லை. எனவே துரையினிடம் அவர் சற்றுச் சரளமாகவே பேசினார்.

அன்று துரை அவரை அணுகி, ''மாமா! ஒரு கிணறு வெட்ட எத்தனை பணம் வேணும்?'' என்று கேட்டான்.

அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை. ''ஏன் கேட்கிறாய்?'' என்றார்.

''இல்லே, சொல்லுங்க, மாமா!'' என்று வற்புறுத்திக் கேட்டான்.

''பத்துக் காசு இருந்தால் போதும்'' என்றார் சிரிப்பை அடக்கிக் கொண்டு.

''சரி!'' என்று ஓடிவிட்டான் துரை.

தாயில்லாப் பிள்ளை என்ற காரணத்தினால் அவன் மீது இரக்கம் கொண்ட இவர், அவனுக்குக் காசு கொடுத்தார். துரை தனக்குக் கிடைக்கும் சில்லறைகளைச் சேர்த்து வைத்தான். சந்திரசேகரன் குறிப்பிட்ட 'பத்து காசு இருந்தாப் போதும்' என்ற சொற்கள் அவன் செவியிலே தாரக மந்திரமாய் ஒலித்துக் கொண்டிருந்தன.

பணம் கிடைத்து விட்டது. ஆம்...தேவைக்கும் மேல் எட்டுக் காசுகள்! பணத்தை எதிர் வீட்டு மாமாவிடம் ஒப்படைத்து விட்டான். இன்னும் சில தினங்களிலே கிணறு தோன்றி விடும். தன் அம்மாவைப் போல் இனி யாரும் தண்ணீருக்காகக் கஷ்டப்பட வேண்டாம். ஊருக்குப் பக்கத்திலேயே அதிக தூரம் நடக்காமல் தண்ணீர் எடுத்துச் செல்லலாம். பிஞ்சு மனம் பூரிப்படைந்தது!

மறுநாள் பிள்ளையார் கோயில் அருகில் கிணற்று வேலை ஆரம்பமாயிற்று. துரை உணவையும் மறந்து அருகில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

காமாட்சிப் பாட்டி அந்தப் பக்கம் சென்றான். ''பாட்டி! உன் கஷ்டம் இனி தொலைந்தது. இதோ கிணறு வெட்டு கிறார்கள்'' என்றான் துரை உற்சாகத்துடன்.

கட்சிகள் இல்லாத ஊர் இருக்க முடியாது தல்லவா? சந்திரசேகரரைக் காட்டிலும் செல்வத்திலும் செல்வாக்கிலும் மேம்பட்ட சிலர் கூடிப் பேசினார்கள். இத்தனை பெரிய ஊரில் மக்களுக்கு நல்ல குடி தண்ணீர் வசதி, பக்கத்திலேயே கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற எண்ணமே அவர்களில் யாருக்கும் உதித்ததில்லை. அந்தத் தேவையை அவர்கள் உணர்ந்திருந்தாலும், தங்கள் கையைக் கடித்து விடுமே என்று பயந்து போய்ச் சும்மா யிருக்க முடிவு செய்து விட்டனரோ என்னவோ! யார் கண்டது?

இன்று சந்திரசேகரனுக்கு அந்தப் புகழும், பெருமையும் கிடைக்கின்றன என்றால் அவர்களால் எப்படிச் சும்மாயிருக்க முடியும்?

பிள்ளையார் கோயிலுக்குச் சற்றுத் தொலைவில் பஞ்சாயத்து போர்டுப் பள்ளிக்கூடம். அதன் பக்கத்திலே ஒரு பெரிய கிணறு—சந்திரசேகரனின் முயற்சியில் தோன்றும் கிணற்றை விட இரு மடங்கு பெரிய அளவில் தோண்டப்பட்டது. வேலை வெகு வேகமாக நடந்தது. ஊர்ப் பிரமுகர்கள் முனைந்து தொடங்கிய வேலைதான் இது.

ஊருக்கு என்ன? கொண்டாட்டம்தான். ஒன்றுக்கு இரண்டு கிணறுகள் அல்லவா தோன்றுகின்றன!

சிறுவன் துரை சந்தோஷப்பட்டான். ''மாமா! நம் ஊரில் இன்னொரு கிணறும் தோண்டுகிறார்கள். அடி. சக்கை!'' என்று கூவினான். போட்டிக் கிணறு தோன்றும் வரலாற்றை அவனால் எப்படி அறிய முடியும்?

கிணறு வேலை பூர்த்தியடைந்தது. துரையின் தூண்டுதலினால் வெட்டப்பட்ட கிணற்று நீர் அருமையாய் இருந்தது. ஆனால் போட்டிக்காக வெட்டப்பட்ட கிணற்றின் நீர் வாயில் வைக்க வழங்கவில்லை. அவர்கள் மனம்போல் அமைந்தது தண்ணீரும்!

''மாமா! நம் கிணற்றின் அடியில்தான் ஜனங்கள் எப்போதும் கூட்டமாய் இருக்கிறார்கள். பள்ளிக்கூடக் கிணற்றடியில் யாரையுமே காணோமே!'' என்றான் துரை அன்று.

''ஆமாம். அந்தக் கிணற்று நீர் ஒரே உப்பாம். நம் கிணற்று நீர் கற்கண்டு மாதிரி இருக்கிறது அல்லவா? அதனால்தான் எல்லோரும் நம் கிணற்றுக்குப் போகிறார்கள்'' என்றார் சந்திரசேகரன்.

AM-679



# அமிர்தாஞ்சனம்

வலி உண்டாக்கும் உபாதையை
ஆபத்தான நிலைவருமுன் போக்குகிறது.













அமிர்தாஞ்சனம் வலியைப் போக்குவதோடு அல்லாமல் அதன் மூல காரணத்தையும் நீக்குகிறது. அது இரத்த நெருக்கத்தை அகற்றி சுலபமாக இரத்த ஓட்டத்தை மீண்டும் ஏற்படுத்த உதவுகிறது.

ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்கவேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடு நாள்வரை நீடிக்கிறது.



அமிர்தாஞ்சனம் லிமிடெட் மதறாஸ்-4, பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடில்லி

# சிரிக்காதே!

### விடாக் கண்டர்!

வெளியிலே பிடித்துத் தள்ளப்பட்டவர் தள்ளியவரிடம் :
"மாமா! நான் போயிட்டு வரேன் என்று வீட்டில் எல்லோரிடமும் சொல்லி விடுங்கள்!"

### அனுதாபம்!

"நீங்கள் எலெக்ட்ரிக் ஒயரில் கை வைத்துப் பேராபத்திலிருந்து தப்பித்துக் கொண்டீர்களாமே! ஏன் சார் அப்படிச் செய்தீர்?"
"ஏன் ஒயரில் கை வைத்தீர் என்கிறீரா? இல்லை, ஏன் தப்பித்துக் கொண்டீர் என்கிறீரா?"

### யார் இவர்?

போனில் இரண்டு பேர்கள் பேசுகிறார்கள் :
"சும்மா நிறுத்தய்யா! ரொம்ப விரட்டாதே!"
"என்னை நான் யார் தெரியுமா, நான் போலீஸ் தலைமை அதிகாரி!"
"ஓ! அப்படியா? நான் யார் தெரியுமா?"
"உம்...தெரியாது!"
"அப்பாடியோ! நல்ல காலம்! நான் பொழச்சேன்!"

### பேச்சாளர்கள்!

"போய் வந்து விட்டீர்களா?"
"ஆமாம்!"
"ரொம்பக் கூட்டமோ?"
"அசாத்தியக் கூட்டமுங்க!"
"எத்தனை பேர் பேசினாங்க?"
"ரொம்பப் பேர் பேசினாங்க!"
"சுமாரா எத்தனை பேர்கள் பேசி இருப்பாங்க?"
"சுமாரா! ஒரு மூவாயிரம் பேர் பேசினாங்க!"
"அடேயப்பா! அத்தனையையுமா கேட்டுக்கிட்டு வந்தீங்க?"
"நான் மீட்டிங்கிலிருந்து வரலீங்க சார். சங்கீதக்கச்சேரியிலிருந்து வரேன்!"

### என்ன செய்வது?

"தம் பெண்ணைக் காதலிப்பதை உடனே நிறுத்தா விட்டால் என் உயிருக்கே ஆபத்துநேரும் என்று பெண்ணின் தகப்பனார் எனக்குக் கடிதம் எழுதி இருக்கிறார்...என்ன செய்வது...?"
"செய்வது என்ன! அந்தப் பெண்ணைக் காதலிப்பதை உடனே நிறுத்திவிடு."
"எந்தப் பெண்ணை என்றுதானே எனக்குத் தெரியவில்லை. கடிதத்தில் தகப்பனாரின் கையெழுத்து இல்லையே!"

பெருமை பிடிபடவில்லை துரைக்கு. "மாமா! இன்று காலை காமாட்சிபாட்டி நம் கிணற்றில் தண்ணீர் மொண்டு கொண்டிருந்தாள். அவள் வாய் முணு முணுத்தது. 'மகாராஜன்! சந்திர சேகரன் க்ஷேமமாய் வாழணும். அவருடைய நல்ல மனசுக்கு அவருக்குச் சீக்கிரம் ஒரு குழந்தை பிறக்கணும்' என்றாள். உங்கள் பேரில் அவளுக்கு எவ்வளவு அன்பு மாமா?"

சந்திரசேகரனின் மனம் நெகிழ்ந்தது. அவர் ஊரில் அன்பையும் வாழ்த்தையும் பெற்றார். ஆனால் அவர் செய்த பணிக்குத் தூண்டுதலாய் இருந்தவன் யார்? துரையல்லவா? உலக விவரமேயறியாத ஓர் ஏழைச் சிறுவன்! ஊருக்குத் தேவையான அந்தக் கிணறு அவனுடைய தூண்டுதல் இல்லாமல் இப்போது ஏற்பட்டிருக்குமா? தன் காசில்தான் அந்தக் கிணறு வெட்டப்பட்டது என்று அவன் பிஞ்சு மனம் எண்ணியது. ஆனால் என்ன? சந்திரசேகரன் செலவு செய்த எழுநூறு ரூபாய்களும் அந்தச் சிறுவன் அளித்த பதினெட்டு நயா பைசாக்களுக்கு ஈடாகுமா? ஒருகாலும் ஆகாது. இப்படித்தான் சந்திரசேகரனின் உள்ளம் எண்ணிக் கொண்டது.

சிறுவனின் சேவை உணர்ச்சியை ஊர் அறியச் செய்ய வேண்டும் என்று அவர் விரும்பினார். ஊர் தமக்கு அளிக்கும் கௌரவமும், பாராட்டுக்களும் உண்மையில் சேர வேண்டியது அந்த ஏழைச் சிறுவன் துரைக்குத்தான் என்று அவர் கருதினார்.

"துரை!"
"ஏன், மாமா?"
"இன்று மாலை பிள்ளையார் கோயிலில் ஜனங்கள் கூடப் போகிறார்கள்."
"எதற்காக மாமா?"
"உன்னைப் பாராட்டத்தான்."
"என்னையா?"
"ஆம்."
"நான் என்ன செய்தேன்?"
"அந்தக் கிணறு தோண்டுவதற்கு நீதானே பணம் தந்தாய்!"
சிறுவன் துள்ளி எழுந்தான்.
"மாமா! மாமா! வேண்டாம் நான் வரமாட்டேன்!"
"ஏன்டா?"
"ஐயோ! நான் கிணறு வெட்டப் பணம் கொடுத்தது யாருக்கும் தெரியக் கூடாது. என் அம்மா சொல்லியிருக்கிறாள்..." என்றான் துரை.
சந்திரசேகரன் திடுக்கிட்டார். "என்னடா சொன்னாள் உன் அம்மா?"
"உள்ளன்புடன் தர்ம காரியம் செய்கிறவர்கள் தாங்கள் செய்யும் தர்மங்கள் மற்றவர்களை அறியாவண்ணம்தான் செய்வார்களாம். அதுபோல் நான் செய்த தர்மமும் யாருக்கும் தெரியக் கூடாது" என்றான் துரை. சந்திரசேகரன் செயலற்று நின்றார்!

# கண்கள் உறங்காவோ?

### அத்தியாயம் 6

## வழுக்கு மரம்

நோயாளிகள் அமரும் பெஞ்சில் டாக்டர் வீணா தானும் ஒரு நோயாளியாக அமர்ந்து விட்டாள். ஆனால் அவளுக்கு வந்திருந்தது உடல் நோயன்று; உடல் நோயினும் கொடிய மன நோய். அது அவள் உள்ளத்தைக் குடைந்தது; நினைவைப் பறித்தது; வீணா என்ற எழிலும் இளமையும் நிறைந்த ஊனுடல் தங்கையை ஓர் அலங்காரப் பொம்மையாக அந்தப் பெஞ்சிலே அசைவற்றுக் கிடத்தியது.

எத்தனை நேரம் அவள் அவ்வாறு அமர்ந்திருந்தாளோ? அது அவளுக்கே தெரியாது. இடையே உள்ளே சென்றிருந்த மாலா திரும்பி வந்தாள். அவள் எந்நிலையில் வந்தாள் என்பதை வீணா அறியாள்; என்ன பேசினாள் என்பதை அவள் அறியாள்; எப்பொழுது தன்னிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றாள் என்பதையும் அவள் சிறிதும் அறியமாட்டாள். அவள் அறிந்ததெல்லாம் ஒன்றே ஒன்றுதான் - சுந்தரம் மாலாவைக் காதலித்தார். மணம் செய்து கொள்ளத் துடிதுடித்தார். கடைசியில் தான் இந்த ஊருக்கு வந்த அன்று தன்னைப் போன்றோருக்குப்பரிந்து கொண்டு மாலா பேசிய ஒரு பேச்சினால், கணத்தில் அவளை உதறி விட்டுத் தன்னிடம் மனத்தைத் திருப்பி விட்டார்; இது அவள் இதுவரை அறியாதது; அன்றும், இன்றும் எதிர்பார்த்தே இராதது. அதுவும் எங்கே, எவ்வளவு தூரம் அவள் வந்துவிட்ட பிறகு அது தெரிய வந்திருக்கிறது !

சட்டென்று அவள் மரத்த மனத்தில் ஒரு நிகழ்ச்சி நிழலாடிற்று. சில நாட்களுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சி அது. அவளும் சுந்தரமும் கண்டு, விழுந்து விழுந்து நகைத்த நிகழ்ச்சி. அன்று






மட்டும் அதே நிலை தனக்கும் விரைவில் ஏற்படும் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தால்...?

இது என்ன புரட்டாசி மாதமா? ஆமாம்; சரியாகச் சொல்வதென்றால் அந்த நிகழ்ச்சி நடந்து ஒருமாதந்தான் ஆகிறது. வீணாவுக்கு இந்தப் பண்டிகை, பாரணை எல்லாம் அதிகமாகத் தெரியாது. வடநாட்டில் வாழ்வின் பெரும் பகுதியைக் கழித்து விட்டமையாலோ, அல்லது ஹிந்துப் பண்டிகை-பாரணைகளுக்கு விலக்கப்பட்ட துர்ப்பாக்கிய நிலையில் அவளைச் சமூகம் வைத்திருந்ததாலோ, எதுவோ, அவளுக்கு நல்ல நாளும், பொல்லாத நாளும் ஒன்றுதான். பண்டிகை நாளும் அவளுக்கு ஒன்றே; சாதாரண நாளும் ஒன்றே. ஆனால் அன்று அவளுக்குத் திடீரென்று ஒரு பண்டிகையை நினைவூட்டினான் சுந்தரம்.

அன்று பகல் சாப்பாடு எடுத்துவர ஸ்டேஷன் ஹோட்டலுக்குச் சென்ற ஆஸ்பத்திரி வேலையாள் மாணிக்கம் சிறிது தாமதமாகவே திரும்பி வந்தான். "ஏன் மாணிக்கம் இவ்வளவு லேட்?" என்று சுந்தரம் கேட்டபோது அவன் அசட்டுச் சிரிப்புச் சிரித்தவாறு, "இல்லீங்க; சாமி பகல் வேட்டையாட வயல்கரைப் பக்கம் வந்திருந்தது; செத்தெ நேரம் வேடிக்கை பாத்துக்கிட்டு நின்னுட்டேன்" என்றான். "ஓ! இன்று கோகுலாஷ்டமியா?" என்று கூறிய சுந்தரம் வீணாவை நோக்கி, "ஏன் வீணா, காசிப்பூரில் இந்தப் பண்டிகை உண்டோ?" என்று கேட்டான். "எனக்குப் பண்டிகையும் தெரியாது; பாரணையும் தெரியாது" என்று அலுத்துக் கொண்டாள் வீணா. "இல்லை வீணா, இந்தப் பண்டிகைகள் எல்லாவற்றிலும் எனக்குப் பிடித்த பண்டிகை கோகுலாஷ்டமிதான். மிகவும் வேடிக்கையான பண்டிகை. சிரிப்பூட்டும் நிகழ்ச்சிகள் பலப்பல உண்டு. கண்ணன் பிறந்து, பாலப் பருவத்தில் நிகழ்த்திய லீலைகளையெல்லாம் செய்து காட்டுவார்கள். பகல் வேட்டை, உறியடி, வழுக்கு மரம் ஏறுதல் எல்லாம் நடைபெறும். நீ அதையெல்லாம் பார்த்ததே இல்லையே? வா, இன்று மாலையில் கேசவன் கோவில் முன் நடைபெறும் உறியடியையும், வழுக்கு மரம் ஏறுவதையும் போய்ப் பார்த்து வரலாம். பிறகு உன் வயிறு வெடித்துப் போகும்படியாக அதை நினைத்துச் சிரித்துக் கொண்டே இருப்பாய்" என்று கூறி, அன்று மாலையில் அவளைக் கேசவன் கோயிலின் முன்னுள்ள பெரிய மைதானத்துக்கு அழைத்துச் சென்றான்.

வீணா இம்மாதிரியாக கிராமாந்திரப் பண்டிகைகளைப் பார்த்ததே இல்லையாத

லால் அதன் ஒவ்வோர் அம்சத்தையும் ரசித்தான். முதலில் உறியடி நடந்தது.

அடுத்ததாக வழுக்கு மரம் ஏறும் நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. சுமார் இருபத்தைந்து அடி நீளமுள்ள வழு வழுப்பான தடித்த காட்டு மூங்கில் ஒன்றை நிலத்தில் நட்டிருந்தார்கள். அதன் உச்சியில் குடைபோல் பட்டுத் துணியால் செய்து, அதில் தின்பண்டங்கள், பட்டுத்துணிகள், ரூபாய் நோட்டுக்கள் முதலியவற்றைக் கட்டித் தொங்க விட்டிருந்தார்கள். ஏற்கெனவே வழு வழுப்பாக இருந்த அந்த மூங்கிலில் விளக்கெண்ணெயையும் வழிய வழியத் தடவியிருந்தார்கள். போதாதற்குச் சிலர் தண்ணீரை வேறு அம்மரத்தின் மீது அடிக்கடி வாரி இறைத்துக் கொண்டிருந்தார்கள். இத்தகைய மரத்தில் ஒவ்வொருவராகச் சில இளைஞர்கள் ஏறி மேலே கட்டியிருந்த பரிசுப் பொருள்களை எடுத்துக் கொள்ள முயன்றார்கள். சிலரால் சில அடிகள்கூட ஏற முடியவில்லை. வழுக்கி வழுக்கி விழுந்தார்கள்.

சட்டென்று சுந்தரம் ஏதோ நினைத்துக்கொண்டு, அவன் கையைப் பிடித்தவாறு, "நான் ஒன்று சொல்லட்டுமா, வருத்தப்பட்டுக் கொள்ளமாட்டாயே?" என்றான். அப்பொழுது வழுக்கு மரத்தில் ஒருவன் பலதடவை வழுக்கி விழுந்த பிறகு வெகு தூரம் மேலே ஏறிவிட்டிருந்தான். ஆயிற்று, இன்னும் இரண்டு எட்டுக்கள் எடுத்து வைத்துவிட்டானானால் மேலே கட்டியிருக்கும் குடைக் கம்புகளில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு விடுவான். பிறகு கவலையேயில்லை. வீணா பரபரப்புடன் அவனை நோக்கிக் கொண்டே "சொல்லுங்கள்" என்றாள்.

"இந்த வழுக்குமரத்தில் ஏறும் முயற்சி எனக்கு உன்னை நினைவூட்டுகிறது. நீயும் இப்படித்தானே ஓர் எட்டு முன் வைப்பதும் நாலு எட்டுக்கள் பின் வாங்குவதாகவும் இருந்தாய்!" என்றான் சுந்தரம்.

வீணாவின் கண்ணும் கருத்தும் வழுக்கு மரத்தில் இருந்தவன் மேல் லயித்திருந்தன. அவளால் சுந்தரத்தின் இந்த வேடிக்கையை அப்பொழுது ரசிக்க முடியவில்லை. அதோ, அவன் இன்னும் ஓரடி மேலே போய் விட்டான். அதோ அடுத்த அடி மேலே ஏறுகிறான்; ஏறிவிட்டான்; ஒரு கையால் குடைக் கம்புகளில் ஒன்றைப் பிடிக்கப் போகிறான்! வீணா சட்டென்று சொன்னாள்: "இருக்கட்டுமே; ஆயினும் கடைசியில் இந்த மனம் தளராத இளைஞனைப்போல் நானும் உச்சிக்கு வந்து நிலைப்பட்டு விட்டேனே!" அவள் பெருமை மலரச் சுந்தரத்தின் முகத்தை நோக்கினாள்.

மறுகணம் கூட்டத்திலிருந்து பெரும் சிரிப்பு வெடித்தது. கைதட்டலும் கேலிச் சீட்டிகளும் வானைப் பிளந்தன. என்ன? பற்றி விட்டானா? வீணாவின் கண்கள் ஆவலுடன் வழுக்கு மரத்தின் நுனியை நோக்கின. ஆனால் இது என்ன? எங்கே அந்த இளைஞன்? சுந்தரத்தின் நகைப்பும் பேச்சும் அவளுடைய பெருமைப் பார்வையைக் கீழே கொண்டு வந்தன. "என்னவோ, யார் கண்டார்கள்? கடைசி நிமிஷத்தில்கூட இவனை மாதிரி 'பல்டி' அடித்து விடுகிறாயோ, என்னவோ, நீ?"

நோயாளிகளின் பெஞ்சில் அமர்ந்து கொண்டிருந்த வீணாவின் செவிகளில் அன்று சுந்தரம் கூறிய இம்மொழி பேயாய் அறைந்தது. ஆம், அவள் கடைசி நிமிஷத்தில் வழுக்கு மரத்தினால் சறுக்கி விடப்பட்டு, மீண்டும் தரை மட்டத்துக்கு வந்து விட்டாள்.

அன்று அந்த இளைஞன் மனம் தளர்ந்து விடவில்லை; மீண்டும் ஏறினான்; வழுக்கி விழுந்தான். ஏறினான்; வழுக்கி விழுந்தான். ஆயினும் இறுதியில் அன்று அவனேதான் குடையில் தொங்கிய பொருள்கள் அனைத்தையும் எடுக்கவும் செய்தான். அதுபோல் வீணாவும் தனது புரட்சி வாழ்வென்ற வழுக்குமரத்தில் மீண்டும் ஏறத்தான் போகிறாள்; அதன் உச்சியை எட்டி, குடையில் தொங்கும் தனது பறிக்கப்பட்ட வாழ்க்கை இன்பங்களைப் பற்றிக் கொள்ளத்தான் போகிறாள். ஆனால் அவள் சுந்தரம் என்ற வழுக்கு மரத்தில் ஏறி அதைப் பெற முடியாது. ஏனென்றால் அவன் தன் மரமில்லை என்பது அவளுக்கு இப்பொழுது தெள்ளத் தெளிவாகி விட்டது. அவன் மாலாவின் வாழ்க்கை மரம்.

வீணா பிறர் உடைமையான அந்த மரத்தை நெருங்கலாமா? அதில் பின்னிப் படர்ந்து உச்சிக்கு ஏறி, வாழ்க்கை இன்பப் பொருள்களை அடைய ஆசை கொள்ளலாமா? எந்நிலையிலும் தன்னலமே பெரிதென்று கருதும் சிலர் இந்த நிலையிலுங்கூடக் கைக்குக் கிட்டியதை விட்டு விடலாகாதென்று கருதலாம். நானும், அவளும்; அவரும் அறிந்த ரகசியந்தானே இது? அவரோ அவளை உதறி விட்டார். என்னையே ஏற்றுக் கொள்ளத் துணிந்து விட்டார். அவளும் இனி அவரைத் திரும்பப் பெறுவோம் என்ற நம்பிக்கை இழந்துதான் இருக்கிறாள். ஆதலால் நாம்பாட்டுக்கு நம் நலத்தைப் பார்த்துக் கொள்ளுவோம் என்று துணியலாம். ஆனால் வீணா அப்படித் துணிய மாட்டாள். அவளுடைய நேர்மை அத்தனை துரோகமாக நடந்து

கொள்ள இடம் தராது; முடியாது. இனி முடியாது. சுந்தரத்தைக் கொழுகொம்பாகக் கொண்டு தனது புரட்சி வாழ்வை அவன் பலத்தில் படர விட முடியாது. ஆனால் அதற்காக அவள் தோற்று ஓடிப் போய்விடப் போவதில்லை. வேறு யாரை யாவது பிடித்துக் கொண்டு, துணை சேர்த்துக் கொண்டு மீண்டும் முன்னேறத்தான் போகிறாள். ஆனால் நிச்சயமாகச் சுந்தரத்துடன் இல்லை. ஆனால்...?

ஒன்றைப் பத்தாக, நூறாக, ஆயிரமாக இல்லை இன்னும் அதிகமாக-லட்சமாகக் காட்டும் சக்திமிக்க பூதக்கண்ணாடியால் பெரிதாக்கிக் காட்டப்பட்டதுபோல் அத்தனை பெரிதாக, இந்த 'ஆனால்' என்ற வார்த்தை வீணாவின் மனக்கண்முன் தோன்றி மேலும் வளர்ந்தது. நீ உடைமையாக்கிக் கொள்ள முயன்ற பொருள் பிறருடையது என்று அறிந்ததும், அதை அப்படியே உதறி எறிந்துவிட்டுப் போய் விடுவதுதான் நேர்மையா? உண்மை அறியாமல் அதை யாரிடமிருந்து பறித்துக் கொண்டாயோ, அவளிடம் ஒப்படைத்து, 'தெரியாமல் செய்துவிட்டேன்; மன்னித்துக் கொள்' என்று கேட்டுக் கொள்ள வேண்டாமா? அதுதானே முழுமையான நேர்மை?

அசையாச் சிலையாக அமர்ந்திருந்த வீணாவின் உதடுகள் இப்பொழுது அசைந்தன. "ஆமாம்!" என்றாள் அவள். "பின் எழுந்திரு" என்றது அந்தப் பூதக் கண்ணாடி. "உடனே சுந்தரத்திடம் போ! என்னை ஏமாற்றி வஞ்சகியாக்கப் பார்த்தீர்களே என்று கடிந்துகொள். வேறு என்ன என்ன சொல்ல வேண்டுமோ, சொல்; என்ன என்ன செய்ய வேண்டுமோ, செய். எப்படியாவது அவனை மீண்டும் மாலாவுடன் இணைத்து விடு...."

முழுவதும் கேட்க வீணா அமர்ந்திருக்கவில்லை. அந்த அசையாச் சிலை முழு மூச்சுப் பெற்றெழுந்தது. ஆஸ்பத்திரி வீட்டின் உள்ளே சுந்தரம் படுத்திருந்த தாழ்வாரத்தை நோக்கிப் பாய்ந்தது. அங்கே....அங்கே....

அவளுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது! அடுக்களையில் படுத்திருந்த சச்சிதானந்தம், சுந்தரத்தின் கட்டிலில் அவன் அருகில் வந்து அமர்ந்து, பேசிக் கொண்டிருந்தார்!

"அப்பா! அப்பா! நீங்கள் ஏன் எழுந்து வந்தீர்கள்? உங்கள் உடம்பு...?" வீணா அலறினாள்.

சச்சிதானந்தம் மகளை நோக்கினார். ஏன் அவர் கண்களில் இத்தனை கண்ணீர்? அந்தக் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளாமலே அவர் பேசினார்: "என் உடல் சரியாகி விட்டது, வீணா; ஆனால் உள்ளம் சுக்கல் சுக்கலாக உடைந்து விட்டது. ஒரே கணத்தில்! ஒரே வார்த்தையில்! ஒரே உண்மையில்!"

"அவருக்கு மண்டையில் பட்ட அடி மூளையைக் குழப்பிவிட்டது, வீணா!" என்று சச்சிதானந்தத்தை இடைமறித்துக் கூறினான் சுந்தரம்.

சச்சிதானந்தம் வீணாவை நோக்கிச் சோகச் சிரிப்புச் சிரித்தவாறு, "இல்லை வீணா; என் மூளை குழம்பவில்லை. அது இப்பொழுதுதான் தெளிவடைந்தது. சின்னஞ்சிறு பெண், நம் மாலா வந்து என் கண்களைத் திறந்து விட்டாள். உலகம் அறிந்த வக்கீல், உலகம் அறிந்த திவான் என்ற பெருமையில் உலகத்தை அறியாமல் போய்விட்ட இந்த அறிவிலிக்கு அந்த உலகம் அறியாச் சிறுமி அறிவு புகட்டிவிட்டாள். வீணா! சுந்தரம் அவளுடையவன்; அவனை நீ அவளிடமிருந்து பறித்துக் கொள்ளக் கூடாது!"

"நிறுத்துங்கள்!" என்று கூவினான் சுந்தரம். அவன் கண்கள் அனலைக் கக்கின. "என் வீணாவை என்னிடமிருந்து பிரிக்க இனி எந்தத் தெய்வத்தாலும் இயலாது!"

"பிரித்தே தீருவேன்! என் உயிரே போனாலும், நான் வளர்த்த ஒரு செல்வத்தின் உடைமையை மற்றொரு செல்வம் பறித்துக் கொள்ள அனுமதிக்க மாட்டேன். வீணா....!" அவர் அவளை நோக்கித் திரும்பினார்.

"எனக்கு எல்லாம் தெரியும், அப்பா! மாலா என்னிடமும் சொல்லி விட்டாள். கவலைப் படாதீர்கள்; உடலை அலட்டிக் கொள்ளாதீர்கள். உங்கள் உடல் நிலை இப்பொழுது இத்தகைய அலட்டல்களைத் தாங்காது. எழுந்திருங்கள். ம்... எழுந்து உங்கள் படுக்கையில் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்."

"சொன்னாளா? உன்னிடமும் சொல்லி விட்டாளா? அப்பாடி! என் கவலை தீர்ந்தது! எனக்குத் தெரியும், என் மகள் ஒரு போதும் துரோகியாக மாட்டாள்!" அவர் எழுந்தார். நின்று சுந்தரத்தை நோக்கினார்: "நான் விசனிக்கிறேன், சுந்தரம்; நேற்றிரவு அடிபட்டு இங்கே வந்து விழுந்தபோது, இனி உங்கள் இருவரையும் சட்டபூர்வமாக இணைத்து வைக்காமல் இங்கேயிருந்து போகக் கூடாது என்று உறுதி செய்து கொண்டேன். ஆனால் இப்பொழுது உங்கள் இருவரையும் பிரித்து வைக்காமல் இங்கிருந்து செல்வதில்லை என்ற உறுதியுடன் போகிறேன். மன்னித்துக் கொள் சுந்தரம்; நான் அதைச் செய்து தான் ஆக வேண்டும்."

அவர் போனதும் சிரித்துக்கொண்டே, "வயதாகிவிட்டால் எவ்வளவு சடுதியில் மூளை கலங்கி விடுகிறது, பார்த்தாயா?" என்றான் சுந்தரம்.

"மூளை அவருக்குக் கலங்கவில்லை; உங்களுக்குத்தான் கலங்கிப் போயிருக்கிறது!"

சுந்தரம் திகைத்தான். "நீ என்ன சொல்லுகிறாய், வீணா?" என்று கலக்கத்துடன் வினவினான்.

"எனக்கு எல்லாம் தெரிந்து விட்டது, மிஸ்டர் சுந்தர்! நீங்கள் இரண்டு பெண்களின் வாழ்வை நரகமாக்க முயன்றீர்கள். ஆனால் நல்ல காலமாக மாலா வந்து......"

சுந்தரம் அவளை இடைமறித்தான். "அந்தத் திமிர் பிடித்தவள் வந்து உன் மனத்தையும் கரைத்து விட்டாளா? வீணா! உன் வாக்குறுதிகள், உன் துணிச்சல், உன் தீர்மானம் எல்லாம் காற்றோடு போய் விட்டனவா, வீணா?"

வீணா தன்னை அடக்கிக் கொண்டு சாந்தமாகப் பேசினாள். "என் வாக்குறுதி, துணிச்சல், தீர்மானம் எல்லாம் அப்படியேதான் இருக்கின்றன, சுந்தர்! ஆனால் எனக்கு நன்மை செய்யப் புகுந்தவருக்கு நான் தீமைசெய்ய முடியாது! நீங்கள் மாலாவுக்கு உரியவர் என்பதுமுன்பே தெரிந்திருந்தால் நான் உங்களை என் போருக்குத் துணை சேர்த்துக்கொள்ள உடன்பட்டே இருக்க மாட்டேன்."

"நான் மாலாவுக்கு உரியவனா? யார் சொன்னார்கள் அப்படி? எந்த உறவு முறைப்படி அவளுக்கு உரியவன் நான்?"

"உங்கள் நெஞ்சிலிருந்துதான் இந்தக் கேள்வி வருகிறதா, அல்லது உதட்டிலிருந்தா? மனச்சாட்சிக்கு மாறுபடாமல் பேசுங்கள் சுந்தரம். நீங்கள் மாலாவைக் காதலித்தது உண்டா?"

"உண்டு; ஆனால் அவளே, 'நீங்கள் மணந்து கொள்ளுவீர்களா ஒரு விதவையை?' என்று கேட்ட பிறகு...?"

"மணந்து கொள்ளுவேன் என்று சொல்ல வேண்டும்."

"எனக்குச் சொல்லத் தெரியாது, வீணா; செய்து காட்டத்தான் தெரியும். செய்து காட்டியே தீருவேன்."

"சொல்லுக்குச் சொல்தான் பதிலே ஒழியச் செயல் நேரடியான பதில் ஆகாது, மிஸ்டர் சுந்தர்! தீ என்றால் நா வெந்துவிடாது, தெரியுமா? அதிலும் அவள் யார் சார்பில் பரிந்து பேசினாளோ, அந்த என்னிடமே, அவளைக் காதலித்து வந்ததையோ, இப்பொழுது கைவிட்டுவிட்டு என்னை நாடியிருப்பதையோ சொல்லாமல், எல்லாவற்றையும் மூடி மறைத்துச் செயல் புரியத் துணிந்தீர்களே, சுந்தரம்; இது உங்களுக்கு நேர்மையா? அதைச் சொன்னால் நான் உங்களோடு இணைசேர மறுத்து விடுவேன் என்றுதானே மறைத்தீர்கள்? நீங்கள் இனி என்னை மறந்து விடத்தான் வேண்டும்; மாலாவைத்தான் மணக்க வேண்டும்."

"முடியாது! ஒருகாலும் முடியாது!"

"ஏன் முடியாது?"

"நான் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறேன். இந்த வெள்ளித் தீயில் குதிக்கு முன், ஒரு விதவையின் பிணத்துக்காவது மாலையிடாமல், வாழ்வில் ஒரு சாதாரணப் பெண்ணுக்கு இடம் அளிப்பதில்லையென்று. அந்தப் பிரதிக்ஞையினின்று ஒருபோதும் நான் பின்வாங்க மாட்டேன்."

"அசட்டுத்தனமான பிரதிக்ஞை!" என்று நகைத்தாள் வீணா. "விதவையின் பிணத்துக்கு நீங்கள் மாலையிட்டு விட்டால், விதவைச் சமூகம் உய்ந்துவிடும்; அந்த அபாக்கியவதிகளுக்குச் சமூகத்தில் உரிய இடம் கிடைத்துவிடும் என்று உங்களுக்கு எண்ணமா? உங்கள் அடிப்படை நினைவே கோணலாகப் போயிருக்கிறது, சுந்தர்! விதவைகளை உய்விப்பதற்கு இது வழியில்லை; அவர்களை மணந்து, அவர்களுடன் வாழ்ந்து...."

சுந்தரம் கேலியாக நகைத்தான். "உன்னைப்போல் படித்தும் பண்பு தெரியாத, கற்பித்தும் செய்யத் துணிவற்ற, ஒவ்வோரிடத்திலும், ஒவ்வொரு நிலையிலும் பின் வாங்கிக் கொண்டிருக்கும் விதவைகளை நம்பி வாழ்வைச் சமைப்பது கடினமாக இருக்கும் என்றுதான் அவர்களுடைய பிணத்துக்காவது மாலையிட்டு விட்டுப் பிற பெண்களைத் திரும்பிப் பார்ப்பேனென்று சபதம் செய்துகொண்டேன், வீணா! என் நினைவு முற்றிலும் உண்மையாகி விட்டதே."

"உண்மையாகத்தான் சொல்லுகிறீர்களா? விளையாடுகிறீர்களா?"

"இனி என்னிடம் விளையாட்டுக்கு இடமில்லை. உண்மையாக, மெய்யாக, சத்தியமாக, இன்று என் லட்சியப்பொருளாக இருக்கும் உன் ஆணையாகச் சொல்லுகிறேன்; என் சபதத்திலிருந்து இம்மியளவும் மாற மாட்டேன்."

"சரி, அப்படியானால் நான் தோற்றேன்!" என்று சொல்லிவிட்டு எழுந்தாள் வீணா.

சுந்தரம் கட-கடவென்று சிரித்தான். "எனக்குத் தெரியுமே, வெற்றி என் பங்கில்தான் இருக்குமென்று" என்று கொக்கரித்தான்.

"ஆமாம், வெற்றி உங்களுக்கேதான்!" என்று கூறிவிட்டு அடுக்களையை நோக்கி நடந்தாள் வீணா. (தொடரும்)

# ரோஹித் க்ரூப்பின்

# தயாரிப்புகள் தரத்தில்

# முதன்மையானது

# என்றும் சிறந்தது

ரோஹித் மில்ஸ் லிமிடெட் ● ஸ்ரீ ஸாயாஜி மில்ஸ் லிமிடெட் ● பிப்பின் ஸில்க் மில்ஸ் லிமிடெட் மேய்ஸ் ப்ராடக்ட்ஸ் லிமிடெட் ● மில்க் டெயரி ஸீ. டாக்டர் அன்டு கம்பெனி பிரைவேட் லிமிடெட் ● ஓரியண்டல் கார்ப்பரேஷன் லிமிடெட் காலிகோ என்கிரேவிங் ஒர்க்ஸ் ● ஆர். எம். என் ஜினியரிங் ஒர்க்ஸ்




காலத்தின் சின்னம்

---

ஈறுகளை உறுதியுடனும்
பற்களை ஆரோக்கியத்துடனும்
சுவாசத்தை நறுமணத்துடனும்

## இருக்கும்படி பார்த்துக்கொள்ளுங்கள்

பளிச்சென்று ஒளிவீசும் வெண்மையும்
ஆரோக்கியமுமான பல் வரிசைகளை
அடைய வேண்டுமானால்

# போர்ஹான்ஸ்

பற்பசையை உபயோகியுங்கள்




ஈறுகளின் உறுதிக்காக என்றே டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் கண்டுபிடித்து அளிக்கும் விசேஷத் துவர்ப்புப் பொருள் கலந்துள்ள பற்பசை இது ஒன்றுதான்.

Geoffrey Manners & Co. Private Ltd.

TAM. 1-27

# எவ்வளவு நல்லது!



# பிரிட்டானியா

பிரிட்டானியா பிஸ்கட்டுகளை வழங்கும் ஒவ்வொரு சமயத்திலும் முகமலர்வதைப் பாருங்கள்! சிறுவர்களுக்கு ஏற்றவை ...... பிரிட்டானியா பிஸ்கட்டுகள் தினசரி உணவில் குறைவுபட்டுப்போகும் ஆரோக்கியமளிக்கும் போஷாக்குச் சத்துக்கள், வலிமையூட்டும் வைட்டமின்கள் ஆகியவற்றால் நிரம்பப்பெற்றிருக்கின்றன. உங்கள் குழந்தைகள் ஆரோக்கியமாயும் திடகாத்திரமாயும் இருக்கட்டும் — பிரிட்டானியா பிஸ்கட்டுகள் வெகு எளிதில் ஜீரணமாகக் கூடியவை.

வயதுமுதிர்ந்த விவேகிகள் அவற்றின் உச்சதரச்சுவை, தின்பதற்கு ஏற்றதன்மை காரணமாக பிரிட்டானியா பிஸ்கட்டுகளையே விரும்பிக் கேட்கிறார்கள்.

**பிரிட்டானியா**
**பிஸ்கட்டுகள்**

*நீங்கள் வாங்கக்கூடிய*
*சிறந்த ஒன்று*

தி பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிட்.

SC 3824

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 129. தைலங்கள்...

**க்ஷீரபலா தைலம்:** சிற்றாமுட்டி என்று ஒரு குத்துச் செடி. ஏறத்தாழத் தும்பைச் செடி அளவுக்கு வளரும். இது மலை நாடுகளில் அதிகமாக வளருகிறது. எங்கு கண்டாலும் கிடைக்கும். சமவெளி நாடுகளில் அவ்வளவாக உண்டாவதில்லை. நாமாக நமது பண்ணையில் பயிரிட்டாலும் மண்வாசி நீர்வாசிகள் காரணமாகக் குறிப்பிட்ட அளவுக்குப் பலனளிக்கும் வீர்யம் இருப்பதில்லை. சாதாரணமாகக் கேரள ராஜ்யத்திலிருந்து தான் இதை வரவழைத்து நாட்டுவைத்தியர்கள் உபயோகித்து வருகின்றனர். தற்போது இதன் ஏற்றுமதியில் கேரள சர்க்காரின் கட்டுப்பாடோ, அல்லது இதன் இறக்குமதியில் இதர ராஜ்யங்களின் கட்டுப்பாடோ இல்லை. ஆனல் ரயிலில் அனுப்புவதில் ஓரளவு இடக் கஷ்டம் இருக்கிறதாக ஒரு சிலர் சொல்லுகிறார்கள். ஆயினும் இதில் வேறொரு கஷ்டமுண்டு. இச் செடியின் வேரைத் தான் சாதாரணமாக மருந்துக்கு உபயோகிப்பது வழக்கம். க்ஷீரபலா தைலத்துக்கும் இதன் வேர்தான் உபயோகப்படுவது. வேர் இரண்டு அங்குலமும் செடியின் அடித்தண்டு ஆறு அங்குலமும் சேர்த்து நறுக்கிய துண்டுகளைத்தான் அனுப்புகிறார்கள். பிறகு நாம் வேரை மட்டும் நறுக்கி எடுத்துக் கொண்டு, அடித்தண்டை வேறுபடுத்திக் களைய வேண்டும். ஆனல் விலை கொடுக்கும் போது எடைக் கணக்கில் கொடுக்கிறானதால் ஒரு பங்கு நமக்குத் தேவையான வேருக்கும் மூன்று பங்கு வேண்டாத தண்டுக்குமாகத்தான் கொடுத்து வாங்கித் தொலைக்க வேணும். பிறகு தண்டு பாகத்தை வேறு படுத்தும் செலவு. இப்படியாக, பலா மூலம் என்னும் சிற்றாமுட்டி வேர் ஒரு பாகத்துக்கு ஐம்பது பங்கு விலை கொடுத்து வாங்கியாக வேணும்.

இந்த வேரை ஈரமாக உள்ளபோதே நுண் துகள்களாக நறுக்கி உரலிலிட்டு இடித்துப் பஞ்சுபோல்—கூடுமானல் அதைவிட மிருதுவாக இடித்துப் பிறகு உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். இதைத்தான் க்ஷீரபலா செய்யும்போது உபயோகிப்பது வழக்கம். சௌகர்யம் இருந்து பச்சையாகவே உபயோகிப்பதானல் மிகவும் நல்லதுதான்.

மேற்சொன்ன விதம் இடித்த பலா மூலம்—சிற்றாமுட்டியின் வேர் 30 தோலா எடை, இத்துடன் 8 படி ஜலம் விட்டு இரண்டு படியாகச் சுண்டும் வரையில் காய்ச்சி எடுத்த கஷாயம்—ஆறின பிறகு மருந்தைக் கசக்கிப் பிழிந்து களைந்து விட்டுக் கஷாயத்தை வடிகட்டி எடுத்துக் கொள்ளவும்.

இதில் மேற்சொன்ன விதம் தயாரித்த சிற்றாமுட்டி வேர் 13 தோலாவைப் பால் விட்டு அம்மியில் அரைத்து வெண்ணெய் போல் அரைபட்டதும் எடுத்துக் கரைத்துக் கொள்ளவும். இதுதான் கல்க்கம். இலகுவில் அரைபட்டு விடாது. கஷ்டந்தான், என்ன செய்வது?

இவ்வாறு சேர்த்த கஷாயக் கல்க்கங்களுடன் நல்லெண்ணெய் 2 வீசையையும் சேர்த்துக் கஷாயத்தில் பாதியளவு சுமாருக்குச் சுண்டும் வரையில் அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். பாதி கஷாயம் வற்றி, இன்னும் பாதி கஷாயம் உள்ள போது இத்துடன் பசுவின் பால் நாலு படி சேர்த்துக் காய்ச்சவும்.

இரவமெல்லாம் வற்றிய பிறகு கல்க்கத்திலுள்ள நீரும் வற்றத் தொடங்கும் போது இது மிகவும் பொங்கும். சிறிதளவு தீயும் ஏற்காமல் பொங்கி, பாத்திரத்திலிருந்து அடுப்பில் வழிய ஆரம்பிக்கும். இப்படி நேரிடாமல் தீயை

### டாக்டர் "ஸ்ரீஹரி" அவர்களின் சுற்றுப் பிரயாணம்

கல்கியில் நாட்டு வைத்தியம் எழுதும் டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் டிசம்பர் 16ந் தேதி முதல் ஒரு வாரம் சென்னையை விட்டு வெளியூருக்குப் பயணமாகிறார். 16ந் தேதி கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் புறப்பட்டுப் புதுதில்லி செல்கிறார்; புதுதில்லியில் ரயில்வே ரிடயரிங் ரூமில் தங்குவார். 20ந் தேதி அங்கிருந்து புறப்பட்டு 24ந் தேதி சென்னை வந்து சேருவார்.




அளவோடு கொடுத்து வர வேண்டும். இச்சமயத்தில் தான் காயும் தைலத்தின் கல்க்கம் பாத்திரத்தின் அடியில் ஒட்டிப் பிடிக்கவும் ஆரம்பிக்கும். ஒட்டிப் பிடிக்க விடக் கூடாது. அதற்காக அடிப் பிடிக்காதபடி கிளறிக் கொண்டிருக்க வேண்டும். கிளறினால் அதிகமாகப் பொங்கும். கிளறா விட்டால் அடிப் பிடித்துத் தீய்ந்த நாற்றம் வரும். ஆகவே, அடிப்பிடிக்கவும் விடாமல் பொங்கி வழியவும் விடாமல் தைலத்தை மட்டும் காய்ச்சிக் கொண்டே போக வேணும். இது மிகவும் பொறுமையுடனும் விழிப்புடனும் செய்ய வேண்டிய காரியமாகும்.

கல்க்கம் மொறமொறவென்ற பாகத்தில் வரும்போது தைலத்தை இறக்கி வடிகட்டிக் கொள்ளவும். இதுதான் க்ஷீரபலா தைலம்.

**ஆவர்த்தித க்ஷீரபலா தைலம்:** [மடக்கிக் காய்ச்சியது] மேற்சொன்ன விதம் காய்ச்சிய தைலத்துடன் மறுபடியும் பலாமூல கஷாயம், பலாமூல கல்க்கம், பால் இவற்றைச் சேர்த்து மறுபடியும் காய்ச்சி வடிகட்டிக் கொள்வது- என்று இப்படி மறுபடியும் மறுபடியும் மடக்கி மடக்கிக் காய்ச்சிக் கொண்டே போவதை மடக்கு சிற்றுமுட்டித் தைலம் என்று சித்தர் நூல்கள் தெரிவிக்கின்றன. மூன்று அல்லது ஏழு முறை மடக்கிக் காய்ச்சிய க்ஷீரபலா தைலத்தை விசேஷமாகத் தலைக்கும் உடம்புக்கும் தேய்ப்பதுண்டு. 101 தரம் மடக்கிக் காய்ச்சியதைத் துளிக் கணக்கில் தக்க அனுபானங்களுடன் உள்ளுக்குக் கொடுப்பதுண்டு. ஸூர்யாவர்த்தம், அர்த்தாவபேதமென்னும் ஒற்றைத் தலைவலி ஆகியவற்றில் இந்த 101 தரம் ஆவர்த்தித க்ஷீரபலா தைலத்தை நஸ்யமாக மூக்கில் உறிஞ்சவும் உபயோகிப்பதுண்டு.

**மாஷதைலம்:** க்ஷீரபலா தைலத்துக்குச் சொன்ன விதத்தில் பதப்படுத்திய சிற்றுமுட்டிவேர் ஒரு ராத்தல் [40 தோலா எடை.] இதை நாலு படி ஜலத்திலிட்டு ஒரு படி கஷாயமாகக் காய்ச்சி மருந்தைச் கசக்கிப் பிழிந்து களைந்து கஷாயத்தை வடிகட்டவும்.

உளுந்து — மேற்சொன்ன விதம் ஒரு ராத்தல் — இதில் மேற்சொன்ன விதமே தயாரித்த கஷாயம் ஒரு படி. இதைச் செய்வதில் சிரமம் இருக்கிறது. உளுந்து வெந்த பிறகு கசக்கிப் பிழியப் போனால் கொழகொழப்பு அதிகம் உள்ளதால், சாத்தியமாகாது. துணியில் வடிகட்டினால் எளிதில் இறங்காது. கனமான துணியில் உளுந்தை மூட்டை கட்டி ஜலத்திலிட்டுக் கொதிக்க வைத்து மூட்டையோடு பிசைந்து பிறகு பிழிந்து விடுவது நல்லது. இவ்வித கஷாயங்கள் இரண்டையும் சேர்த்து, அத்துடன் நல்லெண்ணெய் ஒரு வீசையும் பசுவின் பால் ஒரு படியும் சேர்த்து, நிலப்பூசணிக் கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, நிலப் பனங்கிழங்கு, அமுக்கிராங்கிழங்கு, காட்டுளுந்து, காட்டுப் பயறு, சதகுப்பை, சித்தரத்தை, இந்துப்பு, அதிமதுரம், பூனைக்காலிவிதை, சுக்கு, மிளகு, திப்பிலி, நெரிஞ்சில் முள் ஆகியவைகளை ஒவ்வொரு தோலா வீதம் கல்க்கமாக அரைத்துச் சேர்த்துத் தைலத்தைத் தலைக்குள்ள பாகத்தில் இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

இதுதான் மாஷ தைலம். இதையும் சில சந்தர்ப்பங்களில் க்ஷீரபலாவை உபயோகிப்பது போலவே தலைக்குத் தடவி ஊற உபயோகிக்கலாம்.

இனி உள்ளுக்கு என்ன மருந்து என்பதுதானே சொல்லப் பாக்கியிருப்பது?

சரீரத்தின் சகிப்புத் தன்மையை அதிகரிக்க அச்வகந்தா லேகியத்தைச் சாப்பிட்டு வருவது நல்லது. கூஷ்மாண்ட ரஸாயனம், ச்யவனப்ராசம் ஆகியவற்றில் ஒன்றை மாற்றி மாற்றிச் சாப்பிட்டு வரவுஞ் செய்யலாம். (தொடரும்)

# விருந்து பரிமளிக்க, விருந்தினர் மெச்ச,



பதார்த்தங்களை **காமதேனு** இருமுறை சுத்தீகரிக்கப்பட்ட தாவர எண்ணையில் தயாரியுங்கள்.



சாஸ்திரீய முறையில், கைப்படாமல் தயாரிக்கப்படுவது. விலையும் குறைவானது. 37 பவுண்டு (மொத்தம்) 10 பவுண்டு (நிகரம்) டின்களிலும் கிடைக்கும்.

தயாரிப்பு:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்

மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC 625

என் நண்பர் ஒருவர் நல்ல பகுத்தறிவு வாதி. செங்கல்பட்டில் நான் உத்தியோகம் ஏற்றிருந்தபோது என் வீட்டுக்கு வந்திருந்தார். மாமல்லபுரம் பார்க்கவேண்டும் என்று ஆசைப்பட்டார். என்னைத் துணைக்கு அழைத்தார். 'மாமல்லபுரம் செல்லும் வழியில் **திருக்கழுக்குன்றம்** இருக்கிறதே, அங்கு பக்ஷி தரிசனம் செய்ய வேண்டாமா? தினசரி சரியாய்ப் பகல் பதினொரு மணிக்கு இரண்டு கழுகுகள் அந்த மலைமேல் வந்து அங்கு பண்டாரம் கொடுக்கும் சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட்டுவிட்டுப் போகின்றனவே, அதைப் பார்க்க வேண்டாமா' என்றேன் நான். 'இது என்ன பெரிய அதிசயம்! நான் மத்தியானச் சாப்பாட்டைச் சரியாக ஒரு மணிக்கு என் ஆபீஸ் அறையிலேயே தான் வைத்துக் கொள்கிறேன். அங்கும் தினசரி அதே நேரத்துக்கு இரண்டு அணில்கள் வருகின்றன. நான் போடும் உணவைச் சாப்பிட்டு விட்டும் போகின்றன. பக்ஷிகளுக்கும், மிருகங்களுக்கும் ஏன், சிறிய பிராணிகளுக்கும், கால உணர்வு (Time sense) ரொம்பவும் அதிகம். ஆதலால் குறித்த காலத்தில் இங்கு இன்னது கிடைக்கும் என்ற நியதி ஏற்பட்டு விட்டால் அந்த இடத்துக்கு அவை வரத் தவறியதே இல்லை' என்று என்னை விளாசி விட்டார் அந்தப் பகுத்தறிவுவாதி. 'உண்மைதான். மனிதனைத் தவிர மற்ற ஜீவராசிகளுக்கு எல்லாம் கால உணர்வு அதிகமே. என்றாலும், ஒரு நாளல்ல, இரண்டு நாள் அல்ல, நூற்றுக்கணக்கான வருஷங்களாக, குறித்த வேளையில் குறித்த இடத்தில் இரண்டு கழுகுகள் தினம் வந்து உண்டு செல்கின்றன என்றால் அது ஓர் அதிசயம் தானே? அதிலும் இன்றைக்கு இருநூற்று எழுபத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு, ஆம், 3—1—1681 அன்று பகல் பன்னிரண்டு மணிக்கு இங்கு வந்த டச்சுக்காரர்கள்கூட இப்படிக் கழுகுகள் வருவதையும் அவை உண்டு திரும்புவதையும் பற்றி அன்றே எழுதி வைத்திருக்கிறார்களே, அதற்கு என்ன சொல்கிறீர்? இத்தனை வருஷமும் இரண்டே கழுகுகள் கால உணர்வு பெற்றிருக்கின்றன என்கிறீரா?' என்று மடக்கினேன் நண்பரை. அதன்பின் அவரைக் காரில் ஏற்றிக்கொண்டு திருக்கழுக்குன்றத்தின் மலையடிவாரத்துக்கு இழுத்துச் சென்றேன்.

இருநூற்று அறுபத்துநாலு ஏக்கரில், ஐந்நூறு அடி உயரத்தில் இருக்கிறது அந்தச் சஞ்சீவிமலை. அதற்கு நாலு சிகரங்கள். நான்கு வேதங்களுமே நான்கு சிகரங்களாக இருப்பதனால் வேதகிரி என்றும், அந்த வேதகிரிக்கு உரிய **வேதகிரி** ஈசுவரர், அதர்வண வேத சிகரத்தின்மேல் இருக்கிறார் என்றும் சொல்வார்கள். மலையின்மேல் ஏற நல்ல படிக்கட்டுகள் கட்டியிருக்கிறார்கள். ஒன்றிரண்டு இடத்தில்தான் படிக்கட்டுகள் செங்குத்தாக இருக்கின்றன. மற்றப்படி எளிதாகவே ஆங்காங்குள்ள மண்டபங்களில் தங்கி இளைப்பாறிப் படிகளில் ஏறி மலைச்சிகரத்தை அடையலாம். சுமார் பத்து பத்தரை மணிக்குள்ளேயே சென்று விடவேணும். நூற்றுக்கணக்கானவர்கள் நமக்கு முன்னமேயே அங்கு வந்திருப்பார்கள். எல்லோரும் வசதியாக இருந்து பார்க்க ஏற்பாடுகளையெல்லாம் கோயில் நிர்வாகிகள் செய்திருக்கிறார்கள். சரியாய்ப் பதினொரு மணி அளவில் இரண்டு வெள்ளைக் கழுகுகள் மலையைச் சுற்றியும் மலையில் உள்ள கோயிலைச் சுற்றியும் வட்டமிடுவதைப் பார்ப்போம். அதில் ஒன்று கோயில் மதில்சுவரிலே வந்து தங்கும். அதன்பின், படிப்படியாக இறங்கித் தத்தி ஒரு சிறு பாறையிலே சர்க்கரைப்பொங்கல் தட்டோடு உட்கார்ந்திருக்கும் பண்டாரத்தின் பக்கத்துக்கு வந்து சேரும். அவர் கையிலே உள்ள சர்க்கரைப் பொங்கலைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிடும். குன்றிலே உள்ள தண்ணீரில் தங்கள் அலகுகளைக் கழுவிக் கொண்டு திரும்பவும் வட்டமிட்டுப் பறந்து வான்வழியில் மறைந்து போகும். அதன்பின் அங்கு கூடியிருப்பவர்கள் என்ன என்ன எல்லாமோ பேசிக்கொள்வார்கள். ஒருவர் சொல்வார்: 'இந்த இரண்டு கழுகுகளும் காலையில் காசியில் கங்கையில் ஸ்நானம் செய்கின்றன. மத்தியானம் உணவு அருந்தக் கழுக்குன்றம் வந்துவிடுகின்றன. இரவு ராமேசுவரம் கோயில் கோபுரத்தில் சென்று நித்திரை செய்கின்றன' என்று. இருக்கலாம். ஆனால் காசியிலும் ராமேசுவரத்திலும் இவர்களுக்குப் பூஜை இல்லை. பார்த்ததற்குச் சாட்சியும் இல்லை. உண்ண உணவுக்குத் திருக்கழுக்குன்றம் வருவது நிதரிசனம். தினசரி நிகழ்ச்சி.

இது விஷயம் என்னவென்று அறியத் தலவரலாற்றைப் புரட்டவேண்டும். ஏதோ பிரம்ம புத்திரர்கள்



# கழுகுதொழு வேதகிரி

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்



எட்டுப் பேர் சாருப பதவி வேண்டிக் கடுந்தவம் புரிந்து, பின்னர் சிவபெருமான் காட்சியளித்தபோது மறந்து போய் சாயுச்சிய பதவி கேட்டு விட்டதாகவும் அதற்காகவே அந்த எட்டுத் தவசிகளையும், யுகத்துக்கு இரண்டிரண்டு பேராய்க் கழுகுகளாகப் பிறந்து வாழ இறை அருள் கொடுத்திருக்கிறார் என்று சொல்கிறது புராணம். அவர்களே முந்திய யுகங்களிலே சண்டன் பிரசண்டன் எனவும்; சம்பாதி சடாயு எனவும்; சம்புகுத்தன் மாகுத்தன் எனவும் பிறந்து முத்தி எய்தி விருக்கிறார்கள். அவர்களில் இருவரே இந்தக் கலியுகத்திலே பூஷா, விதாதா என்னும் இரண்டு கழுகுகளாகப் பிறந்து வாழ்ந்து வருகிறார்கள் என்று அறிவோம். கலியுகம் முழுவதும் இருப்பது இதே இரண்டு கழுகுகள்தானா, இல்லை அவற்றின் பரம்பரையா என்று, முன்னிருந்து கண்டவர்களும் இல்லை. இனி இருந்து காணப் போகிறவர்களும் இல்லை. ஒன்று மட்டும் உண்மை. இரண்டு கழுகுகள், இத்தனை வருஷங்களாக இதே இடத்துக்கு இதே நேரத்துக்கு வந்து செல்கின்றன என்பது மட்டும் மறுக்க முடியாததாக இருக்கிறது. வேதகிரி ஈசுவரரைத் தேடித்தான் கழுகுகள் வந்தாலும், அந்த வேதகிரி ஈசுவரரே, இந்தக் கழுகுகளால்தானே பிரசித்தி பெற்றிருக்கிறார். ஏன் கோயிலும், மலையும், ஊரும் குளமும், கழுகுக் குன்றம் என்ற பெயரில்தானே நிலைத்திருக்கின்றன.



துவார பாலகர்

இந்தக் கழுக்குன்றம், சென்னையிலிருந்து நாற்பத்தைந்து மைல் தொலைவிலே இருக்கிறது. சென்னையிலிருந்தும் செல்லலாம். இல்லை, செங்கல்பட்டு வந்து அங்கிருந்து தென்கிழக்காக ஒன்பது மைல் போனாலும் சென்று சேரலாம். இந்த ஊரிலே பிரசித்தி பெற்றது, கழுகுகள் வரும் சஞ்சீவிமலையும் அம்மலைமேல் கட்டியிருக்கும் வேதகிரி ஈசுவரர் கோயிலுந்தான். மலை ஏறுவதற்குமுன், மலையையே வலம் வரலாம். இரண்டரை மைல் நடக்க முடியுமானால் நடக்கலாம். இல்லாவிட்டால் காரிலேயே கிரிப் பிரதக்ஷிணத்தை முடித்துக் கொள்ளலாம். மலைமேல் ஏறிக் கழுகு வந்து போவதையெல்லாம் பார்த்தபின், அங்குள்ள கோயிலுக்குள்ளே நுழையலாம். இந்தக் கோயிலின் கர்ப்பக்கிருஹம் பல்லவ மன்னன் மகேந்திரவர்மனால் குடைந்து ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். அங்குள்ள உட்புறத்துச் சுவர்களில் சோமாஸ்கந்தர், பிரும்மா, யோக தக்ஷிணாமூர்த்தி முதலியவர்கள் செதுக்கப்பட்டிருக்கிறார்கள். இந்தச் சிற்ப வடிவங்களையெல்லாம் அங்குள்ள இருட்டில் காண்பது கொஞ்சம் கஷ்டமான காரியமே. இங்கு கோயில் கொண்டிருப்பவர் வாழைக் குருத்துப் போன்ற வடிவம் உடையவர், சுயம்புமூர்த்தி என்பார்கள். ஆனும் நாம் காண்பது கவசமிடப்பட்ட சிவலிங்க உருவைத்தான். இவர்தான் வேதகிரி ஈசுவரர். கிழக்கு நோக்கியவராய் அமர்ந்திருக்கிறார். மலைமீது அம்பிகைக்குக் கோயில் இல்லை. இந்த வேதகிரியானைத்தான் ஒரு வியாழ வட்டத்துக்கு ஒரு தரம் இந்திரன் பூஜை புரிவதாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்திரன் பூஜை என்றால், ஏதோ நீரால் அபிஷேகம் மலர்களால் அர்ச்சனை என்றில்லை. இடி இடித்தே பூஜை. இடி கோபுரத்தின் பேரிலேயே விழுந்து, மூலவரை மூன்று முறை வலம் வந்து பூமிக்குள் இறங்கி விடுகிறது என்கிறார்கள். இதனால் கோயிலுக்கோ, இறைவனுக்கோ கெடுதி ஒன்றும் நேர்வதில்லை. இந்தத் தகவலை நிந்தாஸ்துதியாகச் சொக்காதப் புலவர் வெளியிடுகிறார் ஒரு பாட்டில் :

அடிபட்டீர், கல்லாலும் எறிபட்டீர்,
அத்தனைக்கும் ஆளாய் அந்தப்
படிபட்டுப் போதாமல் உதைபட்டீர்,
இப்படியும் படுவார் உண்டோ ?
முடிபட்ட சடையுடையீர்! கழுக்குன்றீர்!
முதற்கோணல் முற்றும் கோணல்
இடிபட்டும் பொறுத்திருந்தீர், சிவசிவா
உமைத் தெய்வம் என்னலாமோ ?

என்பது பாட்டு.

வேதகிரி ஈசுவரரை வணங்கிய பின் கோயிலின் வடபக்கமாக இருக்கும் படிகளின் வழியே இறங்கலாம். அந்த வழியிலே, ஒரு குடைவரைக் கோயில் உண்டு. இங்கும் சிவலிங்கம் துவாரபாலகர் எல்லாம் கற்பாறையிலே செதுக்கப்பட்டிருக்கின்றன. துவார பாலகர் நல்ல அழகான வடிவம். பல்லவ மன்னன் மகேந்திரன் காலத்துச் சிற்பம். அங்குள்ள துவாரபாலகர்களே உத்தரீயத்தை லாகவமாகத் தோளில் போட்டுக் கொண்டு, ஒரு கையை உயர்த்தி எல்லாரையும் மலைமேல் போய்ப் பார்க்க வேண்டியதைப் பாருங்கள் என்று சொல்லும் நிலையில் செதுக்கியிருக்கிறான் சிற்பி. (நாம்தாம் மலையில் உள்ள சிற்ப வடிவங்களைப் பார்த்து விட்டோமே. அந்தத் தகவலை அந்தத் துவார பாலகரிடம் சொல்லிவிட்டுக் கீழே இறங்கி விடலாம்) மலையை விட்டு இறங்கி, அடிவாரத்தில் உள்ள சித்தாதீ கணபதியையும் வணங்கி விட்டு, ஊர் மத்தியில் இருக்கும் தாழக் கோயிலுக்குள் செல்லலாம். அங்கு செல்லாமல் திரும்ப முடியாதே. மலைமேல் தரிசிக்காத

அம்பிகையை இங்குதானே தரிசிக்க வேண் டும். இந்தக் கோயிலே ஒரு பெரிய கோபுரம் அழகு செய்கிறது. கோயிலுக்குள் பிரதான மூர்த்தி சிவலிங்க உருவில் அமைந்த பக்த வத்சலர்தான் என்றாலும், சிறப்பெல்லாம் அன்னை திரிபுரசுந்தரிக்குத்தான். இவளையே 'பெண்ணினல்லாள்' என்று பாடி மகிழ் கிறார் திருஞானசம்பந்தர்.

> துணையல் செய்தான், தூயவண்டு
> யாழ்செயச் சுடர்க்கொன்றைப்
> பிணையல் செய்தான், பெண்ணின்
> நல்லாளை ஒருபாகம்
> இணையல் செய்தான், இலங்குஎயில்
> மூன்றும் எரிஉண்ணக்
> கணையல் செய்தான் காதல்செய்
> கோயில் கழுக்குன்றே.

என்பதுதானே சம்பந்தர் தேவாரம். இந்தக் கோயிலில் வரப்பிரசாதி ஆன அம்பிகையைத் தரிசிப்பதோடு ஏழு அடி உயரத்தில் கம்பீர மாகக் காட்சி கொடுக்கும் வீரபத்திரரையும் தரிசித்து வணங்கலாம். இந்தக் கோயில் கட்டிய இடம் எல்லாம் கதலி வனமாக இருந்ததாகவும் அந்தக் காட்டை அழித்த போது வண்டுகள் ரீங்காரமிட்டுக் கொண் டிருந்த பிள்ளையார் ஒருவர் கிடைத்தார் என்றும் அவரே வண்டுவனப் பிள்ளையார் என்று இன்றும் விளங்குகிறார் என்பது கர்ண பரம்பரை.

இத் தலத்துக்குச் சம்பந்தரைத் தவிர, மற்ற சமய குரவர் மூவருமே வந்திருக்கிறார்கள். கழுக்குன்றமர்ந்த கற்பகத்தைக் கண்ணாரக் கண்டதாகப் பாடிப் பரவசம் அடைகிறார் அப்பர். 'சென்று சென்று தொழுமின் கழுக் குன்றமர்ந்த பிரானை' என்று சுந்தரர் மக்களை யெல்லாம் வேண்டிக் கொள்கிறார். எல்லோ ருக்கும் மேலாக மணிவாசகர் கழுக்குன்றத்து உச்சியானை நினைந்து நினைந்து பாடுகிறார். 'கணக்கிலாத திருக்கோலம் நீ வந்து காட்டி னாய் கழுக்குன்றிலே' என்று சொன்னதோடு திருப்தி அடையாது 'காண ஒண்ணாத் திருக் கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே' என்றும் கூறி அவர் பெற்ற அனுபவத்தை விரிக்கிறார். மணிவாசகர் திருவடி என்று ஓரிடத்தையும் பார்க்கலாம், கிரி சுற்றும் போது. அங்கு மணிவாசகர் விழா சிறப்பாக நடைபெறுகிறது வருஷம் ஒரு முறை.

இந்தத் தலத்தில், வேதகிரியானையும் திரிபுர சுந்தரியையும் விடப் பெருமையுடையது **சங்கு தீர்த்தம்.** ஊருக்குத் தென்கிழக்குக் கோடியிலே இருப்பதுதான் அச் சங்குதீர்த்தம் என்னும் தெப்பக்குளம். சுமார் ஆயிரம் சதுர கஜம் உள்ள பெரிய குளம். ஒரு நல்ல நீராழி மண்டபம். இந்தக் குளத்தின் தண்ணீ ரில் தாமிரச் சத்து இருக்கிறது என்கிறார்கள். இக் குளத்தில் பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு தரம் ஒரு சங்கு பிறக்கிறது. (அப்படிக் கிடைத்த சங்குகளையெல்லாம் கோயிலிலே சேகரித்து வைத்திருக்கிறார்கள்) சங்கு பிறக் கும் சமயத்தில் இந்தத் தீர்த்தத்தில் குளிப்பது மிகவும் விசேஷம். கும்பகோணத்து மகாமக தீர்த்தத்தோடும், கோதாவரி புஷ்கர தீர்த்தத் தோடும் போட்டி யிடும் இச் சங்கு தீர்த்த ஸ்நானம். இச் சங்கு தீர்த்தத்துக்குத் தென் கிழக்கே ஒரு பர்லாங்கு தூரத்தில் ஒரு சிறு கோயில். அங்கு கோயில் கொண்டிருக்கிறார் **ருத்ர கோடீசுவரர் அபிராமி நாயகியுடன்.** அவுணர்களை எல்லாம் கொலை செய்த பாவத் தைப் போக்க கோடி ருத்திரர்கள் இங்கு வந்து வணங்கி, இந்த லிங்கத் திருவுருவை பிர திஷ்டை செய்திருக்கிறார்கள் என்பது புராண வரலாறு. இன்று இத் தலத்தை ஆக்கிரமித் துக் கொண்டிருப்பவர்கள் வேதகிரியானும் பக்தவத்சலனும் ருத்ரகோடி ஈசுவரனுமே என்றாலும் அன்று இத் தலத்தில் ஒரு வேத நாராயணன் கோயில் கொண்டிருந்ததாகவும் வரலாறு உண்டு. இந்த ஊருக்கே வேத நாராயணபுரம் என்று ஒரு பெயர் உண்டே. ஆனால் அந்த வேத நாராயணர் எங்கிருக் கிறார் என்று தெரியவில்லை. சைவ வைணவ பேதம் எல்லாவற்றையும் ஒதுக்கி விட்டு, தன் துணைவியைக் கூடக் கீழே விட்டு விட்டு வேதகிரியான்தான் கழுகு முனிவர்களுக்கு ஆசி கூற மலை மேலேயே ஏறி நின்று கொண் டிருக்கிறானே. நாமும் கழுகு தொழு வேத கிரியானைத் தொழுவதோடேயே திருப்தி யடையலாம். வேத நாராயணனைத் தேடி அலைய வேண்டாமே.

## காலையில் இருக்கும் புதுமலர்ச்சி
## நாள் முழுவதும் இருக்க

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்க்




நாள் முழுவதும் புதுமலர்ச்சியுடனும் குளுமையுடனும் இருக்க, ஸ்நானத்திற்குப்பின் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள்!

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் இன்பகரமான பரிமளமுள்ளது : மற்றும் வியர்வையை உறுஞ்சும் தன்மையுடையது. அது உங்களுக்கு நாள் முழுவதும் நீடித்திருக்கும் புத்துணர்ச்சியை அளிக்கும்!

செஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளிலிருந்து நிவாரணமளிப்பதில் சிறந்தது

ஏனெனில் அதில் **நான்கு மருந்துகள்** சேர்ந்துள்ளன.




வைத்திய விஞ்ஞானிகள், 'அனஸின்' என்பது வலியை அகற்றும் தீவிர சக்திவாய்ந்த அநேக மருந்துகளின் சரியான விகிதாச்சார கலவை என்று கூறுகிறார்கள். அது வேறெந்த ஒரே மருந்து கலவையைவிட அதிதுரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் நிவாரணமளிக்கிறது என்று ஞாபகத்தில் வையுங்கள்! 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலவையாகும். ஆகவே 'அனஸின்', தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து துரிதமாயும், முற்றிலும் குணமளிப்பதில் சிறந்தது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

A 67 (R) TA

---

BRASSO

## பிரகாசிக்க

உங்கள் பித்தளை, செம்பு சாமான்களை தினசரி **பிராஸோ** வால் துலக்குங்கள்

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

PSAE - 21

# புஸ்வாணம்!

கோமதி சுவாமிநாதன்

*[ராமநாதன் வீட்டுக் கூடம் நாற்காலியில் அமர்ந்திருக்கும் ராமநாதன் கையில் பேப்பர் பென்சிலுடன் ஏதோ யோசித்தவாறு உட்கார்ந்திருக்கிறார். அவர் மனைவி கமலம் உள்ளேயிருந்து வருகிறாள்.]*

**கமலம்:** நன்றாகத்தான் இருக்கிறது! நீங்கள் குளத்தங்கரைப் பிள்ளையார் மாதிரி கூடத்தில் உட்கார்ந்திருப்பதும் நான் உங்களைச் சுற்றிச் சுற்றி வருவதும் அழகாகத்தான் இருக்கிறது. எழுந்திருந்து நடக்க வேண்டிய காரியத்தைப் பாருங்கள்! இப்போது யாருக்கு என்ன எழுதியாகிறதாம்?

**ராமநாதன்** (நிமிர்ந்து உட்கார்ந்து): இந்தக் குடும்பத் தலைமைப் பதவிக்கு ராஜிநாமாக் கடுதாசி எழுதலாம் என்று யோசனை. அதைத் தொடர்ந்து நீ பத்திரிகைகளில் விளம்பரங்கள் செய்ய வேண்டும். 'திரு ராமநாதன் எங்கள் குடும்ப ஸ்தாபனத்திலிருந்து விலகி விட்டதால் அவர் இனிமேல் செய்யும் எந்தக் காரியங்களும் எங்கள் குடும்ப ஸ்தாபனத்தைக் கட்டுப்படுத்தாது' என்று உன் பெயருடன் விளம்பரங்கள் ஜ்வலிக்கவேண்டும். நான் ஹாயாக...

**கமலம்:** நாலு பேர்களுடன் சீட்டாடிக் கொண்டிருப்பீர்கள்: அப்படித் தானே? நான் இப்போதே ஹைகோர்ட்டிலே ஒரு 'ரிட்' பெட்டிஷன் தாக்கல் செய்து என் கணவர் வீட்டு வாசற்படியை விட்டு வெளியே போகக் கூடாது என்று உத்தரவு வாங்கி விடுவேன்!

**ராமநாதன்:** பலே! பலே! நீ பழைய காலத்துத் தாலூக்கா கச்சேரி வக்கீல் பெண் என்பதை மறந்து விட்டேன்! சரி! சரி! சொல்லு! (கையிலிருக்கும் கடிதத்தைப் பிரித்து) சர்க்கரை இரண்டு வீசை போட்டிருக்கிறேன். பத்துப் பலமாவது கொடுப்பானு, தெரியவில்லை. காப்பிக் கொட்டை ஒரு வீசை! அப்புறம்...

**கமலம்:** ஒரு வீசை காப்பிக்கொட்டை போதாது! பம்பாய் மாப்பிள்ளைக்குக் கை கழுவக்கூடக் காப்பிதான் வேண்டியிருக்கிறது. எனக்குத் தெரிந்து ஆறு வேளை. எனக்குத் தெரியாமல் என் பெண் கல்யாணி எத்தனை தடவைகள் கொண்டு போகிறாளோ?

**ராம:** அது சரி! இந்தச் சவுடால் சங்கரன் எதற்கு இப்போது திடீரென்று தன் மனைவியுடன் இங்கு முகாம் போட்டிருக்கிறான்? இந்த ஊரைப் பெயரை இந்தியா படத்திலிருந்தே சுரண்டி எறிய வேண்டும் என்று சொல்பவனாயிற்றே! வேலை கிலை போய்....

**கமலம்:** உஷ்! ஆபீஸ் பேப்பரே ஒரு சாக்குக் கொண்டு வந்திருக்கிறார். அது மாத்திரமில்லே! கையிலேயும் பணம் இரண்டு சாக்கு இருக்கும் போலிருக்கு! உங்களுக்கு நாலு ஜோடி நேர்த்தியான பம்பாய் மில் வேஷ்டி வாங்கி வரவில்லையா?

**ராம:** மாமனுருக்கு வேஷ்டி வாங்கித் தரும் மாப்பிள்ளையும் இந்த உலகத்தில் இருக்கிறான்! உலகம் மாறிப் போச்சு கமலம், மாறிப் போச்சு! ஒரு வேளை சந்திரன் மீது ரஷியா ராக்கெட் மோதியதால் ஏற்பட்ட கிரகக் கோளாறு போலிருக்கு! இப்போது முதலில் நான் காப்பிக்கொட்டை கிரகத்தின் மீது மோதியாக வேண்டும். நாலு வீசை காப்பிக் கொட்டை போடட்டுமா?

*[ராமநாதனின் கடைசி மாப்பிள்ளை சங்கரன் மாடியிலிருந்து கீழே இறங்கி வருகிறான்.]*

**சங்கரன்:** காப்பிக் கொட்டையா? மாமா! நீங்கள் சிரமப்பட வேண்டாம். நான் இங்கே வரபோதே அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்து விட்டுத்தான் புறப்பட்டேன். கூர்கிலிருந்து முதல்தரமான கொட்டை ஒரு மூட்டை ரயிலில் வந்தாயிற்று. இதோ ரயில்வே ரசீது. அதைக் கொண்டு வரத்தான் போகிறேன்! இன்னொரு விஷயம். நாங்க இருக்கிற வரை மளிகைச் சாமான் வாங்க வேண்டியது எங்கள் பொறுப்பு. கல்யாணி கண்டிப்பாகச் சொல்லி விட்டாள். 'லிஸ்டு'ம் அவள் போட்டுக் கொடுத்து விட்டாள். நான் கடைக்குத் தான் போய்க் கொண்டிருக்கிறேன்.

*[வெளியே போகிறான்]*

**ராமநாதன்** (பிரமிப்புடன்): கமலம்! கலியுகம் முடிகிற கட்டமா இது? அல்லது முடிந்து போச்சா? ரொம்ப ரொம்ப அபூர்வமான நல்ல சினிமாப் படம் பார்ப்பது போல் அல்லவா இருக்கிறது மாப்பிள்ளை சங்கரனின் போக்கு. என்னை மதித்துக்கூடப் பேசுகிறான், போ!

**கமலம்:** எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு வாயைத் திறவாமல் இருங்கள். அப்புறம் வந்திருக்கும் நல்ல புத்தி திரும்பிப் போய்விடும்.

**ராம:** சொக்கன் மீசை சும்மா துடிக்காது. பார்ப்போம்!

*[போகிறார்கள்]*

## 2

*[ஒரு வாரம் கழித்து ராமநாதன் வீட்டுக் கூடம் ராமநாதனும் அவருடைய டில்லி மாப்பிள்ளை சுந்தரமும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]*

**சுந்தரம்:** மாமா! நான் போன தடவை பார்த்ததற்கு இந்தத் தடவை உங்கள் உடம்பு ரொம்ப இளைத்துப் போயிருக்கிறதே! நீங்கள்

உங்கள் 'ஹெல்த்' விஷயத்திலே சரியான கவனம் செலுத்துவதே யில்லையா?

ராம: என்ன மாப்பிள்ளே! நான் என்ன உங்களைப் போல் சின்னப் பிள்ளையா? வய தாக வில்லே?

சுந்தரம்: நோ! நோ! நான் ஜெர்மனியிலே பார்த்திருக்கிறேன். தொண்ணூறு வயசுத் தாத்தாக்களெல்லாம் ஒன்பது வயதுக் குழந் தைகள் மாதிரி ஓடுகிறார்கள். ஏன்? எப்படி? உடம்புக்கு போஷாக்கு வேண்டும். ஜப்பானுக்குப் போயிருந்த போது ஒரு 'ஸ்பெஷல்' வைட்டமின் டானிக்கைப் பற்றிக் கேள் விப்பட்டது நினைவுக்கு வந் தது. இங்கே புறப்படுற துக்கு முன்னாலே 'கேபிள்' பண்ணி 'ஏர்'லே அரை டஜன் பாட்டில் உங்களுக்காக வரவழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன்!

ராம: இந்தக் கிழமும் இனிமேல் துள்ளிக் குதிக்க வேண்டும் என்ற ஆசை உங்களுக்கு.

சுந்தரம்: நீங்களாகவே உங்களை வயோதிக ராக்கிக் கொள்வது ரொம்பத் தப்பு! அடடே! மறந்து போயிட்டேன். இந்தக் கடிகாரம் உங்க கைக்கு ரொம்ப அழகாக இருக்கும். 'ஸ்டேட்ஸ்'க்குப் போயிருந்தபோது அட் மிரல் அனுப்பி எனக்குக் கொடுத்தான்! கையை நீட்டுங்கள்! (ராமநாதன் கையில் மாட்டி விட்டு) ஆஹா! பொரு பொருத்தம்!

ராமநாதன்: உங்கள் அன்புக்கு ரொம்ப நன்றி, மாப்பிள்ளே!

சுந்தரம்: வாட்?...யாரோ மூன்றும் மனி தனுக்கு 'தாங்ஸ்' சொல்லுறப்பிலே பேசுகிறீர் களே! மாமா!...நான் உங்களுக்கு ரொம்பக் கடமைப் பட்டவன்! உங்கள் அன்புதான் எனக்கு வேண்டும்.

[மாடிக்குப் போகிறான் உள் ளிருந்து கமலம் வருகிறாள்.]



ராமநாதன்: உனக்கு என்ன வேண்டும்? மணி வேண்டுமா? ஒன்பது நாற்பத்தி மூன்று.

கமலம்: உங்களை இப்போது யார் மணி கேட்டார்கள்? அந்த டில்லி ஜபர்தஸ்தும் இங்கே திமர்னு 'டேரா' போட்டிருக்கானே? என்னத்தைக் கொட்டிக் கொட்டி அளந்து கொண்டிருந்தான் என்று கேட்க வந்தேன்.

ராமநாதன்: அவன் கொட்டி அளக்க வில்லையடி! கட்டி அளந்தான். இதோ! இந்தக் கையில் புது கடிகாரம் கட்டிவிட்டுப் போயிருக்கிறான். யாரோ அனுப்பி பயல் கொடுத்தது இந்தக் கிழட்டுப் பயல் கையில் ஜ்வலிக்கிறது. எனக்கு ஏதோ யோக காலம். முகம் கொடுத்துப் பேசாத மாப்பிள்ளைக ளெல்லாம் 'திமர் திமர்'னு வந்து எனக்கு ராஜ உபசாரம் பண்ணுகிறார்கள்.

**கமலம் :** அந்தக் கல்கத்தா கழுத்துச் சுளுக்கு கோபாலன் ஒருவன் பாக்கி. அவனும் வந்து 'தொப்' என்று குதித்தாலும் ஆச்சர்யப் படுவதற்கில்லை !

**ராமநாதன் :** நம்ப மாடியிலேதான் மூனுவது அறை ஒன்று காலியாக இருக்கிறதே.



மூன்று பேரும் கூடி மாப்பிள்ளைகள் மகாநாடே நடத்தி விட்டுப் போகட்டுமே !

*[வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்கிறது. கல்கத்தா மாப்பிள்ளை கோபாலன் தன்மனைவி கோமளாவுடன் இறங்குகிறான்.]*

**கமலம** வாருங்கள், வாருங்கள்.

**கோபாலன்** (ராமநாதனை சாஷ்டாங்கமாக வணங்கி) : மாமா! சௌக்கியமா? உங்களையெல்லாம் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. உடனே காரிலேயே கிளம்பி விட்டேன்! கோமளா! மாமாவுக்கு முதலில் ஏலகுல்லாடினை எடுத்துக் கொடு.

**ராமநாதன்:** அதற்கென்ன மாப்பிள்ளை அவசரம்?...முதலில் காப்பி எல்லாம் ஆகட்டும். கமலம்! மாப்பிள்ளையைக் கவனி!... கோமளா! மாடியிலே கடைசி அறையிலே உன் சாமான்களை யெல்லாம் கொண்டு போய் வைக்கச் சொல்.

**கோமளம் :** எங்களுக்கு முதல் அறையே சௌகர்யம் அப்பா! கல்யாணத்தின்போதே மாப்பிள்ளைக்கு அந்த அறைமீது அலாதிப் பிரியம்!

**ராமநாதன் :** அதிலே பம்பாய் மாப்பிள்ளை சங்கரனும், கல்யாணியும் இருக்கிறார்கள். இரண்டாவது அறையிலே டில்லி மாப்பிள்ளை சுந்தரமும், மோகனவும் இருக்கிறார்கள்.

**கோபாலன் :** ஹா!......அவர்களும் வந்து விட்டார்களா?......

**ராமநாதன் :** என்ன மாப்பிள்ளை: ஏன் உங்கள் முகம்......?

**கோபாலன்** (முக பாவத்தை மாற்றிக் கொண்டு): ஆனந்தம் மாமா, ஆனந்தம்! எல்லோரையும் ஒரே நடையில் பார்க்க வசதியாகப் போயிற்றல்லவா? அப்புறம் டில்லி மைத்துனியும் பம்பாய் மைத்துனியும் தங்களைப் பார்க்க வரவில்லை என்று கோபித்துக் கொள்ள மாட்டார்களல்லவா?...கோமளா! சாமானையெல்லாம் வைத்துவிட்டு, மாமாவுக்காக வரவழைத்த கம்பளிச் சால்வையைக்

''ஏய்! நீ போ உள்ளே. மேனகையை வரச் சொல்லு !''

'' அதுக்கு அரைமணி ஆகுங்களே !''

'' எதுக்கு அரைமணி ?''

'' அந்த வேஷத்தையும் அடியேன்தான் போட்டுக்கிட்டு வரணும் !''

---

கொண்டுவா !...மாமா ! இந்தக் கார் போன மாதம்தாம் வாங்கினேன். வெகு சுகம் ! உங்களை அதில் ஏற்றிக் கொண்டு தென்னாட்டு க்ஷேத்திரங்களை ஒரு சுற்றுச் சுற்றத் திட்டம்...

**ராமநாதன்:** எனக்கு ஆனந்தத்திலே உடம்பு ஒரு சுற்றுப் பருத்து விட்டதே !

**கோபாலன் :** ஒரு சுற்று என்ன ? ஒன்பது சுற்றுக் கூடப் பருக்க வைக்கிறேன் நான் ! கோமளா ! நானே வந்து சால்வையை எடுத்து வருகிறேன்.

*[கோமளாவைப் பின்தொடர்ந்து கோபாலனும் மாடிக்குப் போகிறான்.]*

**கமலம் :** என்ன !......எனக்கு ஒன்றுமே புரியவில்லை, போங்கள் ! மும்மூர்த்திகளும் வந்து ' தொப்பு 'ன்னு குதித்திருக்கிறார்களே !

**ராமநாதன் :** எனக்குத்தான் தெரியுமா, என்ன ? என்னவோ பம்பாய் மாப்பிள்ளை சாமான்கள் வாங்கப் போவதாக ஒப்புக் கொண்டு விட்டார். ஒரு விஷயம் புரிகிறது. கோபாலன் கழுத்திலே சுளுக்கைக் காணும். விறைக்காமல் வளைகிறது. மாதம் ஆயிரம் ரூபாய்க்குக் குறைவாய்ச் சம்பாதிப்பவனெல்லாம் ஆப்பிரிக்கா தேசக் காட்டுமிராண்டி என்று நினைப்பவன், இப்போது மாமா, மாமா வென்று குழைகிறான் !

*(போகிறார்கள்.)*

## 3

*[அன்று மாலை. ராமநாதன் வீட்டு மாடி அறை. சங்கரன், சுந்தரம், கோபாலன் மூவரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]*

**சங்கரன் :** ஏன் மிஸ்டர், கோபாலன் ! நீங்க எப்படி உங்க பிஸினஸ் எல்லாவற்றையும் விட்டு விட்டுத் திடீரென்று இங்கே வந்தீர்கள்? ஒரு நிமிடம் நீங்கள் கவனிக்கவில்லையென்றால் ஓராயிரம் ரூபாய் நஷ்டம் என்பீர்களே ?

**கோபாலன் :** பணம் மாத்திரம் மனுஷனுக்கு இருந்தால் போதுமா? உறவு ஒட்டு எல்லாம் இருந்தால்தான் மன நிறைவு. மாமாவைப் பார்க்க வேண்டும்போலிருந்தது ஓடி வந்தேன். வீடு மூனு மாசம் வெளிநாடு ஒன்பது மாசம் என்று 'கான்ஸ்டலேஷன் பிளேனி'லேயே காலம் கழிக்கும் அம்பாஸிடர் காரியாலய சுந்தரமே வந்திருக்கிறார் (தனியாக) மடையன்கள். கழுகுக்கு மூக்கிலே வியர்க்கிறமாதிரி, இந்தப் பயல்கள் வேறு மோப்பம் பிடித்து வந்திருக்கிறார்கள்!

**சுந்தரம் :** நான் என்னையா பிரமாதம் ! பம்பாய் ராஜ்ய அண்டர் செக்ரட்டரி சங்கரனே வந்திருக்கிறார் ! அவர் 'அண்டர்'லே யிருந்து தாங்கிப் பிடிக்காவிட்டால் பம்பாய் ராஜ்யம் பறந்தே போய் விடும் என்று அரசியல் வட்டாரத்திலே பேச்சு அடிபடுகிறது ! (மெதுவாக) இந்த அண்டரும், அப்பரும், மாணிக்க வாசகரும் இப்போதுதானா வந்து கழுத்தை அறுக்க வேண்டும் ? தடியன்கள்.

**சங்கரன் :** ஆபீஸ் பைல்களும் கழுத்தறுப்பும் ஜன்மம் முழுதும்தான் கூடவே இருக்கின்றன. என்னவோ ஹாய்யா மாமாவோடு இரண்டு வாரம் தங்கிப் போகலாமென்று மெடிக்கல் லீவு போட்டுவிட்டு வந்தேன். (மெதுவாக) ஆனால் காசிக்குப் போயும் சனீசுவரன் விடவில்லை என்ற கதையாகப் போச்சு !

*[கோமளம் மோகனு பின்தொடர வருகிறாள்.]*

**கோமளா :** அப்பா எங்கேயோ வெளியே கிளம்பிக் கொண்டிருக்கிறார். சீக்கிரம் வந்து விடுவதாகச் சொன்னார்.

**கோபாலன் :** நடந்தா போகப் போகிறார் ? ஏன் நடக்க வேண்டும்? நான் காரை எடுக்கிறேன் என்று சொல். போ !

**சுந்தரம் :** மோஹனா ! பனி அடிக்கிறாற் போலிருக்கு. என்னுடைய திபேத் ஸ்வெட்டரை அவருக்கு எடுத்துக் கொடேன் ! எனக்கும்தான் பொழுது போகவில்லை. நானும் அவர்கூடப் போய் விட்டு வருகிறேன்.

*[எழுந்திருக்கிறான்]*

**சங்கரன் :** கல்யாணி ! கல்யாணி ! எங்கே தொலைந்தாள் ? மாமாவுக்கு 'வாக்கிங் ஸ்டிக்' எடுத்துக் கொடுக்க வேண்டாமோ நானே போய் எடுத்துத் தருகிறேன் !

*[கோபாலனையும் சுந்தரத்தையும் தாண்டிக்கொண்டு அவன் கீழே இறங்கிப் போகிறான்.]*

## 4

*[ஒரு வாரம் கழித்து ஒரு நாள் மாலை கூடத்தில் ராமநாதன் தலையைப் பிடித்துக் கொண்டு வைத்தியம் பிடித்தது போல் அலைகிறார். அவரது மாப்பிள்ளைகள், பெண்கள், மனைவி எல்லாரும் பயந்து நடுங்கி ஒடுங்கிப் போய் நிற்கிறார்கள்.]*

**ராமநாதன்** (தலையைப் பிடித்துக்கொண்டு) குடி கெட்டது ! என் தலையிலே இடியே விழுந்து விட்டது. போச்சு ! போச்சு !

**கோபாலன் :** மாமா! பதறுகிறீர்கள், மாமா! மிஸ்டர் சுந்தரம்! மிஸ்டர் சங்கரன்! யாராவது போய் ஒரு டாக்டரை இழுத்து வாருங்கள்!

**சங்கரன் :** மாமா! உட்காருங்களேன். கல்யாணி! கொஞ்சம் ஐஸ்வாட்டர் கொண்டாயேன். மிஸ்டர் கோபாலன்! நீங்கதான் காரிலே போய் ஒரு டாக்டரைப் பாருங்களேன். சுந்தரம்! நீங்களும்கூடப் போய் வாருங்களேன்!

**சுந்தரம் :** பனி அதிகமாயிருக்கிறதாலே 'லிவர்' சரியா வேலே செய்யலே! சங்கரன்! நீங்க டாக்டர்கிட்டே விஷயத்தைச் சொல்லிக் கூட்டிக் கொண்டு வாருங்கள்.

**ராமநாதன் :** மாப்பிள்ளே! இது வைத்தியக் கேசு இல்லே! பைத்தியக் கேசு! என் ஆசை, கனவு, திட்டம் எல்லாமே பொசுங்கிப் போச்சு, மாப்பிள்ளே! பொசுங்கிப் போச்சு.

**கமலம் :** என்ன சொல்லுகிறீர்கள்?

**ராமநாதன் :** இரண்டு மாதங்களுக்கு முன்னாலே கொல்லையிலே கத்தரிச்செடி வைக்கத் தோண்டியபோது ஒரு புதையல் கிடைத்தது.

**கோபாலன்**
**சுந்தரம்**
**சங்கரன்** } (ஒரே குரலில்) : அது என்ன ஆச்சு?

**ராமநாதன் :** கேளுங்கள், மாப்பிள்ளே! அத்தனையும் தங்கக் கட்டிகள், வைரம், பவுன்காசு! என் குறைந்த மதிப்பிலே ஐந்து லட்சம் தேறும்! என் மூன்று மாப்பிள்ளைகளுக்கும் சம பங்கு வைத்துக் கொடுக்க வேண்டும், அது வரையில் ரகசியமாக இருக்கட்டும் என்று மாடிக் கைப்பிடிச் சுவருக்குள்ளே அப்படியே அந்தப் பானையை மறைத்து மேலே பூசி வைத்திருந்தேன்! மாப்பிள்ளே, நேற்று யாரோ அதை அடித்துக்கொண்டு போய்விட்டான்!

*[தலையில் அடித்துக் கொள்கிறார். மாப்பிள்ளைகள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து முறைக்கிறார்கள்.]*

**கோபாலன் :** நான் இப்பவே போலீசுக்குப் போகிறேன்?

**சுந்தரம், சங்கரன்:** நாங்களும் வருகிறோம்!

**ராமநாதன் :** ஐயோ வேண்டாம்! அது பெரிய ஆபத்தாகப் போகும்! ஏன் புதையலை எடுத்தவுடனேயே சர்க்காருக்குத் தெரிவிக்கவில்லையென்று பிடித்துக் கொள்வார்கள். போனது போச்சு! யார் சொத்தோ யாருக்கோ போய்விட்டது. நமக்குப் பிராப்தமில்லே!

**கமலம் :** உங்கள் சமர்த்தை நாளுக்கு கொண்டு பொறுத்துக் கொண்டிருக்கிறேன். எடுத்த கையோடு இரும்புப் பெட்டிக்குள் வைத்துப் பூட்ட மாட்டீர்களோ?

**ராமநாதன் :** உன் வாயிலே ஒரு ரகசியம் நிற்காதே என்று பயந்தேன். இப்போது புதையலே நிற்கவில்லே.

**கோபாலன் :** மாமா! நான் இன்றைக்கு ராத்திரி ஊருக்குக் கிளம்பப் போகிறேன் என்று சொல்ல வந்தேன். அதற்குள் இந்த அமளி துமளி.

**சுந்தரம் :** நீங்க இரண்டு நாட்கள் இருந்து மாமாவுக்கு ஆறுதல் சொல்லிவிட்டுப் போங்கள்! எனக்குத்தான் அவசரக் கடிதம் வந்திருக்கிறது. ராத்திரிப் பிளேனிலே போக நினைத்திருக்கிறேன்.

**சங்கரன் :** மிஸ்டர் சுந்தரம்! பிளேனிலே 'சீட் புக்' பண்ணப் போறபோது எனக்கும் இரண்டு சீட் புக் பண்ணுங்கள். சீப் செக்ரட்டரி இன்றைக்கு டிரங்கிலே பேசினார்.

**ராமநாதன்:** நீங்களெல்லாம் வந்திருந்தது வீடு கலகல வென்றிருந்தது. இப்படித் திடீரென்று புறப்பட......

**கோபாலன் :** அவரவர்களுக்கு வயிற்றுப் பிழைப்பு இல்லேயா? மாமனார் வீட்டிலே வந்து உட்கார்ந்திருக்க முடியுமா, என்ன?

*[மூன்று மாப்பிள்ளைகளும் தத்தம் மனைவியின் தொடர மாடிக்குப் போகிறார்கள்.]*

## 5

*[மறுநாள் காலை ராமநாதன் கூடத்து நாற்காலியில் சாவகாசமாக உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருக்கிறார். கமலம் வருகிறாள்.]*

**ராமநாதன் :** கடைக்குப் போகவேண்டுமா? சீக்கிரம் சொல்லு. வெய்யிலுக்குமுன் போய் வருகிறேன்.

**கமலம் :** சங்கரன் வாங்கிப் போட்ட சாமான் இன்னும் ஒரு மாசத்துக்கு வரும்! எனக்கு எல்லாமே புதிராக இருக்கிறது. மூன்று மாப்பிள்ளைகளும் 'திமுதிமு' வென்று வந்தார்கள். திருதிருவென்று விழித்தார்கள். மடமடவென்று கிளம்பிவிட்டார்கள். நீங்கள் வேறு 'புதையல் கிதையல்' என்று புகைய விட்டீர்கள். இதெல்லாம் என்ன கூத்து?

**ராமநாதன் :** (மடமடவென்று சிரித்து) ராஜதந்திரம், யுத்த தந்திரம் என்பதுபோல் இது மாமனார் தந்திரம்! இரண்டு மாதங்களுக்கு முன்னாலே எதிர்வீட்டு ஐயாசாமி, தன் ஸ்டெனோகிராபர் மாப்பிள்ளை ஹைதராபாத்திலேயிருந்து வந்து நமஸ்காரம் செய்ததைப்பற்றி ரொம்பப் பெருமை அடித்துக் கொண்டான். என் மாப்பிள்ளைகளின் அகம் பாவத்தைப் பற்றிக் கேலியாகப் பேசினான்.

**கமலம்:** அதற்காக...?

**ராமநாதன் :** அதற்காக, ஐயாசாமியைப் பிரமிக்க வைப்பதற்காக மாமனார் தந்திரத்தைக் கையாண்டேன்! என் மூன்று மாப்பிள்ளைகளையும் ஒரே வழியிலே வரவழைத்தேன். எப்படி? மூணு பேருக்கும் மொட்டைக் கடுதாசிகள் போச்சு. 'ஐயா! உம் மாமனாருக்குப் புதையல் கிடைத்திருக்கிறது. தனக்குப் பிடித்த ஒரு பெண்ணுக்கு அத்தனையையும் கொடுக்கப் போவதாகச் சொல்கிறார்' என்று நாம்ளே எழுதிப் போட்டேன்.

**கமலம்:** அம்மாடியோவ்! இந்தக் கற்பனையே பெரிய புதையல் மாதிரின்னு இருக்கு.

**ராமநாதன்:** மூன்று பேரும் ஓடிவந்தார்கள், எனக்கு ராஜோபசாரம் செய்தார்கள். ஐயாசாமிக்கு வயிறு எரிந்தது. எனக்கு உள்ளம் குளிர்ந்தது. புதையல் புஸ்வாணம் ஆனதும் மூன்று பேரும் சிட்டாகப் பறந்து விட்டார்கள். இப்போது ஊரிலே எனக்கு ஏற்பட்டிருக்கும் மதிப்பு என் வாழ்நாள் முழுதும் தாங்கும்! போதுமா?

**கமலம்:** (திருஷ்டி கழிக்கும் பாவனையில்) அந்த நாளிலிருந்தே நீங்க சமர்த்து என்று நான் ஒருத்திதான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்! *[இருவரும் சிரிக்கிறார்கள்!]*

இரவின் அமைதியில் ஊரே அமுங்கிக் கிடக்கிறது. மண்ணுருகப் பெய்த பகல் கோடையின் வெப்பத்தில் வாடி வதங்கி விருந்த நிலமகளை இரக்கத்துடன் வருடிவிட்டுக் கொண்டிருந்த இளம் காற்றின் சுகத்தில், நான் மட்டும் உடல் களைத்திருந்தும் உள்ளத்தைக் குடைந்து கொண்டிருந்த எண்ணற்ற எண்ண அலைகளினால் துயிலின்றிச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கிடக்கிறேன்.

சிருஷ்டியின் தத்துவம், அதன் ரகசியம் எனக்குப் புரியத்தானில்லை. இன்பத்தைக் கொடுக்கக் கூடிய இயற்கைக்குள் மனித சமூகத்தை அழிக்க வைக்கும் பயங்கர எரிமலையை ஏன் ஒளித்து வைக்க வேண்டும்?

என் மனத்துள் குமுறும் எண்ணங்களை என் வாழ்வின் சுக துக்கங்களில் பங்கு கொள்ளும் ஒரே ஜீவனிடம் வெளியிட நான் ஆவல் கொள்கிறேன். ஏனென்றால் இம்மாதிரி எண்ணங்கள் என் மனத்தில் தோன்றுவதற்கே மூலகாரணம் கமலாவிடமுள்ள குறைதான். ஆனால் என் மனத்தின் வேட்கையை அவள் அறிந்து கொண்டாலும் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் பெண்களுக்குக் கற்பனை குறைவு. நம்பிக்கை அதிகம். இந்த நம்பிக்கையினாலேயே அவள் கடந்த ஐந்து வருடங்களாகப் பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு என்னை இழுத்துச் சென்றிருக்கிறாள்!

நாங்கள் திருமணம்செய்துகொண்டபோது எந்த விதமான எதிர்காலத்தைப் பற்றியும் நினைக்க முடியாமலே எட்டு வருடங்கள் ஆற்றுச் சுழல்போல மறைந்துவிட்டன. முன்போல் வீட்டுக்கு நேரத்தில் வருவது படிப்படியாக நின்று விட்டது. உத்தியோகத்தில் சிரத்தையும் பிடிப்பும் ஏற்பட்டன. பத்து மணிக்குமேல் வீட்டுக்கு வந்து, 'கமலா' என்று அழைக்கும்போது, இவ்வளவு பெரிய வீட்டுக்குள்ளிருந்து தனியாக அவள் மட்டும் அமைதி சூழ்ந்த ஏகாந்த வெளியிலிருந்து என்னை நோக்கி வரும்போது உள்ளத்தில் ஒரு சூன்யம் சூழ்வதை உணர்கிறேன். களைப் படைந்த என் மனத்துக்கும் உடலுக்கும் அவளது உபசரணையும் ஸ்பரிசமும் இதத்தைக் கொடுத்தாலும் அதில் ஒரு ரசிப்புத் துலங்கவில்லை. அவளும் அதை நன்கு உணர்ந்து இருக்க வேண்டும்.

திருமணமாகிப் பல வருடங்களாகியும் வீட்டில் குழந்தை விளையாடவில்லை என்ற குறை எங்கள் முன் விகவரூபமெடுத்து நின்றது. 'வேலை' முடிந்து வந்ததும் ''கமலா!'' என்று குரல் கொடுக்கும்போது, அவளுடைய புடவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு நெற்றியில் கருங்கேசம் புரள, குறும்புப் புன்னகையுடன், குறுகுறுத்த பார்வையுடன் தளர்நடை பயின்றுகொண்டு மதலை மொழி உதிர்த்தவாறு ஒரு குழந்தை வர வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். படுக்கையில் புரளும்



போது மலரினும் மெல்லிய கரங்களைக் கொண்டு மார்பிலும் கன்னத்திலும் அழுந்தி ஸ்பரிசிக்க என் உள்ளம் விழைகிறது. பத்திரிகைகளில் பிரசுரமாகும் குழந்தைகளின் புகைப்படங்களைக் கமலா தன்னை மறந்த லயத்தில் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்திருக்கிறேன். எங்கிருந்தோ கேட்கும் குழந்தையின் அழுகுரலும், தாலாட்டுப் பாட்டும் அவளுடைய உள்ளத்தின் மெல்லிய உணர்ச்சிகளைப் பலமாகத் தூண்டி விட்டிருக்கின்றன. துயிலும்போது அவளது கரங்கள் எதையோ அணைத்துக் கொள்ளப் பக்கத்தில் துழாவும்.

பிறகு என்ன?

வீட்டுக்கு ஜோசியர் வந்து போய்க்கொண்டிருந்தார். கோவிலுக்குப் பாலும் தயிரும் எண்ணெயுமாகப் போய்க் கொண்டிருந்தது. மூன்று மாத விடுமுறை எடுத்துக்கொண்டு புண்ணிய கட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் சென்றோம். ரயில் பிரயாணத்தில் ஒரு சம்பவம் மறக்க முடியாதது. ஏதோ ஒரு ஜங்ஷனில் வண்டி நின்றுகொண்டிருக்கும்போது கமலாவுக்குச் சாப்பாடு வாங்கிக் கொடுத்தேன். பொட்டலத்தைப் பிரித்து ஒரு பிடி வாயின் அருகே கொண்டு போகையில் வெளியிலிருந்து ஜன்னல் வழியாக ''அம்மா!'' என்ற குரல் கேட்டது. பரட்டைத் தலையும் நீட்டிய கரங்களுமாக நின்று கொண்டிருந்த பிச்சைக்காரச் சிறுமியைக் கண்டதும் சாப்பாட்டை அப்படியே தூக்கி, நீட்டிய கரங்களில் போட்டு விட்டாள் கமலா. வியப்பால் விரிந்த கண்களுடன் அந்தச் சிறுமி, ''நல்லா இருக்கணும், தாயே!'' என்று ஆசீர்வாதம் செய்தபோது கமலாவின் இதழ்க் கடையில் புன்னகை நெளிந்தது.

''ஆசீர்வாதத்தினால் மட்டும் வயிறு நிறைந்து விடாது, கமலா!'' என்றேன்.

''உஸ்! உங்களுக்கு ஒன்றும் தெரியாது. பகவான் ஒருவேளை இந்தச் சின்னஞ்சிறு ரூபத்தில் வந்து சோதிக்கிறாரோ என்னமோ!'' என்றாள் அவள்.




Exide





நம்பிக்கையின் அஸ்திவாரத்தில் கற்பித்துக் கொண்ட எண்ணத்தை நினைந்து எனக்கு ஆத்திரமாகவும் அவன்மேல் வருத்தமாகவும் இருந்தது. 'கடவுள் உலகத்தைப் படைத்து விட்டுத் தூங்கப் போய் விட்டாரோ என்று தப்புக் கணக்குப் போடாதீர்கள்'' என்று விவேகானந்தர் கூறுகிறார். ஆனால் எனக்கு எங்களுடைய வாழ்க்கையைப் பார்க்கும்போது அவன் தூங்கியே போய் விட்டானோ என்று தான் நினைக்கத் தோன்றுகிறது.

வேலை முடிந்து ஒரு நாள் வீட்டுக்குள் நுழைந்தபோது ஊஞ்சலில் உட்கார்ந்து மடியில் இரண்டு வயதுக் குழந்தை ஒன்றை வைத்துக் கொஞ்சிக்கொண்டிருந்தாள் கமலா. எனக்குத் திகைப்பாக இருந்தது. ஹாலுக்குள் பிரவேசித்ததும், கீழே உட்கார்ந்திருந்த ஒரு பெண் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள். படபடப்புடன் நாணத்தில் உடல் நெளியச் சரேலென்று கமலாவின் பின் பக்கம் போய் நின்று கொண்டாள். அவளது கையைப் பிடித்துக்கொண்டு ஆறு வயதுச் சிறுவனொருவன் காக்கி உடைக்குள்ளிருக்கும் என் போலீஸ் உருவத்தை முகத்தில் திகில் பரவ வியப்புடன் நோக்கிக் கொண்டிருந்தான்.

'' இதோ பாருடா, போலீஸ் மாமா வந்து விட்டார். ஒரு 'சல்யூட்' போடுடா !'' என்று இடுப்பில் இருக்கும் குழந்தையிடம் கொஞ்சிக் கொண்டே என் அருகில் வந்தாள் என் மனைவி கமலா.

''பயல் யாரு?'' என்று கேட்டு வைத்தேன்.

''உங்களுக்கு ஞாபகமில்லே? நம்ம ஊரிலே சிவன் கோவில் தெரு முனையில் தாடித்தாத்தா என்று ஒருவர்.....

''அவருடைய பேத்திதான் இதோ வந்திருக்கிறது. நாம் இந்த ஊருக்கு மாற்றி வந்திருப்பது கொஞ்ச நாட்களுக்கு முன்புதான் தெரியுமாம். உங்களை ஒரு முக்கிய காரியமாகப் பார்க்க வந்திருக்கிறார்கள் !''

'' ம்....அப்படியா என்ன தலை போகிற காரியமோ ?'' என்று பார்வையைத் தாடித் தாத்தாவின் பேத்தியின் பக்கம் திருப்பிக் கேள்வியைக் கமலாவிடம் கேட்டேன்.

''டேய் சீனு! உங்க அப்பாவை அழைத்துக் கொண்டு வாயேண்டா!'' என்று சிறுவனிடம் அந்தப் பெண் முணுமுணுத்ததும் பயல் வாசலுக்கு வேகமாக ஓடினான்.

'' முக்குக் கடைவரை போய்விட்டு வருகிறேன் என்று இப்பொழுதுதான் சென்றார். அவருக்கு அடிக்கடி சிகரெட் குடிக்க வேண்டுமாம் !'' கமலாவின் விளக்கம் முடிவதற்குள் வாசலில் செருப்புச் சத்தம் கேட்டது. முப்பது முப்பத்தைந்து வயது மதிக்கக்கூடிய மெலிந்த ஒரு மனிதர் ''நமஸ்காரம்'' என்று கூறிக் கொண்டே உள்ளே வந்தார்.

பரஸ்பர அறிமுகம் ஆனதும் அவர் விஷயத்தைக் கூறினார். அவருடைய மைத்துனன்! அதாவது இந்தப் பெண்ணின் சகோதரன் வேலை பார்க்கும் காரியாலயத்து 'யூனியன்' தலைவனாம். நான்கு நாட்களுக்கு முன் நடந்த வேலை நிறுத்தத்தில் விஷமிகள் சிலர் காரியாலயக் கட்டிடத்துக்குள் கல்லெறிந்து கலாட்டா செய்திருக்கிறார்கள். அதற்கு முழுப் பொறுப்பும் அவன்மேல் சுமத்தப்பட்டு அவனைச் சிறைப்படுத்தி யிருக்கிறார்கள். அப்படித் தப்பு, தண்டாவுக்குப் போகிறவனில்லையாம் அவன். 'எப்படியாவது இந்தத் தடவை மன்னித்து விடவேண்டும்' என்றார் அவர்.

'' என்னாலானதைச் செய்கிறேன் !'' என்று கூறியதும் அவர்கள் விடைபெற்றுக் கொண்டார்கள். தன் இடுப்பில் இத்தனை நேரமிருந்த குழந்தையை அந்தப் பெண் வாங்கிக்கொண்டபோது கமலாவின் முகம் எதையோ பறிகொடுப்பது போல் மாறியது. குழந்தை தாயின் இடுப்பில் ஏறியபிறகும் ஏதோ ஒரு வெறியால் உந்தப்பட்டு, தன் சிநேகிதியையும் அணைத்துக்கொண்டு குழந்தையின் கன்னங்களிலும் கரத்திலும் மாறி மாறி முத்தமாரி பொழிந்தாள் கமலா

'' தினமும் நீ இங்கே வந்து போய்க் கொண்டிரேன் லக்ஷ்மி !''

'' இப்படிக் குழந்தை மூச்சுத் திணறும்படி முத்தமிட்டால் நான் வரவே மாட்டேன், அம்மா !'' என்று லக்ஷ்மி அபிநயத்துடன் கூறியதும் இரு சிநேகிதிகளும் கலகல வென்று சிரித்தார்கள்.

இரவு குளுமையான நிலவொளி பரவிய அறைக்குள் படுத்திருக்கும்போது கமலா கேட்டாள்.

'' அந்தக் குழந்தை எவ்வளவு அழகாக இருக்கிறது. பார்த்தீர்களா ?''

'' ஹூம்....ம் !''

'' அடேயப்பா! அதற்குத்தான் எத்தனை பெரிய நீல விழிகள்! எப்படி என்னிடம் ஒட்டிக் கொண்டது தெரியுமா, ஒரு நிமிடத்தில் ?''

'' உன்னுடைய சிநேகிதியின் தம்பியை எப்படிக் காப்பாற்றுவது என்று நான் யோசித்துக்கொண்டிருக்கிறேன், கமலா !''

'' என்ன சாமர்த்தியமாக உங்களுக்கு 'சல்யூட்' அடித்தது அது ?... அவருக்குச் சொற்பச் சம்பளம்தானாம். அடுக்கடுக்காக ஐந்து குழந்தைகளாம். அவன் தயவினால் தான் குடும்பம் சற்று நிமிர்ந்து நிற்க முடிகிறதாம் !''

மண்டைக்குள் பளிச்சென்று ஒரு மின்னல் மின்னியது. என் கண்ணின் முன் சிருஷ்டியின் ஓரவஞ்சனை விசுவரூபம் எடுத்து நின்றது. சிருஷ்டி தேவன் ஏன் இப்படிப் பழுதடைந்த தராசைக் கையில் பிடித்திருக்கிறான் ?

லக்ஷ்மி தினமும் வீட்டுக்குக் குழந்தையுடன் வந்தாள். கமலாவுக்கும் குழந்தைக்கும் உள்ள இடைவெளி நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வந்தது. அவளுடைய வெறியைப் பார்க்கும்போது எனக்குத் திகிலாகக்கூட இருந்தது. தூக்கத்தில் குழந்தையின் பெயரைச் சொல்லிப் பிதற்றினாள்.

என்னுடைய முயற்சியினால் லக்ஷ்மியின் தம்பி சிறிய தொகை அபராதத்துடன் விடுதலை பெற்றான். லக்ஷ்மி தன் கணவன் சகிதம் வந்து உணர்ச்சிப் பெருக்கால் நன்றியில் நனைந்த உள்ளத்துடன் கண்ணீர் ததும்பத் தட்டுத் தடுமாறி வந்தனத்தைத் தெரிவித்துக் கொண்டாள். அவர்கள் விடைபெற்றுக் கொள்ளும் சுமுகமான சூழ்நிலையில் கமலா ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள்.

''உன் தம்பி விடுதலையாகி விட்டான். உன் காரியம் ஆகிவிட்டது. இனிமேல் நீ இங்கு வருவாயோ என்னமோ ?''

# கார்த்திகை தீபம்



வேல்வடிவில் ஒளிர்விட்டு
விளையாடும் தீபம் !

வெஞ்சமரின் வண்ணம்போல்
விளக்கும்செந் தீபம் !

சேல்விழிகள் நிமிர்ந்தனபோல்
சதிராடும் தீபம் !

செந்தமிழ்க்கோன் பாண்டியனின்
சின்னம்கொள் தீபம் !

குறிஞ்சிநில மக்களொடு
கூத்தாடும் தீபம் !

குன்றுதோறும் முனைக்கண்ணுக்
குந்திடும்நல் தீபம் !

அறிஞர்களின் நாவிலமர்
அறிவுச்சுடர் தீபம் !

அகத்தியர்க்குக் குருவான
ஆறுமுகன் தீபம் !

**கோவி. மணிசேகரன்**

''அப்படிப்பட்டவளல்ல நான். நீங்கள் செய்த நன்றியை மறக்க முடியுமா, என்ன ?''

''ஆமாம்! நான் செய்த உதவிக்கு நீ என்ன பரிசளிக்கப் போகிறாய் ?''

''என்ன வேண்டும் சொல்லேன். தருகிறேனா இல்லையா என்று பார் !''

'' உண்மையாகவா ?''

'' சத்தியமாக !''

'' உன் குழந்தையைக் கொஞ்ச நாட்களுக்கு என்னிடம் விட்டு வையேன். நான் அருமையாகப் பார்த்துக் கொள்வேன். நான் சொல்வது புரிகிறதல்லவா ?'' இப்படிக் கூறும் போதே கமலாவின் குரலில் ஓர் இளக்கம்.

சட்டென்று ஒரு மாறுதல் லக்ஷ்மியின் முகத்தில் பரவி மறைந்தது. தன் கணவனின் முகத்தைச் சிரமப்பட்டு வருவித்துக் கொண்ட புன்னகையுடன் நோக்கினாள்.

'' என்னைப் பார்ப்பானேன், லக்ஷ்மி! அவர்களுக்கோ குழந்தையில்லை. கொஞ்ச நாட்கள் தான் விட்டு வையேன். வசதியான இடத்தில் நம் குழந்தை நன்றாக வளரட்டுமே !'' என்றார் அவள் கணவன்

அடுத்த நிமிடம லக்ஷ்மியின் இடுப்பிலிருந்த குழந்தை கமலாவிடம் தாவியது. 'கேட்' டைத் திறந்துகொண்டு, அவர்கள் வெளியில் செல்லும் போது லக்ஷ்மி மட்டும் ஒரு தடவை திரும்பிப் பார்த்துவிட்டுச் சென்றாள்.

அன்றிரவு நாங்கள் தூங்கவில்லை. குழந்தையையும் தூங்க விடவில்லை !

'பெருமல்' பெற்று விட்ட மழலையைப் பெற்றெடுத்ததாகவே பார்த்துப் பூரித்துப் போனாள் கமலா. 'ஓ' வென்று கிடந்த வீடு கலகலப்படைந்தது. இரண்டு பேர்கள் மட்டும் புழங்கி வந்த இல்லம் அமர்க்களப் பட்டது. ஒவ்வொரு அறையிலும் ஒவ்வொரு மூலையிலும் ஏதாவதொரு விளையாட்டுச் சாமான் உருண்டு கிடக்கும். தாவித் தாவிச் செல்லும் குரங்கும், 'கீச் கீச்' சென்று கத்தும் கிளியும், ஜாலரா கொட்டும் கரடியும், நீலக் கண்ணாடிக் கண்களால் மிரண்டு விழிக்கும் முயலும் வீட்டில் குடியேறின. பொம்மைகளின் வசீகரத்தில் மயங்கிக் குழந்தை வாய் விட்டுச் சிரிக்கும்போது நாங்கள் மனக்கவலை மறந்தோம். முத்து உதிரும் சிரிப்பைக் கண்டு, தேன் சிதறும் வாயைக் கண்டு நாங்கள் தேன் குடித்த நரிகளானோம். அதனுடைய கன்னக் குழிப்பினில் எங்கள் எண்ணங்கள் சுழலக் காலமும் சுழன்றது.

ஒரு வாரத்துக்கு முன் ஒரு நாள் படுக்கையில் படுத்த எனக்கு இன்று போல் அன்றும்



மனையறத்து இருட்பகையை
மாய்த்துவிடும் தீபம்!

மானிடர்க்கு இதயத்தே
மாண்பளிக்கும் தீபம்!

சனிபகவான் அமர்ந்திக்கும்
சாத்விகத் தீபம்!

சநிதநிசரி சங்கீதச்
சாரம்தரும் தீபம்!

வள்ளியோடு கொஞ்சிப்பேசி
வாழ்வுகண்ட தீபம்!

வானவர்க்கும் வண்டமிழ்க்கும்
வாரிசான தீபம்!

துள்ளியோடும் மங்கையர்க்குத்
துணையாகும் தீபம்!

தொடர்ந்துவரும் கார்த்திகையின்
தூதுசொல்லும் தீபம்!



தூக்கம் வரவில்லை. தலையணையில் சாய்ந்தவாறே அருகில் படுத்திருக்கும் குழந்தையையும் அதை அரவணைத்துத் துயிலும் கமலாவையும் நோக்கினேன். திடீரென்று என் மனத்துள் ஒரு சலனம். குளத்தில் கல்லைப் போட்டால், 'களுக்' என்ற சத்தத்துடன் சிறு அலை எழுப்புமே, அது போல ஓர் அசைவு ஏற்பட்டது. அந்தச் சலனத்தின் அலைகள் விநாடிக்கு விநாடி நிமிடத்துக்கு நிமிடம் அதிகமாகிப் பெரிதாகிக் கொண்டிருந்தன.

அவர்களையே இமையாமல் பார்த்துக்கொண்டிருந்தேன். அவர்களிடமிருந்து என் கண்களைத் திருப்பும் சக்தி என்னிடமிருந்து நழுவிச் சென்று கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் என்னுள் கிளர்ந்தெழுந்த வேதனை என் உடல் நரம்புகளையெல்லாம் உலுப்பியது. அது ஒரு வேதனை என்று சொல்வதற்கில்லை. ஆனால் அதில் இன்பம் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். இதே மாதிரி அனுபவம் அடிக்கடி ஏற்பட்டது. அத்தகைய அனுபவம் என் கண்களைத் திறந்து விட்டது. குழந்தையின் மேலுள்ள பாசத்தினால் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்த உணர்ச்சிகளை ஒடுக்கிச் சரியான பாதையில் என்னை உந்தித் தள்ளியது. ஒரு சிறு உபகாரம் செய்து கொடுத்த பக்கபலத்தில் எக்கச்சக்கமான கோரிக்கையின் மூலம் லக்ஷ்மியின் குழந்தையை வீட்டில் வைத்துக் கொண்டிருப்பதை நினைத்துப் பார்க்கும் போது குற்றமிழைத்து விட்ட உணர்ச்சிதான் குறுகுறுக்கிறது. குழந்தையின் ஒவ்வொரு செய்கையையும் நோக்கும் போது கொடுத்துவைத்த சாமானைத் திருட்டுத்தனமாக அனுபவிப்பது போலத் தோன்றுகிறது.

குழந்தை எங்களைக்கண்டு ஆத்மார்த்தமாகச் சிரிக்க வில்லை. எங்களுடைய கோமாளித்தனமான கொஞ்சல்களினாலும் சுற்றிலும் பரப்பியிருக்கும் விளையாட்டுப் பொம்மைகளினாலும் அதைச் சிரிக்க வைக்கிறோம் நாங்கள். கமலாவின் முகத்தில் துள்ளும் குதூகலத்தையும், மனத்தில் பொங்கி வழியும் இன்பத்தையும் பார்க்கும் போது வேதனை ஏற்படுகிறது. லக்ஷ்மி அடைய வேண்டிய குதூகலத்தையும், லக்ஷ்மிக்கு உரிமையாக வேண்டிய இன்பத்தையும் கமலா அனுபவிக்கிறாள். அவளுடைய உரிமையையும் சந்தோஷத்தையும் நாங்கள் பிடுங்கிக் கொண்டது ஒரு துரோக மில்லையா? குழந்தையைக் கொடுக்கும் போது அவள் முகத்தில் மின்னலெனத் தோன்றி மறைந்த தயக்கத்தின் நிழல் என் கண்முன் தோன்றுகிறது. 'கேட்'

# சிந்தனைக்கு உணவு

ஆரோக்கிய உணவுபற்றிய நூல் ஒன்றில், படித்து நிறுத்திய பக்கத்திற்கு அடையாளமாகச் செருகியிருந்தது அந்தப் பழைய மூன்றும் வகுப்பு ரெயில்வே டிக்கெட்டு. அதை அகற்றிக்கொண்டு, விட்ட இடத்திலிருந்து படிக்கத் தொடங்கிய என் மகள் தங்கம் திடீரென, "அப்பா இதென்ன, கரையான்போலிருக்கே!" என்ருள். ஊர்ந்து வெளியேறிக் கொண்டிருந்தது ஒரு ஜந்து.

புழங்கும் புத்தகங்கள் நிறைந்திருந்த சுறுசுறுப்பான எனது அலமாரியில் இதுதான் முதன்முதலாக நுழைந்திருந்த அழையா விருந்தாளி. ஏதோ, இடமாருட்டமாக சில சமயம் அலமாரியில் கம்பருக்குப் பக்கத்தில் கார்ல்மார்க்ஸும், இப்ஸனை ஒட்டி இளங்கோவடிகளும், இசை நூலை யடுத்து யோகாசனப் புத்தகமும் உறவாடுவது உண்டே தவிர, தூசிக்கும் பூச்சிக்கும் அந்த அலமாரி என்றுமே வரவேற்பு அளித்தது கிடையாது.

போன மாதம் என் பாட்டனரின் உபயமாக சில பழைய நூல்கள் எனது அலமாரியைத் தேடி வந்தன. அப்புத்தகங்களில் அடைபட்டிருந்த தூசி தும்பு, பூச்சி பொட்டு, அவற்றின் முட்டைகள் முதலியவற்றை அடியோடு அகற்றிய பிறகே புத்தகங்களை அலமாரி யேற அனுமதித்தேன். ஆனால் என்னையும் மீறி நுழைந்துவிட்டதுபோலும் ஒரு முட்டை! ......................

★ ★ ★

என் பாட்டனரின் புத்தகங்கள் மட்டுமென்ன, ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, தீராப் பசியுடன் கணக்கற்ற நூற் செல்வங்களைத் தின்றுவந்த இந்தக் கரையானின் பரம்பரை உணவுப் பழக்க வழக்கங்கள் அன்றைக்கு இன்று அணுவளவும் மாறவில்லை; பனைமரத்து ஓலைகளைப் பலகாரம் செய்த வாய் இன்று நாகுக்காகக் காகிதங்களைக் கபளீகரம் செய்து வருகிறதே தவிர, இலக்கிய ரஸனையோ, தராதர உணர்வோ அணுவளவாகிலும் அதற்கில்லை. சிந்தனைக்கும் சரி, வயிற்றிற்கும் சரி, உணவு தேடும்போது நுட்பமான அறிவறிந்த ரஸனையோடு தேர்வு காணும் மனிதவர்க்கத்திற்கும், செல்லினத்திற்கும் இடையே எத்தகைய மாறுபாடு! உண்ணும் உணவின் உண்மை மதிப்பை உணராத உதவாக்கரை ஜந்துவிற்கு உதாரணம் இந்தக் கரையானே!

★ ★ ★

ராமபாணப் பூச்சியின் பற்கள் என் பாட்டனரின் கம்பராமாயண நூலைப் பதம் பார்த்து நயமிருந்த பாடல்களில் சல்லடைக் கண்கள் குடைந்திருந்ததோடு, யுத்தகாண்டத்தை யுத்தகளமாக மாற்றியிருந்ததைக் கவனித்தேன்.

ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்ருன மணிமேகலையின் அச்சுப்பிரதியொன்றும் அதேமாதிரி பாதிக்கப்பட்டிருந்தது. அடிக்கடி என் விரல்கள் அப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டும்; கண்முன்னே சித்திரமாகப் படரும் அதன் கதை: ......... காதல் மேலிட்ட சோழ இளவரசன் உதயகுமாரன் பின்தொடருகிருன் மணிமேகலையை.........அவளோ துறவுக் கோலத்தில் உலவுகிருள் .........புரள்கின்றன பக்கங்கள்......... "இப் பிறவியில் என்னை மணக்க முடியாது, அடுத்து வரும் பிறவிகளிலே உங்களை அடைவேன்!" என்று உறுதிகூறிச் செல்கிருள் அவள் ......... மணிபல்லவத் தீவிற்கு. .......... மேலும் சில பக்கங்கள்......... தீவிலிருந்து கிடைக்கும் அமுதசுரபியை ஏந்திய வண்ணம் பசித்தோருக்கு உணவளிக்கிறது மணிமேகலையின் கைகள் ......... உதயகுமாரனின் காதற் பசிக்கு அதிருஷ்டமில்லை, மக்களின் வயிற்றுப் பசிக்கே அதிருஷ்டம்!...இந்தக்

கட்டத்தில் கறையானின் கோரப் பசி ஆரம்பமாகி அடுத்துவரும் பக்கங்கள் ஜீரணமாகிவிட்டன!

அதற்கப்புறம் மணிமேகலையின் வரலாறு என்னவாயிற்று? ஆம், உதயகுமாரனுக்குக் கொடுத்த வாக்கை அவள் தவறவில்லை. எங்கள் வீட்டுச் சமையலறைப் பக்கம் வந்து பார்ப்பவர்களுக்குப் புரியும். நல்லதொரு முகூர்த்தத்திலே என்னை மணந்துகொண்டு இப் பிறவியின் இல்லறப் பொறுப்பை ஏற்று நடத்துகிறாள் அம் மங்கையர்க்கரசி! ஆனால் ஒன்று: அள்ள அள்ளக் குறையாத அந்த அமுதசுரபி இன்று எங்களிடம் இல்லையே என்று நாங்கள் கவலைப்படுவதில்லை. நமது



புண்ணிய பூமி விளைகிறது. அறுசுவை உணவு ஆக்கிப் பரிமாற அவளுக்கு சொல்லியாதரவேண்டும்? திருவள்ளுவரின் பொருட்செறிவிலும் கம்பரது கவிதை நயத்திலும் ஆழ்ந்து, சிந்தனைக்குச் சத்துணவு சேகரித்துவரும் எனக்கு, உண்ணும் உணவின் உண்மை மதிப்பை உணர்ந்து தயாரித்த உயரிய சத்துணவை உடலுக்கு வழங்கிவருகிறாள் அவ் வுத்தமி. இதன் பயனை எங்கள் அன்றாட உணவிலே புரதப் பொருள்கள், மாவுப் பொருள்கள், உலோகங்கள், வைட்டமின்கள்.........

★ ★ ★

எங்களைப்பொறுத்தவரையில் வைட்டமின் என்பது ஏட்டுச்சுரைக்காயாகவோ வெறும் அகராதிப் பதமாகவோ இருந்துவிடவிட்டதில்லை. பால், தானியங்கள், காய்கறிகள் மூலமாக மட்டுமின்றி அவற்றைச் சமைக்கப் பயன்படுத்தும் கொழுப்பின் மூலமாகவும் உடம்புக்கு வைட்டமின்களைக் கிடைக்கச் செய்கிறாள் அவள். புத்தம்புதிய தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கப்படும் 'டால்டா' வனஸ்பதியையே சமையலுக்கு உபயோகிக்கிறாள்.

கண்களுக்கும் சருமத்திற்கும் பற்களுக்கும் எலும்புகளுக்கும் வலிவுதரும் வைட்டமின்களான 'ஏ' 'டி' இரண்டும் 'டால்டா'வில் சேர்க்கப்பட்டுள்ளதால் அது ஊட்டமளிக்கும் உணவாகவும் விளங்குகிறது.

வீட்டுச் சாமான்களைத் தூசி படியாமல் பளிச்சென்று வைத்துக்கொள்வதில் எவ்வளவு கருத்து உண்டோ அதே அளவுக்கு, சமையல் கொழுப்பைத் தேர்ந்தெடுப்பதிலும் உண்டு; தூசி படிய, ஈ மொய்க்க விற்கும் பொருள்களை நாங்கள் வாங்குவதில்லை. அதனால்தான் நாங்கள் 'டால்டா' வாங்குகிறோம். பேரீச்ச மர அடையாளமிட்ட, ஸீல் செய்த டின்களில் கிடைக்கும் 'டால்டா' புதுமையும் தூய்மையும் மாறாமல் சமையலுக்குக் கிட்டுகிறது.

★ ★ ★

சக்தியும் ஊக்கமுமே உருவான இவ் வாழ்க்கைக்கேற்ப, சமையலறை அலமாரியிலுள்ள கரண்டிமுதல் ஆரோக்கிய உணவுபற்றிய நூல்கள் இடம்பெறும் புத்தக அலமாரிவரை எங்குமே துருவோ தூசியோ ஆக்கிரமிக்க அனுமதித்தது கிடையாது. அதோ என் மகள் தங்கத்தின் கரத்தில் இடம்பெறும் ஆரோக்கிய உணவுபற்றிய அந்த நூல், சமையல் கலையே தாயிடமிருந்து பெண்ணுக்கு வாழையடி வாழையாக வழிவழி வரும் அழகை எடுத்துக்காட்டுகிறது.

டைத் தாண்டும் போது லக்ஷ்மி திரும்பிப் பார்த்ததற்கு இப்போது பொருள் பல தோன்றுகிறது.

இரவு முழுவதும் வான வெளியைப் பார்த்துக் கொண்டு சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கிறேன். சந்திரன் அடிவானத்தில் மறைகிறது. என்னுள் சாந்தி ஒளி பரவுகிறது. மனநிறைவுடன் பெருமூச்சு விடும்போது கொழுவிய வளைக்கரமொன்று பின்னால் தலைக்குமேல் கவிந்து நெற்றியை ஸ்பரிசிக்கிறது. சூடேறிப் போன தலைக்கு அந்தக் குளிர் ஸ்பரிசம் இதத்தை அளிக்கிறது.

''காலைப் பனி உடம்புக்கு ஆகாதே. உள்ளே வாருங்கள்!''

நான் எழுந்து அவளைத் தொடர்ந்து உள்ளே செல்கிறேன்.

''ராத்திரி முழுதும் தூங்காமல் என்ன யோசிச்சிண்டிருந்தேளாம். ஆகாசத்தைப் பார்த்துண்டு? ரெண்டு தடவை வந்தேன் நீங்க கவனிக்கல்லே. என்னிடம் சொல்லக் கூடாதா?'' கட்டிலில் படுத்துக் கொண்டதும் கமலா கேட்டாள். பக்கத்தில் கண் வளரும் குழந்தையின் மென் கன்னங்களை நான் மெதுவாக முத்தமிட்டேன். ''கமலா! இந்தக் குழந்தையை நாம் வைத்துக் கொண்டிருப்பது அழகல்ல. லக்ஷ்மியிடம் அதைக் கொடுத்து விடு!''

அவள் வதனம் தொட்டாற் சுருங்கி போல் சுருங்கியது.

''ஏனும் இப்டீன்னு?''

'இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை, கமலா எனக்கு. எனக்கென்னமோ குழந்தையையும் தாயையும் பிரிப்பது சரியென்று தோன்றவில்லை. அதனால் தான் இரவு முழுவதும் தூங்கமுடியவில்லை!''

சிறிது நேரம் கசப்பான மௌனம் நிலவியது. பிறகு அவள் சொன்னாள்: ''உங்களுக்கு விருப்ப மில்லாத காரியத்தைச் செய்யும் அளவுக்கு நான் சுயநலக்காரி யல்ல!''

* * *

மறுநாள் நான் வேலை முடிந்து திரும்பும் போது மணி எட்டாகி விட்டது. 'இன்று வீட்டில் நுழையும் போது குழந்தையின் மழலை மொழி என்னை வரவேற்காது. மறுபடியும் பழைய அந்தகாரம் சூழ்ந்து விடும். ஆனால் மனத்தில் நேற்றுவரையில் அழுத்திக் கொண்டிருந்த பளு இன்று இல்லை.'

வீட்டைச் சமீபிக்கும் போது எதிர்ச் சாலையில் இருவர் பேசிக் கொண்டு சென்றது என் காதில் விழுந்தது.

''குழந்தையை ஏன் கொடுத்து விட்டார்கள்?''

''தெரியவில்லை. நான் நினைத்தேன்.....''

''என்ன?''

'வீட்டில்தான் நாலு சேருகிறதே, இந்த ஒண்ணாவது நல்ல இடத்தில் வளரட்டும் என்று! நமக்கும் பாரம் குறையுமே. இதெல்லாம் இல்லை என்று யார் அழுதார்கள்?''

நான் சட்டென்று திரும்பிப் பார்த்தேன். லக்ஷ்மியும் அவளது கணவனும் தான் குழந்தையுடன் நடந்து கொண்டிருந்தார்கள். என்னைப் பார்க்கவில்லை போலும்!

இவர்கள் பேச்சைக் கேட்டு என் மனம் அதிர்ச்சியுற்றது. நான் கற்பித்துக் கொண்ட தாயுள்ளம் படைத்த லக்ஷ்மிக்கும் இந்த லக்ஷ்மிக்கும் எவ்வளவு வேற்றுமை?

சிருஷ்டி தேவன்தான் என்னை வஞ்சித்து விட்டான் என்று நினைத்தேன். என் கற்பனையுமா என்னை வஞ்சிக்க வேண்டும்?

# தமிழ்கூறும் நல்லுலகம்

ஷில்லாங்கில் உள்ள தென்னிந்திய சங்கத்தின் ஆதரவில் இந்தியப் பிரதம மந்திரி அஸ்ஸாம் வெள்ள நிவாரண நிதிக்காகக் குமாரி நந்தினி நடன விருந்தளித்தார். இச்சிறுமி அஸ்ஸாம் ராஜ்ய தொழில் டைரக்டர் திரு சீனிவாசனின் புதல்வி. நடனமாடிய நந்தினியின் நடனத்தை அஸ்ஸாம்வாசிகள் மிகவும் ரஸித்துப் பாராட்டினர்.

*

ரூர்க்கி தென்னிந்திய சமுதாயத்தின் சார்பாகக் 'குழந்தைகள் தினம்' நவம்பர் 22ம் தேதி காரிசன் பள்ளியில் சிறப்பாக நடந்தது. சுமார் எழுபது குழந்தைகள் பங்கெடுத்துக் கொண்டனர். மட்டக் குதிரை சவாரி, பாட்டு, பேச்சு, நாட்டியம், நாடகம் இவைகளை இன்பத்துடன் அநுபவித்தும், பங்கெடுத்துக் கொண்டும், தங்களை மறந்த நிலையில் குழந்தைகள் பொழுதை இனிமையாகக் கழித்தனர். குழந்தைகள் நடித்த அந் நாடகங்களில் பாரதி எழுதிய 'ஆங்கிலேயனும், தேசபக்தனும்' பாராட்டுக்குரியது.

செம்பூரிலுள்ள, பம்பாய்த் தமிழ் மன்றத்தின் ஆதரவில் திரு எஸ். நாராயணசுவாமி தலைமையில், 'விடணன் சிறந்த இலட்சிய வாதியா?' அல்லது 'பரதன் சிறந்த இலட்சிய வாதியா?'' என்ற தலைப்பில் விவாத அரங்கு ஒன்று சமீபத்தில் நடைபெற்றது. பம்பாயிலுள்ள பல இலக்கிய ஸ்தாபனங்கள் அரங்கில் பங்கெடுத்துக் கொண்டன. குழுமியிருந்த பெருவாரியான அன்பர்கள் ''விடணனே சிறந்த இலட்சியவாதி'' என்று முடிவு செய்தனர்.

செயலாளர் கவிமணிதாசன் அவர்கள் நன்றி கூற, கூட்டம் இனிது முடிவுற்றது.

★

நாகபுரி பைன் ஆர்ட்ஸ் ஸொஸைட்டியின் ஆதரவில், மாதுங்கா நாடகக் குழுவினர் 'உன்னையே நீ எண்ணிப் பார்' 'வீரபாண்டியக் கட்டபொம்மன்.' 'பிரஸிடெண்ட் பஞ்சாட்சரம்' முதலிய மூன்று தமிழ் நாடகங்களை நன்றாக நடித்தனர். இந் நாடக விழாவை மத்திய அரசாங்க கலாசார மந்திரி ஹுமாயூன் கபீர் துவக்கி வைத்தார்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor, T. Sadasivam.

பளபளப்பான
நீண்ட கரும்
கூந்தலழகுக்கு...

# இராஸ்மிக்

பர்ப்யூம்ட்

## கோகனட் ஹேர் ஆயில்

இப்பொழுது அழகான இப் புதுமாதிரி சீசாவில்
ரோஜா அல்லது மல்லிகை
மணத்துடன் கிடைக்கிறது.




ECHO. 4A—50 TM

லண்டனிலுள்ள இராஸ்மிக் கோ. லிட்., சார்பாக
இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

Registered as a Newspaper in Ceylon
REGISTERED No. M. 4392

# நாளொரு மேனியாக...

சரும
அழகினை
ஓங்கச்
செய்வது

## ரெக்ஸோனா சோப்

ரெக்ஸோனாவில் 'கேடில்' என்ற
விசேஷப் பொருள் அடங்கியுள்ளது;
எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த
விசேஷத் தைலமே 'கேடில்'
என்பது. அந்த எண்ணெய்கள் உங்கள்
சருமத்திற்கு ஊட்டமளிப்பவை.

உங்கள் எழிலுக்கு . . .
ரெக்ஸோனா

